

# நேஷனல்
## அண்டு
# கிரிண்ட்லேஸ்
# உங்கள் பணியில்



நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸின் விரிவான பாங்கிங் தொழில் இப்பொழுது இந்தியாவில் மட்டும 40 கிளை ஸ்தாபனங்கள் மூலம் பணியாற்றுகிறது ஒவ்வொரு கிளை ஸ்தாபனமும் எல்லாவிதக் கணக்குகளையும — அவை சிறியதாயிருந்தாலும் அல்லது பெரியதாயிருந்தாலும் — கவனிக்கும் நிலையிலிருக்கிறது.

உங்கள் பகுதியிலுள்ள கிளை அலுவலகத்திற்குச் சென்று பாருங்கள் அங்கு திறமையும், மரியாதையான கவனிப்பும் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன உங்களுடைய பாங்கிங பிரச்சினை எப்படிப் பட்டதாக இருந்தாலும் சரி, நேஷனல் அண்டு கிரிண்ட லேஸ் ஆலோசனையைப் பெறுங்கள்.

## நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்க் லிட்.

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது
(அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)
*தலைமை ஆபீஸ்* : **26, பிஷப்ஸ் கேட், லண்டன், இ. ஸி. 2**

**கிளைகள்: சென்னை:** 3, நார்த் பீச் ரோடு, 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு. (லாயிட்ஸ் கிளை) 6, அரமனைக்காரத் தெரு 158, மவுண்ட் ரோடு, **தூத்துக்குடி:** 44, பீச் ரோடு **ஹைதராபாத்:** அபித் ரோட்

NG8/50/D TAM

சுபகிருது, மார்கழி 22உ

# கல்கி

ஜனவரி 6உ 1963



## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22 | இதழ் 23

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# நீதித் துறையில் அநீதி

மத்திய சட்ட மந்திரியே அட்டர்னி ஜெனரலாகவும் இருக்க வேண்டும் ; தனியாக அட்டர்னி ஜெனரல் என்று ஒருவர் இருக்கும் இன்றைய வழக்கத்தைக் கைவிட வேண்டும் ; அட்டர்னி ஜெனரல் பதவி என்பது ஆங்கில ஆட்சியின் ஒரு 'சேஷம்'தான் என்று பிரதமர் அவர்கள் பேசியதை இந்த நாட்டில் உள்ள விஷயம் தெரிந்தவர்கள் எல்லாரும் கண்டித்தார்கள். இப்படி மாறுதல் செய்வது அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு விரோதமாகும் என்று எடுத்துக் காட்டினார்கள். அப்போது ராஜாஜி எழுதினர் : 'சட்ட விரோதமானதென்றால் என்ன ? சட்டத்தையே தங்களுக்கு வேண்டியவாறு மாற்றிக் கொள்வது தான் இன்று சகஜமாகி விட்டதே' என்று. ராஜாஜி எழுதியது உண்மையாகிவிட்டது. அரசியல் நிர்ணயச் சட்டத்தைத் 'திருத்த' எண்ணியிருக்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள்.

அரசியல் நிர்ணயச் சட்டத்தில், அட்டர்னி ஜெனரல் நீதித் துறைப் பிரச்னைகளில் அரசாங்கத்துக்கு யோசனைகள் கூறவேண்டியவர் என்று கூறியிருக்கிறது. சட்ட மந்திரி அரசாங்கத்திலேயே ஒரு பகுதியானவர். அவர் செய்யும் எந்தக் காரியத்துக்கும் அரசாங்கம் முழுவதும் பொறுப்பு ஏற்கிறது. எனவே அவரே அரசாங்கத்துக்கு வெளியிலிருப்பவர் போல் அதற்கு யோசனை கூறுவது இயலாத காரியம். இதைப் பலர் எடுத்துக் காட்டினார்கள். அதோடு அரசாங்கத்தின் முடிவுகளுக்கு 'ஆமாம் பூசாரி' போடாமல் சுதந்திரமாக யோசனை சொல்லுபவர் ஒருவர் வேண்டும் என்பதே அரசியல் நிர்ணயச் சட்ட ஷரத்தின் உட் கருத்து என்றும் கூறினார்கள். மந்திரி சபை நியமனத்துக்காகச் சட்டத்தில் எப்படித் தனி விதி இருக்கிறதோ அதே போல அட்டர்னி ஜெனரல் நியமனத்துக்கும் தனி விதியும் இருப்பதால், மந்திரியும் அட்டர்னி ஜெனரலும் ஒருவராக இருக்கக் கூடாது என்று கூறினார்கள். சட்ட மந்திரி உள்ளிட்ட மந்திரி சபையினரின் யோசனைகள் எப்படி ராஷ்டிரபதியால் ஏற்கப்படுகின்றனவோ அதே அளவுக்கு அட்டர்னி ஜெனரலின் யோசனையை மந்திரி சபை மதிக்க வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டினார்கள். ஆனால் ஆட்சியாளர்களோ சட்ட ஷரத்துக்கே புது வியாக்கியானம் செய்கிறார்கள். அரசாங்கம் செய்வதற்கெல்லாம் தலையாட்டவே அட்டர்னி ஜெனரல் ஏற்பட்டிருக்கிறார் என்று எண்ணுகிறார்கள். அவர் அப்படித்தான் செய்து வந்திருக்கிறார் என்று அநாகரிகமாகவும் சொல்லுகிறார்கள். ஆனால் அதையெல்லாம் பற்றி இப்போதென்ன பேச்சு ? சட்ட ஷரத்தையும் மாற்றி விடுவதில் பிடிவாதமாக இருக்கச் சர்க்கார் முற்பட்டுவிட்டதே !

சட்ட மந்திரியே அட்டர்னி ஜெனரலானால் விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படும். சட்ட மந்திரி சுப்ரீம் கோர்ட்டுக்கு அடிக்கடி ஆஜராகி வாதப் பிரதிவாதங்கள் செய்ய வேண்டியதாகும். அதனால், இன்று பாரபட்சமில்லாமல் தீர்ப்புக் கூறிவரும் நீதிபதிகள் எத்தகைய கூச்சத்துக்கு ஆளாவார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்! இன்று அட்டர்னி ஜெனரலுக்குத் தேவைப்படும் அவ்வளவு வாதத் திறன் சட்ட மந்திரிக்குத் தேவையா, அத்தகைய தேர்ந்த வழக்கறிஞர் மந்திரி பதவியை ஏற்பாரா என்பதே சந்தேகம். மத்திய சர்க்காரின் இந்த ஏற்பாட்டையொட்டி ராஜ்ய சர்க்கார்களிலும் அட்வகேட் ஜெனரலும், சட்ட மந்திரியும் ஒருவராகும் அசம்பாவிதம் நிகழுமோ என்றும் சிலர் அஞ்சுகிறார்கள்.

அட்டர்னி ஜெனரல் அட்வகேட் ஜென ரல் ஆகியோருடைய சவுரவமும் இனி முன் போல் இருக்க முடியாது.

பிரிட்டிஷ் ஆட்சியின் 'சேஷங்கள்' எவ்வளவோ இந்தியாவில் உள்ளன. அவற்றையெல்லாம் நீக்குவது இயலாத காரியம்; அவசியமுமற்ற காரியம். இப் போது எடுத்துக் கொண்டுள்ள சேஷ ஒழிப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டால் நம் சர்க்கார், சர்வகலாசாலை, நீதிமன்றம், அரசியல் சட்டம் இவற்றின் அமைப்பிலேயே எவ்வளவோ அம்சங்களை நீக்க வேண்டி ஏற்படும். சர்க்கார் தான்தோன்றித்தனமாகச் செல்லாமல் ஜனநாயக மரபுகளுக்கு உட்பட்டுச் செயலாற்ற உதவும் எதுவும் வெறும் சேஷமாகாது.

# நல்லுறவு காணவேண்டும்

இந்தியப் பிரதிநிதிகளும், பாகிஸ்தான் பிரதிநிதிகளும் ராவல்பிண்டியில் கூடிப் பேசினார்கள்; மீண்டும் பேசப் போகிறார்கள். இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் உறுதியான நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ளுவதே இந்தப் பேச்சு வார்த்தைகளின் இலட்சியமாகும். இவை பலித்து இரு நாடுகளுக்கும் பயனளிக்க வேண்டுமென்று விரும்பாதார் இல்லை.

சீன ஆபத்தின் முழு உக்கிரமும் நமக்கு ஒருவாறு புரிந்து விட்டது. இந்த நிலையில் இந்தியாவின் எல்லைப்புறத்திலேயே சீனாவுக்குப் பதிலாக மட்டுமின்றி பாகிஸ்தானுக்கு எதிராகவும் படைகளை வைத்துப் பாதுகாப்பதென்றால், அதைவிடத் தேசத்துக்குத் துர்ப்பாக்கியம் எதுவும் கிடையாது. எனவே, பாகிஸ்தானுடன் நட்பு பூண்டு, நம் ராணுவ கவனத்தை எல்லாம் சீனாவிடமே ஒருமுகப்படுத்த வேண்டியது தவிர்க்க முடியாத விஷயமாகி விட்டது.

சீன ஆபத்து நமக்கு மட்டுமில்லை; பாகிஸ்தானுக்கும் உண்டு. தற்போதைக்கு இந்தியாவிடமிருந்து பாகிஸ்தானைப் பிரிப்பதற்காகச் சீனா வைக்கும் கண்ணிகள் எதிர்காலத்தில் பாகிஸ்தானுக்கு அபாயமாக முடியும். ஆனபடியால் இந்தியாவும் பாகிஸ்தானும் நேச நாடுகளாவது இரண்டு நாட்டுக்குமே மிக மிக அவசியமாகும்.

இந்தச் சூழ்நிலையில்தான் ராவல் பிண்டியில் பேச்சு வார்த்தைகள் நடந்தன. மீண்டும் நடக்க இருக்கின்றன. என்றாலும் இரண்டு நாடுகளுக்கிடையேயும் இன்று சந்தேகங்களும், அவநம்பிக்கைகளும் நிலவுவது விசனிக்க வேண்டியதாகும். அவ்வப்போது, இரு நாட்டுத் தலைவர்களும் இணக்கமான மனப்பான்மையுடன் பிரச்னையை விவாதிக்கப் போவதாகச் சொல்லி வருவது சற்று நம்பிக்கை ஊட்டுகிறது.

'எந்த ஒரு நாடும் அதனுடன் நேசமாக இல்லாத வேறொரு நாடு எல்லாத் தீமைகளுக்கும் ஒரு மூர்த்தியாகி விடுவதாகவே எண்ணுகிறது. அதன் தலைவர்கள் செய்வது எல்லாம் தவறு. அந்நாட்டு மக்கள் சொல்வது எல்லாம் அநீதி என்று நினைக்கிறது. தான் சொல்லுவதே சரி என்று எண்ணுகிறது. அந்த மற்ற நாடும் இந்நாட்டைப் பற்றி அதே போலத்தான் நினைக்கிறது. எல்லா நாட்டிலும் இருப்பவர்கள் ஒரே போன்ற மக்கள் தான் என்பது மறந்தே போய் விடுகிறது. ஏதோ ஒரு குறிப்பிட்ட நாட்டைச் சேர்ந்த மக்கள் எல்லோருமே தீயவர்கள் என்று எண்ணப்படுகிறது. அப்படி நினைக்காவிடினும், தனக்கு விரோதமாக உள்ள நாட்டின் மக்கள் நல்லவர்களே என்றும் அவர்களைத் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் தலைவர்கள் அவர்களைக் கெடுப்பதாகவும், அந்தத் தலைவர்கள் வகுக்கும் கொள்கைகள் யாவுமே அநீதமானவை என்றும் ஒவ்வொரு நாடும் நினைக்கிறது. தங்கள் நாட்டு மக்களைப் பற்றியும், தலைவர்களின் கொள்கைகளைப் பற்றியும் எதிராளிகள் இப்படியேதான் எண்ணுவார்கள் என்பதை யாரும் நினைத்துப் பார்ப்பதில்லை.' அமெரிக்க ருஷிய உறவுபற்றி இவ்வாறெல்லாம் பேராசிரியர் ஃப்ராங்க் என்பவர் எழுதியிருக்கிறார். இன்று இந்தியா — பாகிஸ்தான் உறவைப் பற்றி எண்ணுகையில் அதுதான் நினைவுக்கு வருகிறது. இந்த மாயை தகர்ந்து இரு நாடுகளும் தங்கள் கொள்கைகளைப் பட்சபாதமின்றி அலசிப் பார்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு கண்டு, இரு நாடுகளிலும் வாழ்பவர்கள் அந்நியோந்நிய பாவத்துடன் பிரச்னைக்குச் சமரஸமாக முடிவு காண வேண்டும்.

இந்தியாவும் பாகிஸ்தானும் சமீப காலம் வரையில் ஒரு நாடாக இருந்தவை. இரு நாட்டு மக்களும் சகோதரர்களாக வாழ்ந்தவர்கள். இனியும் நாம் நேசம் கொள்வது சாத்தியமே. அவ்வாறு நிகழ ஆண்டவன் அருள்வானாக.









சென்ற மாதம் 20வையிலிருந்து 31வ. வரை பம்பாய் பாரதிய வித்யாபவனத்தின் வெள்ளி விழா சிறப்பாக நடைபெற்றது. 1. விழாவைத் தொடங்கிய ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களை வித்யா பவனத் தலைவர் முன்ஷியுடனும்ராஜாஜியுடனும் காண்கிறீர்கள். 2. பட்டமளிப்பு விழாவுக்கு மொரார்ஜி தேசாய் தலைமை தாங்கினார். 3. 'நமது பண்பாடு' என்றதலைப்பில் பேருரைகள் நிகழ்த்துவதற்காகப் பம்பாய் சென்ற ராஜாஜியை முன்ஷி வரவேற்கிறார். 4. ராஜாஜியின் முதல் நாள் உரைக்கு ஸ்ரீமதி விஜய லக்ஷ்மி பண்டிட் தலைமை வகித்தார். 5. தெய்வ வழிபாடு முறை பற்றி சம்பூர்ணனந்த் பேருரைஆற்றுகிறார். 6. ராஜாஜியின் பிரசங்கத்துக்கு இரண்டாம் நாள் தலைமை தாங்கிய ஹுமாயூன் கபீர். 7. விழா நிகழ்ச்சிகளைக் கண்டு களித்த சபையினர்.



# மணிவண்ணன் எழுதும்

## புதிய சமூக நாவல்

இந்த உலகத்தில் நிரம்பியிருக்கும் வசீகரங்களை மட்டுமே தேடி எழுதிக் கொண்டிருப்பது நியாயமான இலக்கியஉணர்ச்சியாகாது. வசீகரங்களும் குரூரங்களும் கலந்ததே வாழ்க்கை. வாழ்க்கையில் இவை உண்டு. ஆகவே, கதையிலும் இவை உண்டு. சூழ்நிலையும் பழகுகிற மனிதர்களும் அவர்களின் வலிவு நலிவுகளும் சேர்ந்துதான் ஒருவனுடைய வாழ்க்கை. தனியாக இருந்து சிந்திக்க முடியும். ஆனால் சமூகத்தோடு பிணைந்து பலரோடு கலந்துதான் வாழ முடியும். பூமியில் ஆழமாக வேரோடிய செடிகளைப் போல் வாழ்க்கையில் கால்ஊன்றி நின்று, கதையாக வளரும் தத்ருபமான கதாபாத்திரங்களை இந்த நாவலில் நீங்கள் அடுத்த வாரத்திலிருந்து சந்திக்கப் போகிறீர்கள்.

— மணிவண்ணன்

# பொன் விலங்கு

கல்கி

பொங்கல் மலரில் ஆரம்பமாகிறது





அடுத்த இதழில்

# ஸ்ரீஹரி வைத்தியம்

ஆரம்பமாகிறது

## 'கல்கி' பொங்கல் மலரில்:

**கல்வெட்டில் காமகோடி** [redacted]

— என். ராமேசன் ஐ. ஏ. எஸ். அவர்களின் அரிய ஆராய்ச்சிக் கட்டுரை

**ஆய்ச்சியர் குரவை**

— சிலப்பதிகாரத்திலிருந்து ஒரு சிங்காரச் சித்திரமடல்

**பொங்கல் பலவிதம்**

— உலக நாடுகளின் உழவர் திருநாட்களைப் பற்றிய குறிப்புக்கள்

**உண்மை ஒன்றுதான்!**

— ரா. கணபதியின் நீண்ட கதை

**தி. ஜானகிராமன் ★ குட்டிகிருஷ்ணன்**

ஆகியோரின் சிறப்பான சிறுகதைகள்

**128 பக்கங்கள் — 30 காசுதான்!**

# என்ன சேதி?

## பிரதமரின் ராஜதந்திரம்

சென்ற மக்கட் சபைக் கூட்டத்தில் பிரதமர் நேருஜி சர்க்காரின் ராஜதந்திர உறவுகளைப் பற்றி மிகப் பெருமையோடு பேசினார். அதோடு ஆசாரிய ரங்கா போன்ற எதிர்க் கட்சித் தலைவர்களின் 'ராஜ தந்திரக் குறைவு' பற்றியும் நையாண்டி செய்தார்.

இப்படிப் பிறருக்கு உபதேசம் செய்யும் பிரதமர் தாம் எப்படி ராஜதந்திரத்தைக் கையாளுகிறார் என்பதைப் பார்க்கும் போது ஒருபுறம் வேடிக்கையாகவும் மற்றொரு புறம் வேதனையாகவும் இருந்து வருகிறது. சமீபத்தில் கிங்ஸ்லி மார்டின் என்ற பத்திரிகை நிருபர், ''பாகிஸ்தானின்பிரசாரத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது நேருஜி மிகுந்த கோபத்துடனேயே பேசினார்'' என்று எழுதுகிறார். இப்படிப் பேசினால் பாகிஸ்தான் மக்களிடையே எப்படி நல்ல எண்ணமும், நேசமும் வளர்க்க முடியும்?

கடும் ஹிந்து மனப்பான்மை கொண்ட கட்சி என்று கருதப்படும் ஜன சங்கத் தலைவர்கள்கூட பாகிஸ்தானுடன் நேச உறவை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதில் ஆர்வம் காட்டி வருகிறார்கள். நம் நாட்டு மக்கள் மட்டுமின்றி, ஜனநாயக வளர்ச்சியில் அக்கறையுள்ள அமெரிக்கா, பிரிட்டன் முதலிய நாடுகளும் இதில் ஈடுபாடு செலுத்தி வருகின்றன. பழையதையெல்லாம் மறந்து நேசப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

இப்படியொரு புது எழுச்சி எழுந்துள்ள போது, முஸ்லிம் மக்களின் உணர்ச்சிகளை மதிப்பவர் என்று பெயர் எடுத்த நேருஜி இம்மாதிரி பேசுவது மிகுந்த ஏமாற்றத்தை அளிக்கிறது.

## இது பாதுகாப்பு முயற்சியா?

மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ராஜ்ய சபை அங்கத்தினரான ஸ்ரீ ஏ. டி. மணி அவர்கள் பின்வருமாறு கூறியிருக்கிறார்:

> ''தங்களது கட்சியை எப்படிப் பலப்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்துடனேயே பாதுகாப்பு முயற்சிக்கான எல்லாப் பணிகளையும் பல காங்கிரஸ்காரர்கள் பார்க்கிறார்கள். எதிர்க் கட்சிக்காரர்கள் அவர்களுடன் சேர்ந்து பணியாற்றினால், அடுத்துவரும் தேர்தலில் தங்களுடைய செல்வாக்கு குறைந்து விடுமோ என்று பயப்படுகிறார்கள்.''

சென்னை ராஜ்யப் பாதுகாப்புக் கௌன்சிலில் சுதந்திரக் கட்சியின் உபதலைவர் திரு ஜி.கே. சுந்தரம் சேர்ந்து பணியாற்றத் தயாராயிருக்கிறார் என்று சென்னை சர்க்காருக்கு எழுதியும் அதனை வரவேற்பதாகவோ அங்கீகரிப்பதாகவோ சர்க்காரிடமிருந்து இதுவரை தகவல் வராததின் மர்மம் என்ன?

## கிருஷ்ண விஜயம்

பம்பாயில் ஸ்ரீ கிருஷ்ண மேனனுக்காக ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது; ஆனால் கடைசியில் மேனனை வர வேண்டாம் என்று கூறி விட்டார்கள்.

கேரளத்துக்கு மேனன் வருவதாக இருந்து, கேரள காங்கிரஸ் வரவேண்டாம் என்று சொல்லி விடவே, அந்தச் சுற்றுப் பிரயாணமும் ரத்தாகி விட்டது.

கடைசியில் தமிழகக் காங்கிரஸ் மட்டும் மேனனை வரவேற்று, சென்னைக் கடற்கரையில் ஒரு கூட்டம் நன்றாக ஏற்பாடு செய்து நடத்தியது.

இதில் விந்தை என்னவெனில், சனிக்கிழமை வரை மேனன் வருகையை ரகசியமாய் வைத்திருந்து ஞாயிற்றுக் கிழமைமாலை கூட்டம் நடத்தியதுதான்.

அவப் பெயருடன் மந்திரி சபையை விட்டு விலகியவர்களை எல்லாம் 'மகா புருஷர்'களாக்கும் பணியைத் தமிழகக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டிருப்பது போற்றத் தக்கதே.










மாவ் மீங்கான் கும்பனை

எருதுகள்
நுழையக்
கூடாது

ஆசிய
வெற்றி

# போகிற போக்கில்....

**சிட்டுக் குருவி**

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தாறில் சூயெஸ் பிரச்னை எழுந்தபோது பிரிட்டனின் பிரதமராக அந்தோனி ஈடன் இருந்தார். சர்ச்சிலுக்கு அடுத்த தலைவர் இவர்தான் என்று அந்தக் காலத்தில் எழுதுவார்கள். அயல்நாட்டு விவகாரங்களைக் கரைத்துக் குடித்தவர் இவர். காமன்ஸ் சபையில் ஈடன் எழுந்து அயல்நாட்டு விவகாரம் பற்றிப் பேசினால் சபையில் நிசப்தம் நிலவும். ஆளும் கட்சி ஆளாத கட்சி என்றில்லாது அனைவரும் அவரது பேச்சைக் கேட்பார்கள். அப்பேர்ப்பட்ட அரசியல் அறிவும், நாவன்மையும் கொண்டவர். இவையல்லாமல் நாகரிக புருஷர் என்றும் இவருக்குப் பிரக்யாதி உண்டு. ஈடன் கோட்டு, ஈடன் தொப்பி என்றெல்லாம் இவரது நடையுடைகளுக்கு மவுசு இருந்தது.

ஃ ஃ ஃ

இப்படியாகப் பேர் புகழோடு இருந்த ஈடன் ஒரு சிறு தவறு இழைத்தார். சூயெஸ் பிரச்னை எழுந்தபோது காமன்ஸ் சபையைக் கலக்காமல் கொள்ளாமல் இவர் யுத்தம் தொடுத்தார். இந்த அறிவிப்பு வந்ததும் காமன்ஸ் சபை கொதித்து எழுந்தது. 'மக்களின் பிரதிநிதியாக அமர்ந்திருக்கும் எங்களைக் கேட்காமல் எப்படி யுத்தம் தொடரலாம்?' என்று பாராளுமன்ற அங்கத்தினர்கள் கேட்டார்கள். இக்கேள்வி எழுந்த நேரத்தில் அமெரிக்காவும் ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டது. அதாவது பிரிட்டனைத் தாம் ஆதரிக்க முடியாது என்று அமெரிக்கர் கூறிவிட்டார்கள். இந்தச் செய்தி வந்ததும் பிரிட்டிஷ் மக்கள் ஈடன் 'அவசரப்பட்டு'க் காரியத்தைச் செய்து விட்டார் எனக் கண்டனம் தெரிவித்தார்கள். பிரிட்டிஷ் பத்திரிகைகளும் விடவில்லை. இதை அடுத்துக் கன்ஸர்வேடிவ் கட்சியில் முணுமுணுப்புக் கிளம்பியது. ஈடன் வெளியேறி விட வேண்டுமென ஒரு சாரார் கூறினார்கள். இவ்வாறு கூறியவர்கள் மைனாரிட்டியினர். எனினும் ஜனநாயகப் பண்பைப் பேணிப் பாதுகாக்கவேண்டும் என்று கருதிய ஈடன் உடனே ராஜிநாமா செய்து விட்டு வெளியேறினார். அன்று வெளியேறிய அவரைப் பற்றி இன்றுவரை செய்திகள் இல்லை. கன்சர்வேடிவ் கட்சியினர் அவரைத் திரும்ப மந்திரி சபைக்குள் 'நுழைக்க'ப் பிரயத்தனப்படவில்லை. அவரும் அரசியல் மறுபிரவேசத்துக்காக முயற்சி செய்யவுமில்லை. இது பிரிட்டிஷ் வரலாறு.

ஃ ஃ ஃ

ஈடன், கன்சர்வேடிவ் கட்சியின் முக்கியஸ்தராக இருந்தும் ஒரு சிறு தவறுக்காக இவ்வளவு பெரிய தண்டனையை அனுபவித்தார்.

திரு கிருஷ்ண மேனனைக் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவர் என்று கூற முடியாது. ஹோம்ரூல் காலத்தில் ஏதோ சேவை செய்தார். பிறகு லண்டனில் ஒரு புத்தகக் கம்பெனியில் ஆசிரியராக இருந்தார். ஒழிந்த நேரத்தில் இந்திய விடுதலைக்குப் பாடுபட்டார். அவ்வளவுதான்! எனினும் அவரை மந்திரியாக ஆக்கினார்கள். பாதுகாப்பு இலாகா அவர் வசம் விடப்பட்டது. 1962-ல்கூட ''ராணுவம் எவ்வித தாக்குதலையும் முறியடிக்கக் கூடிய நிலையில் இருக்கிறது'' என்று பேசினார். ஆனால் சண்டை என்று வந்ததும் என்ன ஏற்பட்டது என்பது தெரிந்த விஷயம்.

பொதுஜன எதிர்ப்புக் கிளம்பியது. பாராளுமன்றத்தில் இதன் எதிரொலி கேட்டது. பாராளுமன்ற காங்கிரஸ் அங்கத்தினர்களிடையேயும் முணுமுணுப்பு ஏற்பட்டது. திரு மேனன் ராஜிநாமா செய்தார். இந்த ராஜிநாமா ஏற்பட்டு ஒன்றரை மாதங்கள்கூட ஆகவில்லை. அதற்குள்ளாக அவரைத் திரும்பவும் மந்திரியாக்கும் முயற்சி நடக்கிறது.

நேபா, லடாக் முனைகளில் இன்று சண்டை இல்லை. சீனாக்காரன் நமக்கு நோட்டீஸ் கொடுத்து விட்டு ஊருக்குத் திரும்புகிறான். எனவே இனி ஆபத்தில்லை என்று நினைத்து இவரை மந்திரியாக ஆக்குகிறார்களா? அல்லது இவரைத் திரும்ப மந்திரியாக ஆக்கிவிட்டால், இவரது பழைய தவறுகள் பற்றி விசாரணை நடக்காது போகுமென எதிர்பார்க்கிறார்களா? அப்படி எதிர்பார்த்தால் ராஜ்ய சபையில் கொடுத்த வாக்குறுதி என்ன ஆவது?

ஃ ஃ ஃ

1940 மே மாதம். பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் ஒரு காரசாரமான விவாதம் நடக்கிறது. விவாதத்தில் எல்லாக் கட்சிகளும் பேதாபேதமின்றிக் கலந்து கொள்ளுகின்றன. நெவில் சேம்பர்லேன் பிரதமராக இருக்கிறார். இவரும் கன்சர்வேடிவ் கட்சிக்காரர்தான். இவர் மீது வந்துள்ள நம்பிக்கையில்லாத் தீர்மானம் பற்றித்தான் விவாதம் நடக்கிறது.

பெரியவர்களெல்லாம் சேம்பர்லேன் மீது ஒரே ஒரு குற்றத்தைத்தான் திரும்பத் திரும்பச் சாட்டினார்கள். அதாவது, ''ஹிட்லரை இவர் தாஜாப் படுத்தினார். அவரது நடிப்பை நட்பு என்று கருதித் தப்புக் கணக்குப் போட்டார். ஹிட்லரின் ஆபத்தை உணர்ந்த போது மக்களுக்கு அறிவிக்கத் தவறினார்....'' என்றார்கள். இந்த விவாதம் நடந்து முடிவதற்குள்ளாகவே சேம்பர்லேனின் ராஜிநாமா செய்தி வந்தது. இவர் போன பிறகுதான் சர்ச்சில் வந்தது.

சர்ச்சில் வந்த பின்னர் கன்சர்வேடிவ்களும் எதிர்க்கட்சியான தொழிற்கட்சியினரும் ஒத்துப் போனார்கள். கூட்டு சர்க்கார் ஏற்பட்டது. இரு சாராரும் நகமும் சதையுமாக இருந்தனர். அப்படி இருக்கும் போது கன்சர்வேடிவ் கட்சியினர் சேம்பர்லேனைத் திரும்பக் கொண்டு வர முயற்சி செய்யவில்லை. போனவர் போனவர்தான் என்று விட்டார்கள்.

பிரிட்டனில் ஜனநாயகம் வளருகிறது என்றால் அதற்கு மக்கள் மாத்திரம் காரணமல்ல. பதவியைத் துறந்த சேம்பர்லேன், ஈடன் போன்ற தலைவர்களும் காரணம். திரு மேனன் இவர்களது சரித்திரங்களைப் படிப்பாராக!

# ஆடிய பாதமும் தேடிய பாதமும்



ஆரார் வந்தார் அமரர் குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாராயணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர் குழாங்கள் திசையனைந்து நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே.

என்று, உலகையெல்லாம் வாழ்விக்கும் நடராஜப் பெருமானுக்கு வாழ்த்துக் கூறும் நன்னாள் திரு ஆதிரை. 'பல்லாண்டு என்னும் பதம் கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே' என்கிறார் சேந்தனார் சுவாமிகள். முன்னைப் பழம் பொருட்கு மூத்தவனாகிய மூப்பன், பின்னைப் புதுமைக்கும் புதியவனாக வந்து நம்மிடமெல்லாம் வாழ்த்துப் பெறும் ஆதிரையின் விசேஷம் என்ன?

திருவாதிரைக் களியும், ஏழு கறிகாய் சேர்ந்த கூட்டும்தான் ஆதிரையின் விசேஷம் என்று மட்டும் நமக்குத் தெரியும். இந்தக் களியும் கூட்டுக் காட்டும் தத்துவங்களைத்தான் சற்று எண்ணிப் பார்க்கலாமே!

களி என்றால் ஆனந்தம் என்று பொருள். பரம்பொருளின் இயல்பே ஆனந்தம்தானே? 'கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப் பருளும் களிப்பே' என்று பாடலே உள்ளதே! அரிசியில் வெல்லத்தைக் கலந்து களி செய்வது போல அறிவில் அருளைக் குழைத்துப் பெறும் களியல்லவா ஆண்டவன்?

இந்தக் களியின்றி, நாம் உண்ணும் திருவாதிரைக் களியும் வரலாற்று முக்கியத்துவம் பெற்றதாகும். பட்டணத்துப் பிள்ளைகளின் சீடராகிய சேந்தனார் சிதம்பர ஸ்தலத்தில் விறகுவிற்று ஜீவனம் செய்து, சிவனடியார்களுக்கும் உணவு அருத்திய சிவநேசச் செல்வர். ஓர் ஆண்டு கார்த்திகை மாதம் தொடங்கிய கன மழை மார்கழி மாதம் ஆதிரைத் திருநாள் வரை விடாமல் பொழிந்தது. சேந்தனார் விற்ற ஈர விறகுகளை யார் வாங்குவார்கள்?

அவரது வருவாய் குறைந்தது. உண்ண எதுவும் இல்லாத நிலை ஏற்பட்டது. அதைப் பற்றிக்கூடச் சேந்தனார் வருந்தவில்லை. சிவனடியார்களுக்கு உண்பிக்க எதுவுமில்லையே என்பதொன்றுதான் அவர் உள்ளத்தை உறுத்தியது, வருத்தியது. மார்கழி ஆதிரைத் திரு



நாளன்று எப்பாடோ பட்டுத் தம்மிடமுள்ள ஈர விறகு எல்லாவற்றுக்குமாகச் சிறிது அரிசி மாவைப் பண்டமாற்றாகப் பெற்று வீடு திரும்பினார். மாவைக் கொண்டு களி சமைத்தாயிற்று. இன்று அவருக்கு ஒரு புது சங்கடம் ஏற்பட்டது. சிவனடியார்கள் வந்த நாட்களில் உணவில்லாமல் தவித்ததுபோக இன்று உணவு சமைத்தும் அதனை உண்ண அடியார் யாருமின்றி அல்லலுற்றார் சேந்தனார்.

கடைசியில் வந்து சேர்ந்தார் ஒரு கிழப் பிராமணர். தம் ஒடுங்கிய உதரம் கொண்ட அளவுக்குக் களி உண்டுவிட்டு மீதியையும் சேந்தனார் குடும்பத்தினருக்கு வைக்காது தம் கையிலேயே எடுத்துச் சென்றுவிட்டார்.

அன்று மாலை சிற்றம்பலவனுக்குப் பூசனை புரியத் தில்லை வாழ் அந்தணர்கள் செல்லும்போது பொன்னம்பலத்திலும், பஞ்சாட்சரப் படியிலும், சிற்றம்பலத்திலுமே களி சிந்தி யிருக்கக் கண்டார்கள். ஆம், உலகெல்லாம் களிப்புத் துளிகளைச் சிந்தும் சிற்றம்பலச் செல்வன்தான் வயோதிக அந்தணனாகச் சேந்தனாரின் குடில் புகுந்து அவரிடம் நன்றாகத் திண்டித் திண்டி உணவு உண்டிருக்கிறான்! உலகெலாம் உண்ட தன் உதரம் கொள்ளாமல் கையில் களியை அள்ளிச் சென்றிருக்கிறான். பிட்சை பற்றுவதில் அவனுக்குள்ள பழக்கம் வேறு யாருக்கு உண்டு?

பின்னர் ஒருகால் தில்லை நாயகனின் திருத் தேர் இடம் பெயராது அழுந்தியபோது இதே சேந்தனார் துதித்த பின்தான் ரதம் நகர்ந்திருக்கிறது. அப்போது அவர் செய்த துதியே 'திருப்பல்லாண்டு'. இவர் தந்த வெல்லக் களியை அவன்



உண்டான். ஆனால் இவரோ அவனை 'என் அகம் நெக ஊறும் அமிழ்து' என்றே போற்றுகிறார்.

களிக்குக் காரணம் புரிந்து கொண்டோம். ஏழு கறி காய் சேர்ந்த கூட்டுக்கும் ஓர் உட்பொருள் தோன்றுகிறது. எல்லாக் காய் கறிகளும், பயறு, துவரை முதலிய பயிர் வகைகளும் சேர்ந்த இந்தக் கதம்பம் ஆண்டவன் அளித்துள்ள இயற்கைவளங்கள் அவ்வளவையும் திரட்டி அவனுக்கு அர்ப்பணிக்கும் சின்னமாகும். நானா சுவையுடைய வெவ்வேறு காய்கறிகளைக் கொண்டு படைத்த 'கூட்டு' நானா உணர்ச்சிகளையும் கொண்ட இக வாழ்வுக்கே அறிகுறி என்றும் கொள்ளலாம். தனிப்பட்ட ஒரு காயையேனும் சமைக்காமல் உண்ண முடியுமா? காய் மட்டுமல்ல; உப்பையோ, புளியையோ மிளகாயையோ— இந்தக் கூட்டில் சேரும் எந்தப் பண்டத்தையேனும் தனியாக உண்ண முடியுமா? அதில் நீரை ஊற்றித் தீயிலிட்ட பின்தானே எங்கிருந்தோ அத்தனை சுவையும் அதற்கு வந்து விடுகிறது? இதே போல் பொருளற்ற மானுட உணர்ச்சிக் குவியலில் பக்தி என்ற நீரை ஊற்றி, ஞான அனல் மூட்டி அவற்றைச் சமைத்தால்தான் ஆனந்தச் சுவை ஏற்படும் என்பதைத் தான் திருவாதிரைக் கூட்டு உணர்த்துகிறதோ?

திருவாதிரைக் களியையும், கூட்டையும் பற்றிச் சொல்லியாயிற்று. இந்தத் திருவாதிரையேதான் என்ன?

ஆதிரை என்பது வட மொழியில் ஆர்த்ரா என்னும் நட்சத்திரமாகும். சூரியனைக் கொசுவாக்கிவிடும் தாரகை அது. கதிரவனைப் போல் இரண்டரைக் கோடி மடங்கு பெரிய விண்மீன் ஆதிரை! செக்கச் செவேல் என்று ஒளிர்வது. பெரியனவற்றுக்கெல்லாம் பெரியவனும், ஞான ஜோதியாக ஜொலிப்பவனுமான பரமேசுவரனின் நட்சத்திரம் என்று கூற எல்லாத் தகுதியும் வாய்ந்தது. இப்படித் தீ மயமாக இருப்பினும் அதன் பெயரோ ஆர்த்ரா அதாவது 'நனைந்தது' என்பதாகும். கருணைக் கடலில் மூழ்கிய ஞானஜோதியான அம்பலவாணனின் நட்சத்திரமல்லவா? மாதங்கள் தோறும் வரும் திருவாதிரை நாள் மாதங்களிற் சிறந்த மார்கழி மாதத்தில் தனிச் சிறப்புப் பெறுகிறது.

திருமாலைத் தொழும் நாச்சியார் தனது திருப்பாவையின் தொடக்க வரியிலேயே 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்' என்று கூறும் மதி நிறைந்த பூர்ணிமை நாள் ஆதிரை யொடிணைந்தே வரும். அன்று காலையில்தான் தில்லையம்பலவனுக்கு அபிஷேகத்துக்கு மேல் அபிஷேகமாகச் செய்வார்கள். 'தரிசனம்' என்று கூறினாலே திரு ஆதிரையில் தில்லை நடராஜ மூர்த்தியின் தரிசனம் என்று பொருள் ஏற்பட்டிருக்கிறது.

''கனகசபா நாத, மார்கழி மாதம் விடியற் காலைக் குளிரில் உனக்கு சந்தனப் பூச்சு வேறு சேர்ந்து விட்டதே! ஏற்கனவே உன் தலையில் கங்கா நதி, தண்மதி இவற்றைத் தாங்கியிருக்கிறாய். கை கால்களில் சில்லென்ற பாம்புகளை அணிந்திருக்கிறாய். போதாக் குறைக்கு உன் இடப் புறத்திலோ பனி மலையின் மகளும், தலையில் நனைந்தவளுமான தேவி இருக்கிறாள். இவ்வளவு குளிரையும் நீ எப்படித் தாங்குகிறாய்? ஜ்வாலையாகத் தகிக்கும் என் இதயத்தில் வசிப்பதால்தானே இவ்வளவு தண்மையையும் உன்னால் பொறுக்க முடிகிறது?'' என்று ஒரு பக்தர் தம் மனசு நனைந்து, நம் மனசும் நனையப் பாடிய சுலோகமொன்று உண்டு.

இந்தத் திருஆதிரை நாயகனாகிய கூத்தப் பிரானைப் பற்றியும் தெரிந்து கொள்வோம். நடராஜன் ஆடல் நிகழ்த்திய பூசமும் வருகிற தை மாதத்தில் நேர்கிறதல்லவா?

இமய மலையில் வாழ்ந்த மத்தியந்தன முனிவரின் குமாரன் தன் தந்தையிடம் கேட்டான், ''தவத்திலெல்லாம் பெரிய தவம் எது அப்பா?'' என்று. சிவபெருமானை வழிபடுவதே மாதவம் என மொழிந்த முனிவர், ''பிரபஞ்சம் முழுவதுமே ஈசன் சந்நிதிதான். எனினும் உடலெங்கும் ஓடும் இரத்தத்துக்கு இதயம் முக்கிய ஸ்தானமாக இருப்பதுபோல், எங்கும் நிறைந்த ஈசுவர சாந்நித்தியம் பிரபஞ்சத்தின் இதயமாகிய தில்லைச் சிதம்பரத்தில் இறுகி முறுகி யிருக்கிறது'' என்றார்.

பாலனுக்கு அதன் பின் சிதம்பரமே நினைவாகி விட்டது. தன் தாய் தந்தையரையெல்லாம் நீத்து, அம்மையப்பனை நாடித் தில்லைக்கு வந்தான். கண் பார்வைகூட நுழைய முடியாத காடுகளையும், அரியும் கரியும் சூழ்ந்த வன வனாந்தரங்களையும் கடந்து சிதம்பரம் வந்தான்.

புனிதம் வாய்ந்த சிவகங்கைத் தீர்த்தத்தை அடைந்தான் முனி குமாரன். அங்குதான் அமர தரிசனம் கிடைக்கப் பெற்றான். முனி குமாரன் கண்டது ஆனந்த தாண்டவம் புரியும் நடேசனை அல்ல. அப்போது சிதம்பரத்துக்கு நடராஜனே வந்து சேரவில்லை. 'மூல ஸ்தானம்' என்றாலே 'தில்லை மூலட்டானம்' என்ற அளவுக்குப் புகழ் பெற்ற திருமூல நாதர் என்ற லிங்க வடிவினரைத்தான் சிவகங்கைக்குத் தெற்குப் புறம் செல்கையில் ஆலமரத்தடியில் கண்டான் இளம் தவசி. லிங்கமாக இருப்பினும், ஆலடிவாழ் தட்சிணா மூர்த்தியாக இருப்பினும், தட்சிணாமூர்த்தி போலவே தென் முகம் நோக்கிய நடராஜனாக இருப்பினும் சிவம் சிவம்தானே? சபேசனுக்குப் பல்லாண்டு கூறிய சேந்தனாரும் 'ஆல நிழல் பட்டனுக்கு, என்னைத் தன்பால் படுத்தானுக்கு' என்று பாடியிருக்கிறார்.

லிங்கமூர்த்திக்கு உள்ளுருகிப் பூசனை செய்து வந்தான் முனி குமாரன். ஒரு நாள் காலை அப்படிப் பூசனை புரியப் பூக்களை எடுக்கும் போது அவன் உள்ளத்தில் ஏதோ ஒன்று இடறிற்று. 'ஆகா, இந்தப் பூக்களை இறைவனுக்கு அர்ப்பணிக்கு முன்பே வண்டுகள் இவற்றில் வாயை வைத்து எச்சிலாக்கி விடுகின்றன அல்லவா? வண்டுகள் தீண்டும் முன்பே, அதி காலையில் பூக்கள் மலர்ந்தவுடன் அவற்றைக் கொய்யலாமெனில், இருளில் இந்த அடர்த்தியான தில்லை வனத்தில் கண்ணே அல்லவா தெரியவில்லை? இங்கு மிகுந்து காணும் கோங்கு மரங்களில் ஏறிப் பூக்கள் பறிக்கலாமெனில் நீண்ட அதன் கணுக்களில் பெய்துள்ள பனி

ஏறவொட்டாமல் வழுக்குகிறதே! மாசறாத மலர்களை என் ஐயனுக்கு நான் என்று தூவித் தொழுவேன்?'' என்று வியாகூலமடைந்தான் அந்த இளைஞன்.

துன்பம் தீர்ப்பவன் ஆண்டவன் ஒருவன் தானே? எனவே, ''மன்னுநர் புகழ் தில்லை வனம் பிரியா மணியே, எளியனை மகிழ்ந்தனையேல் எண்ணாது நினைந்தவை தந்தருள்''— அதாவது ''என் தகுதியை எண்ணிப் பாராமல் நான் நினைத்தவற்றை வரமாக அளிப்பாய்'' என்று வேண்டினான்.

பனிக்கு நிகர்த்த தூய உள்ளத்தினனை அவன் முன்பு கைலாசபதி எழுந்தருளினான். விஷத்தை அணிந்த தொண்டையிலிருந்து அமிருத வாக்கைப் பெருக்கி ''நீ விரும்பும் வரத்தைத் தந்தோம்'' என்று அருளினான்.

அப்போது யாரும் கேட்டறியாத வரத்தைக் கேட்டான் யுவன். இளமைப் பருவத்தனாயினும் தன் உருவ அழகைப் பற்றிச் சற்றும் கருதாமல், தன்னைப் பார்ப்பவர்கள் எவ்வளவு அச்சம் கொள்வார்கள், அருவருப்பு அடைவார்கள் என்பதையும் பொருட்படுத்தாமல் ஈசனுக்கென்றே தன் கர சரணங்களை அளித்துச் சரணாகதி புகுந்த மனப்பான்மையுடன் ஒரு வரம் கேட்டான்.

''ஐயனே, புத்தம் புது மலரிட்டு உன் பாத மலரை வழிபட வேண்டும் என்பதே என் விருப்பமெல்லாம். வண்டினம் மலர்களைத் தொடுமுன்பு, இருள் பிரிந்துஒளி விரியுமுன்பே, இந்தத் தில்லை வனத்துள் புகுந்து பூக்களைக் கொய்ய வேண்டும் என்பதே என் ஆசை. காற்று ஸ்பரிசித்து அதனால் தருக்களிலிருந்து புஷ்பங்கள் விழுமுன்பே, அவை மண்ணைத் தீண்டு முன்பே, அவற்றை நான் மரமேறிப் பறிக்கவேண்டும். அவ்வாறு நான் மரமேறுவதற்கு உற்றனவாக என் கால்களைப் புலியின் கால்களைப் போல வலிவாக்கி அருள்வாய். வழுக்கும் மரங்களை நான் பற்றிக்கொள்ளுவதற்கு வகையாக என் கால்களில் புலியின் கால்களில் உள்ளது போலவே நீண்ட பெரும் நகங்கள் முளைக்க அருள்வாய். இருள் நீங்காத வேளையில் திருஷ்டிக் குறைவு காரணமாக இந்த வலிவு வாய்ந்த கால்களால் நான் எந்த ஜீவராசியையும் மிதித்து விடாதபடி என் புலிக் கால்களிலேயே கண்களும் அமையுமாறு வரம் தருவாய்'' என்று ஆச்சரியமான வரம் கேட்டான். எம்பெருமானும் அவ்வாறே வரம் அளித்தான். அந்தக் கணமே முனி குமாரனின் துவளும் எழிற் கால்கள் புலிக் கால்களாக மாறின. அவற்றில் கண்களும் பதிந்தன. புலிக்கால் பெற்றதாலேயே வியாக்ரபாதர் என்று பெயர் பெற்றார் முனி குமாரர்.

புலருமுன்பே நீராடி சந்தி உபாசனை புரிந்து வேதம் மொழிந்தபடி மலர் கொய்வார் வியாக்ரபாதர். மரங்களில் மலரும் மந்தாரம், செந்திரம், குரா, பாதிரி, கோங்கு, சண்பகம் முதலிய புஷ்பங்களையும், நீரில் முளைத்த கமல கைரவங்களையும், கொடியில் முத்திடும் மல்லிகை வகைகளையும், செடியில் சிரிக்கும் தும்பை, ஊமத்தை முதலானவற்றையும் பூத்தவுடனேயே அப்பழுக்கின்றிப் பறித்துப் பரமனுக்குப் பூஜை செய்து வந்தார்.

பக்திக்காகத் தன் பாதங்களை அடகு வைத்த புத்திரனைத் தேடி வந்து கண்டு மத்தியந்தன முனிவர் நெகிழ்ச்சியும், மகிழ்ச்சியும் ஒருங்கே பெற்றார். வசிஷ்டரின் சகோதரியை — உடலழகையன்றி உள்ளத்தழகைக் காணும் கன்னிக்கு — வியாக்ரபாதரை மணம் முடித்து மகிழ்ந்தார். வியாக்ரபாதருக்கு உபமன்யு என்று ஓர் ஆண் மகவு பிறந்தது. கற்புக் கடம் பூண்ட வசிஷ்ட பத்தினியாகிய அருந்ததி நாத்தியின் மகவைத் தானே நீண்ட காலம் வளர்த்து வந்து பின்னர் நாத்தியிடம் அளித்துத் திரும்பினாள். வசிஷ்டர் ஆசிரமத்தில் பசுக்களின் தாயாகிய சுரபியின் திவ்யமான பாலைப் பருகிய குழந்தை இப்போது தன் தாய் அளித்த க்ஷீரத்தைப் பருகாது உடல் ஒடுங்கி வந்தது. அப்போது வியாக்ரபாதர் பசுபதியை வேண்ட அவன் குழந்தைக்காக அமுத மடுவையே தில்லையில் தோன்றச் செய்தான். 'பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்' என்று இதையே பாடலும் இயம்புகிறது.

இவ்வளவெல்லாம் அருள் புரிந்தும் அந்தச் சிவபெருமான் தம்மிடம் ஒரு மாபெரும் அற்புதத்தை, ஆனந்தத்தை ஒளித்து வைத்து விட்டதைத் தியானத்திலிருந்த வியாக்ரபாதர் ஒரு நாள் உணர்ந்தார். தாருகாவனத்தில் பிட்சாடனராகச் சென்று முனிவர்களின் ஆணவத்தை முயலகனுக்கி வலக் காலால் மிதித்து அவர்களுக்குச் சிவபதம் அளிப்பதற்காக இடது பதம் தூக்கி ஆடியிருக்கிறான் ஈசன். ஆணவம் கொண்ட முனிவர்கள் கண்ட நடராஜ தரிசனம் அருந்தவச் செல்வரான வியாக்ரபாதருக்குக் கிடைக்கவில்லை. உமையாகிய ஒருமாதுடன் பெருமான் எப்போது தன்னெதிரிலும் வந்து ஆனந்த தாண்டவனாகக் கோலம் காட்டுவானோ என்று அதே சிந்தையாகத் தியானித்து வந்தார் வியாக்ரபாதர். பரதத்துவனின் பரதம் காண, அந்த பரதம் புரியும் பாதம் காண விழைந்தார். தை மாதத்தில் குரு வாரமும் பூசமும் கூடிய நாளில் சித்த யோகத்தில் நண்பகலில் சிதம்பரத்துக்கே வந்து நடனமிடுவதாகப் பெருமான் நல்வாக்கு நல்கினான்.

இதே தரிசனத்தைக் காண்பதற்காகத் துடித்த இன்னொருவருமுண்டு. ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷன்தான் அவர். பிட்சாடனராகப் பிரான் வந்தபோது மோகினியாக உடன் வந்த ஜகன்மோகனத் திருமால் நடராஜனின் ஆடலை எண்ணி எண்ணிப் பூரித்து, ஆதிசேஷனுக்கும் ஒரு பேர் ஆர்வத்தைத் தூண்டிவிட்டான். ஆதிசேஷன் கைலைக்குச் சென்று கடுந்தவம் இருந்தான். அயன் பிரஸன்னமானான். சிவ நடனம் காணவே தான் தவமிருப்பதாக ஆதி சேஷன் கூறினான். 'சர்வ சுதந்திரனான பகவான் உனக்காக ஆடுவானோ?'' என்று பிரம்மன் நகைத்தான். 'தானாகவே வாரி வாரி அன்னம் வழங்குபவன் ஒரு யாசகன் மிகவும் விரும்பிப் பிச்சை கேட்கும்போது ஐயமிடமாட்டான் என்று சொல்வது போல் இருக்கிறதே உங்கள் வாதம்' என்றான் சேஷன் நிச்சய புத்தியுடன். அக்கணமே அன்ன வாகனனாகிய அயனும் அரனானான். சிவபெருமானேதான் பிரம்மனாக வந்து சோதித்திருக்கிறான்! சிதம்



**அஞ்சலி**

இரண்டு வருடங்கள் ஆனாலும் என்றுமே நெஞ்சை விட்டு அகலாத சிறந்த குணமுள்ள ரேவதியின் அன்பு நினைவுக்கு அன்னார் குடும்பத்தினர் அஞ்சலி செலுத்துகிறோம்



பாரத்தில் தை மாதம், வியாழன், புஷ்யம் சேரும் நாளில் ஆடும் கோலம் காட்டுவதாகக் கூறினான் ஐயன். ஆதிசேஷனை அத்திரிக்கும் அநசூயைக்கும் புத்திரனாகப் பிறந்து வந்து, அதனைக் காணுமாறு கூறினான். அப்படிப் பிறந்த சேஷன்தான் பதஞ்சலி முனிவர். பதஞ்சலி சிதம்பர க்ஷேத்திரத்தில் வியாக்ர பாதரை வந்தடைந்தார்.

ஆடிய பாதனாக ஈசனைக் காண நாடிய முனிவரர் மூவாயிரம்பேரும் இருந்தார்கள். அவர்களைத் தில்லையிலேயே தீட்சிதர்களாகப் பிறப்பித்தான் ஈசன். (தீட்சிதர்கள் இரண்டாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மர்தான் என்றும் சபேசனே மூவாயிரமாவது தீட்சிதர் என்றும் சொல்வதுண்டு.)

வியாக்ரபாதருக்கும், பதஞ்சலிக்கும் தில்லை மூவாயிரத்தாருக்கும் தரிசனம் தரவேண்டுமென்றே கைலைநாதன் தில்லை வந்து தை மாதத்தில், குரு பூசத்தில், பகல் நேரத்தில் ஆனந்த நர்த்தனமிட்டான். தன் இடையில் உள்ள புலியதள் வியாக்ர பாதரின் உள்ளம் தன்னையே தழுவியிருப்பதையும், காலில் கவ்வியுள்ள அரவம் தன் பாதமூலத்தை ஆதிசேஷனாகிய பதஞ்சலி பற்றியிருப்பதையும் காட்டத் திருநடம் புரிந்தான். வலது மேல் கையில் பற்றிய டமருக நாதத்தால் உலகை சிருஷ்டித்து, அபயம் காட்டும் கீழ்க் கரத்தால் ரட்சித்து, அக்கினி தாங்கிய இட மேற் கரத்தால் சம்கரித்து, முயலகன் மீதூன்றிய திருப் பாதத்தால் மாயையை உணர்த்தி, தூக்கிய பொன்னடியால் தன்னையே அளித்து, தானாகவே ஆக்கிக் கொள்ளும் அநுக்கிரகத்தைச் செய்து ஆடினான் நடராஜன். தூக்கிய பாதத்தைப் பக்த ஜனங்களுக்குக் காட்டும் பாங்கிலேயே இடது கீழ்க் கரத்தை இருத்திக் கூத்திட்டான் கோமான். சர்வ சக்தியையும் வெளியிடும் இந்தக் கோலாகல நடனத்தின் போது அந்தப் பராசக்தியானவள் வெறும் சாட்சி மாத்திரமாக, பணிவின் உருவமாக, நின்றாள். சிவகாம சுந்தரி அடங்கி நின்ற இந்த பாவனையை 'மல்க ஒல்கிய நிலையும்' என்று எழிலுற வர்ணிக்கிறது கோயிற் புராணம்.

ஈசனின் நடனத்தில் கண்ணும், அந்த நடனத்தோடு இழைந்த இசையில் காதும் செல்வது மனதை இரு வேறு திசைகளில் இழுத்துச் செல்வதாகப் பட்டது பதஞ்சலிக்கு. எனவே, கண்ணே செவியாக உள்ள கட்செவியாகிய தமது பழைய பாம்பு உருவை எடுத்துக் கொண்டு ஒளியமுதையும், ஒலியமுதையும் ஒருசேரப் பருகினார் அவர். விந்தைதான்! ஆடிய பாதனைத் தேடிய பதஞ்சலி பாதமே இல்லாத பாம்பாகப் பக்தி செய்தார். மற்றொருவரோ புலியின் பாதங்களைப் பெற்று வழிபட்டார். சிதம்பரத்தைப் புலியூராக்கி சிதம்பரநாதனையும் புலியூரனாக ஆக்கிவிட்டார். புலியூரனாகிய பெருமானின் அழகு ஆர்ந்த சரணங்களை எண்ணும்போதெல்லாம், அந்தச் சரணங்களைப் பெறுவதற்காகத் தம் அழகையெல்லாம் தியாகம் செய்த பரம பக்தரின் சரணங்களையும் நினைந்து வணங்குவோம்.



# கனியும் கானமும்

வித்வானுக்கு
வெய்யில் தாங்க
நிழலில்லை என்றால்!


















சாமா













எங்கள் வாழைத்
தோட்டத்திற்கு
சுஸ்வர சங்கீத
வித்வான் தேவை

சங்கீதத்தினால் வாழைப்பழங்கள் நன்றாகப் பருத்துக் கனிவதாகப் பத்திரிகைகளில் செய்தி வெளியாகியிருக்கிறது.



# வெற்றிக்காக உழையுங்கள்

வெற்றிக்கு உங்கள் பணி மிகவும் இன்றியமையாதது. யாவரும் கடினமாக உழைக்க வேண்டியது மிகவும் அவசியம். நம் படை சக்தியை பலப்படுத்துவதற்கு அதிக அளவில் உற்பத்தி செய்ய தளராது உழைக்கவேண்டும். நாட்டின் வளங்களை ஒன்று திரட்டி, எல்லா முனைகளிலும் வெற்றிகாண கடின உழைப்பு தேவை.

தொழிற்சாலை, பட்டறை, யந்திரசாலை, மாபெரும் தொழிலகம் ஆகியவைகளில் உற்பத்தியை அதிகரிக்க யாவரும் கடினமாக பாடுபடவேண்டும். முன்னணிக்கும் நாட்டின் உள் தேவைகளுக்கும் முக்கியமான பொருள்கள் தங்குதடையின்றி செல்ல யாவரும் உழைப்போம்.

**ஒவ்வொருவரும் ஒரு படைவீரன்**

*அதிக உற்பத்தி செய்வதிலும் பலமான பாதுகாப்பு அளிப்பதிலும்*

dA 62/F4

# ஆற்றமை

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

மாம்பழ வண்டி வெய்யிலில் வாடிக் கொண்டிருந்தது. பக்கத்தில் உட்கார்ந்து கொட்டையைச் சப்பிச் சுவைத்துக் கொண்டிருந்த குழந்தை. நொந்த பழம் புளியைப் போல சூப்புத் தட்டிக் குலைந்து போயிருந்த கிழவி. குழந்தைக்குப் புரையேறும்போதெல்லாம் தலையில் தட்டிச் சமனப்படுத்திக் கொண்டிருந்தாள்.

மடையை ஆற்றி மேஜை மேல் வைத்துவிட்டு நிமிர்ந்தான் ரத்தினம். முதுகில் எண்ணெயைத் தடவி விட்டாற்போல் ஒரு வியர்வை ஓட்டம். கருகருவென்று தாடி பிடித்துக் கொண்ட கன்னத்துக்கு முன்பிருந்த சதைப் பிடிப்பு இல்லை. கண்கள் இடுங்கிக் கருவட்டம் கட்டி இருந்தன.



முதலாளி கூப்பிட்டார். அது அவன் காதில் விழவில்லை. ஆட்டத்தைக் கவனிக்காமல் விளையாடும் குழந்தையைப் போல, அவனுக்குத் தொழிலிலும் இப்படி ஓர் அசிரத்தை வந்து விட்டது.

கடையில் கூட்டம் வடிந்து விட்டது. மணி இரண்டரை. உள்ளே போய் அடுப்படியில் அரை வாழை இலையைக் கிழித்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். தணலின் நெடி வீசிற்று. சிங்காரம் மசாலே வைத்த போண்டாவைப் பொரித்துக் குவித்துக் கொண்டிருந்தான். சாயங்கால வியாபாரத்துக்கான பண்டம்.

பெரிய இரும்புச் சட்டுவம் அவன் முகத்துக்கு நேரே வந்தது. இரண்டு போண்டாக்கள் எண்ணெய்க் கொதிப்பு ஆறாமல் பொரிந்து முணுமுணுத்துக் கொண்டு நின்றன.

''வாணும்.''

ரத்தினம் இலைமேல் விழுந்து மறித்துக் கொண்டான்.

''வெறும் மோருஞ் சோறுதானா?''

''ஆமாம்.''

''உனக்குப் பைத்தியம்தான்.''

அதை ஒப்புக் கொள்வது போல் ரத்தினம் ஒரு தடவை சிரித்துக் கொண்டான். அதுவும் பைத்தியச் சிரிப்புத்தான். அவனுள் எப்படி மறுக்க முடியும்? ஆனால் சிங்காரந்தான் எப்படி அதைப் புரிந்து கொள்ள முடியும்? அவனை அப்படிப் பைத்தியமாக அடித்துவிட்டவள் அங்கே இல்லை, அவனுக்குக் காட்ட. அவனுக்கு உரிமையும் இல்லை அவளைப் பற்றிச் சொல்ல.

சோறு விறைத்துப் போயிருந்தது. வடித்து நான்கு மணி நேரமாக ஆறிக் கிடந்ததில் பதம் இறுகிக் கட்டி தட்டி விட்டது. குளிர்ந்த மோருக்கு அதில் தெம்பூட்டும் சூடும் இல்லை. அவன் எண்ணங்களைப் போல் எல்லாமே ஆறிக் குளிர்ந்து விட்டன.

சாயங்காலம் நான்கு மணி ஆனதும் வெள்ளை வெளேரென்று அரைக்கைப் பனியனைப் போட்டுக் கொண்டு நான்கு முழ வேட்டியை மடித்துக் கட்டியபடி வாசலருகே டீ ஆற்றி வைக்க வந்துவிடுவான் ரத்தினம். சோப்புப் போட்டுக் கழுவிய முகம். நெற்றியில் பளீரென்ற குங்குமப் பொட்டு. வாசனைத் தைலம் தடவி வாரிய கிராப்பு பளபளவென்று கருண்டு நிற்கும்.

அது மீனாட்சி வரும் நேரம். புதுப் புடவையின் கொசகொசப்பில் அவள் நடை தெறி

யும். பல்லாங்குழிகளில் சிதறிய சோழிகளைப் போல் வரும்போதே கலகலவென்ற பேச்சு. இரண்டு வார்த்தைகளுக்கு ஒரு தடவை சொக்க வைப்பது போன்ற மல்லிகைப் பூச் சிரிப்பு. ரத்தினம் ஒரு தடவை குனிந்து பார்த்துப் பூரித்துப் போவான்.

பூக்கூடையை வாசலருகே வைத்துவிட்டு அவள் உட்கார்ந்ததும், அவன் கிளாஸில் நுரை ததும்ப டீயை ஆற்றிக் கொஞ்சம் சீனி அதிகமாகவே போட்டு, மேஜை மேல் 'டக்'கென்று அவள் கவனத்தைத் திருப்புகிற மாதிரி வைப்பான். அவளுக்கு இனிப்புப் பிடிக்கும். அவளைப் பொறுத்தவரை அவளுக்கும் எல்லாமே இனிப்புத்தான்.

அவள் முகம் சிவப்பில்லை; வெளுப்பும் இல்லை. இரண்டும் கலந்த பொன்னிறம். மதகடியில் நீருக்குள்ளே சுழிக்கும் கெண்டை மீனைப் போல் பரபரவென்று சுழலும் கண்கள் அவனைக் கண்டதும் உதட்டை முறுவலித்துக் குறும்பாகக் கண்ணை ஒரு தடவை சிமிட்டிக் கொள்வாள். அலங்காரப் பூச்சு அவளுக்குத் தேவையில்லை. இளமை அடங்காத செழுமை இயல்பாகவே மெருகிட்டு நின்றது.



அவள் இடுப்பிலிருந்த சுருக்குப் பையைப் பிரித்துச் சில்லறையை எண்ணி வைத்து விட்டுக் கூடையை எடுத்துக்கொண்டு வேகமாய் இடுப்பை ஆட்டி ஆட்டி ஒடித்து மிடுக்காய் நடந்து சென்று தூரத்தில் தலை மறைவாய் ஒதுங்குகிறவரை பார்த்திருந்துவிட்டு, ரத்தினம் மறுபடியும் டீயைக் கலக்கத் திரும்புவான். மறுபடியும் வேலையில் மனசு திரும்ப அரை மணி நேரமாகும்.

டவுனிலிருந்து வந்த கிராமபோன் பெட்டியில் சில சமயம் சினிமாப் பாட்டு வைப்பார் முதலாளி. அவளுக்கு அது பிடிக்கும். மேஜை மேல் தாளம் போடும்போது நயமும் நுட்பமும் நிறைந்த விரல்கள் நலுங்கும். கருவளைகள் மணிக்கட்டின் குமிழ்களைத் தாண்டிக் குலுங்கி மோதிக் கொள்ளும். சத்தமின்றிப் பாட்டை அனுபவிக்கும் அவள் ஆழ்ந்த பார்வையின் வசியத்தில் சிக்கி அவனும் மேஜை மூலையில் சிந்தித்துக் கொண்டே நிற்பான், ஆளை உலுக்குவது போல் முதலாளி கூப்பிடும் வரையிலே.

பாட்டு நின்றதும் அவளும் போய் விடுவாள். சட்டென்று கடையில் வெறுமை சூழ்ந்து கொள்ளும். கண்ணாடி தம்ளரின் முதுகு வரிகளில் விரலை ஓட்டிக் கொண்டு ஒன்றும் தோன்றாமல் நின்று கொண்டிருப்பான்.

ஊருக்கெல்லாம் பூ கொடுத்தாலும் அவள் தான் பூ வைத்துக் கொள்வதில்லை. கூந்தலை அழுந்த வாரிக் கோடரி முடிச்சாய்க் கட்டிக் கொண்டுதான் வருவாள். எப்போதாவது காதருகில் ஓர் ஒற்றை ரோஜாப்பூ ஒளிரும்.

''நீ ஏன் பூ வைத்துக் கொள்கிறதில்லை?'' என்று அவன் கேட்பான்.

''பூ வியாபாரத்துக்கா? எனக்கா?''

''வியாபாரப் பூ காசுக்கு. நீ வைத்துக் கொள்ளுகிறது – '' என்று மேலே முடிக்கத் தைரியம் இல்லாமல் தயங்கி நிற்பான். சட்டெனச் சிரிப்பு அடங்கி அவனை உற்று நோக்கியபடி அவள் கேட்பாள், மடக்குகிறமாதிரி.

''நீ டீ குடிக்கிறதில்லையே ஏன்?''

அது என்னவோ உண்மை. நாளைக்கு நூறு கிளாஸ் கலந்து வைப்பானே தவிர, அவன் ஒரு தடவை கூடக் குடிப்பதில்லை. அதைச் சொல்லிக் கொள்வதில் அவனுக்கு ஒரு பெருமை. அவளிடமே சொல்லியிருக்கிறான்.

டீக்கடை மறைப்பில் திடீரென்று அந்தச் சைக்கிள் கடை வந்து சேர்ந்தது. புதுசும் பழசுமாக நாலைந்து சைக்கிள்கள். எனாமல் உதிர்ந்துபோன பெரிய பேஸின். தகரப் பெட்டி நிறையக் குலுங்கும் சில்லறை இரும்புச் சாமான்கள். இனிப்பு வைத்த கறுப்பு ரப்பர்க் குழாய் தொங்கும் பித்தளை பம்பு. அதில் சாய்ந்துகொண்டு முக்கி முக்கிக் காற்றடிக்க மேல் சட்டை இல்லாமல் ஒரு சிறு பையன். இடுப்பில் முழங்கால் சராயை இறுக்கிக் கொண்டு நாலே எட்டில் பாய்ந்து வந்து அவன் முன்னால் நிற்பான்.

''மொதலாளிக்கு ஒரு கிளாஸ் டீ கொடு.''

அந்த மொதலாளிதான் ஜான். முழங்கைக்கு மேலே மடித்த முழுக் கைச் சட்டையும் கறுப்பு முழுச் சராயுமாக ஸ்டூலின் மேல் காலை மடித்து உட்கார்ந்து கொண்டிருப்பான். எக்குச் சுருளாகக் குவிந்த கிராப்பு, வார வேண்டிய அவசியமே இல்லாமல். உதட்டுக்கு மேல் கீற்று விழுந்தாற் போல அரும்பு மீசை. வாய்க்குச் சிறிதும் ஓய்வில்லாமல் சிகரெட்டுப் புகை.

ஜான் ஒரு கடை முதலாளி. அவனைப் போலத் தொழில் செய்பவனல்ல. அவன் பார்வையிலேயே அது தெரியும். பேச்சிலும் அது தலை தூக்கி நிற்கும். சாமர்த்தியமாக இரண்டு நிமிஷங்களுக்கு ஒரு சிரிப்பை வரவழைக்கிற மாதிரி அவன் நயமாகப் பேசிக் கொண்டு போவான்.

அன்று மீனாட்சி கிராமபோன் பாட்டுக் கேட்டுக் கொண்டிருந்த போது அவள் எதிரே அவன் வந்து உட்கார்ந்து விட்டான். தாளம் போடுவதை அவன் கவனிப்பது தெரிந்ததும் வெட்கத்தில் விரல்களின் துடிப்பு நின்றுவிட்டது. கண் கொட்டாமல் அவன் பார்ப்பதைக் கடைக் கண்ணால் கவனித்துக் கொண்டாள். தலை குனிந்தாள்.

''இது ரொம்பப் பழைய ரிகார்டு.''

அவள் ஆச்சரியத்தோடு அவனை நிமிர்ந்து பார்த்தாள் அவன் சொல்லப் போவதை எதிர் பார்ப்பதைப் போலக் கைகளைக் குவித்துக் கொண்டாள்.

''புதுப் புது ரெகார்டுகள் எல்லாம் என் கிட்டே இருக்கு.''

"ஒங்க கிட்டே கிராமபோன் இருக்குதா என்ன?" என்று அவன் வியப்போடு கேட்டான்; குழந்தை புது விளையாட்டுச் சாமானைப் பார்க்கத் துடித்து நிற்பது போல.

"ஊம். நாளைக்குக் கடைக்குக் கொணாரேன் பாரு. வைச்சா சோதாக் கூட்டம் சேருமேன்னுதான் கொண்டாரலை."

"அப்போ வேணும்."

"ஏன்? கூட்டத்தைச் சொன்னேன். உனக்கு அது சேத்தி இல்லே."

அவள் சிரிக்கப் போவதை எதிர்பார்த்து அவன் கொல்லென்று சிரித்தான். அவள் சிரிப்பு அதில் கோத்துக் கொண்டது.

அடுத்த நாளே சைக்கிள் கடைக்கும் கிராமபோன் வந்து விட்டது. ஆனால் நான்கு மணிக்கு மேல் மீனாட்சி வருகிற வேளைக்குத் தான் பாட்டுக் கேட்கும். தினமும் டீ குடிக்க வரும்போது அவனும் அதை எதிர்பார்த்துக் காதைத் தீட்டிக்கொண்டுதான் வருவான். அவசரம் அவசரமாக டீயைக் குடித்துவிட்டு அங்கே போய் விடுவான்.

டீ போட்டுக் கொண்டிருக்கும் ரத்தினம் ஒரு கணம் கை ஓடாமல் அப்படியே நின்று விடுவான். நெஞ்சில் ஒரு நமைச்சல், கசப்பை விழுங்குவது போல் அதை அப்படியே அமுக்கிக்கொண்டு மறுபடியும் வேலை செய்ய ஆரம்பித்துவிடுவான்.

ஒரு நாள் கூடையோடு பின்னல் நாரும் ஊசியும் கொண்டு வந்தாள் மீனாட்சி. மேஜை முன்னால் உட்கார்ந்து கொண்டு, குரல் கேட்காமல் முணு முணுத்தபடி, ஊசியை ஓட்டிக் கொண்டிருந்தாள்.

"ஏது இது?"

"டவுனிலிருந்து வந்தது."

"எப்போ?"

"ரெண்டு நாளாச்சு."

"நீ டவுனுக்குப் போயிருந்தாயா?"

அவள் தலையை ஆட்டினாள். பார்வை சைக்கிள் கடைப் பக்கம் திரும்பியது. அவன் மேலே கேட்கவில்லை.

சில சமயம் கடையிலிருந்து புறப்பட நேரமாகி விடும். அப்போது கூடையைச் சுவாதீனமாகச் சைக்கிள் கடையில் வைத்து விட்டுப் போய் விடுவாள். அவன் வாசலில் நின்று பார்த்துக் கொண்டே இருப்பான். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஜான் சைக்கிளின் பின்புறம் கூடையைக் கட்டி எடுத்துக் கொண்டு போவதை. கடைப் பையன் குறும்பாகச் சிரித்துக் கொள்வது தெரியும். டீக் கடையிலேயே சில்லறைப் பேச்சுக்கள் நடமாடும். அந்த நேரங்களில் தன் மேலேயே ஏதோ குற்றச் சுமை விழுந்தாற்போல் அவன் மனம் பொருமும். அவன் என்ன பதில் சொல்வது? யாரிடம் சொல்வது? என்ன பாத்தியதை அவனுக்கு?

**வி**டியற்காலை நேரம். ஆற்றில் புது வெள்ளம் சுழித்துக் கொண்டு ஓடிற்று. பல் விளக்கிக் கொண்டு கல்லின் மேல் உட்கார்ந்துகொண்டிருந்தான் ரத்தினம். பின்னால் ஒரு சினிமாப் பாட்டு முணுமுணுக்கும் சத்தம் கேட்டது. மெல்லிய குரலில் அப்படி முனகுவது வாயை விட்டுப் பாடுவதை விட இனிமையாக இருக்கும். அந்த மெல்லிசை அவன் நெஞ்சை நனைத்த நாட்கள் உண்டு. இப்போது அது வெறும் குரல் ஒலியாக இல்லை. அவன் இதயத்தையே கிழிக்கும் வேதனை முன்னாகத் தோன்றியது. அவன் திரும்பவில்லை.

"நீ பேசமாட்டே?"

கேலிச் சிரிப்பும், குதித்து வரும் வார்த்தைகளுமாக அதே குரல். அவன் நெஞ்சு ஏங்கியது. அந்தப் பரிவின் உரிமை யாருக்கு?

அவள் கண்ணெதிரே கைகளைப் பட்டென்று பின்புறமிருந்து தட்டினாள். கொஞ்சி நெளிந்த வளையல்கள் லாகவமாகப் பதுங்கிக் கொண்டன.

"ஒனக்கு என் மேலே கோபமா?"

பல் குச்சியைத் தண்ணீரில் எறிந்துவிட்டு அவன் திரும்பினான். அவனால் அதற்கு மேல் அவளிடம் கடுமையாக இருக்க முடியவில்லை.

"இல்லையே, மீனாட்சி."

"அப்போ நான் ஒண்ணு கேட்கலாமா?"

"எது வேணுமானாலும் கேளு."

"கேட்டால் கொடுப்பியா?"

"கொடுக்கிறேன். எப்படியானாலும்."

"இருநூறு ரூவா பணம் வேணும்."

சட்டென்று அவன் உட்கார்ந்திருந்த கல்லைப் பிடித்துக் கொண்டான். அந்த ஆட்டம் தண்ணீரின் அலைப்பில் இல்லை. அவன் பிடியிலுமில்லை. நெஞ்சின் அதிர்ச்சியில்தான் இருந்தது.

மீனாட்சிக்கு எதற்கு இருநூறு ரூபாய்? அதை அவனிடம் கேட்பானேன்? அவனை விடப் பண வசதியுள்ள ஜான் அவளுக்குப் பழக்கம் இல்லையா? தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். அவள் அப்படிக் குன்றிப் போனதைக் காணக் கூசினாற்போல் அவன் பார்வை மங்கியது.

"சரி! இல்லேன்னு உட்டுடு. சும்மாத் தான் கேட்டேன்."

அவன் நிமிர்ந்து பார்த்தான். அவள் கண்களில் ஒளி தவழ்ந்து ஓடியது. பார்வையில் அவனை இழுத்து நிறுத்தும் கவர்ச்சி. அதை மறுக்கும் தைரியம் அவனுக்கு இல்லை.

"கொடுக்கிறேன், மீனாட்சி! மொதலாளி கிட்டக் கொடுத்து வைச்சிருக்கேன். ஆனால் ஒரு சமாசாரம்."

"என்ன?"

"அது ஜானுக்குத் தெரிய வேண்டாம்."

அவள் சட்டென்று முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள். அந்த வார்த்தையை எதிர்

### எப்படி வரும்?

**ஹோட்டல் மானேஜர்:** (முதல் நாள் புதிதாக வந்து தங்கியவரைப் பார்த்து) என்ன ஸார்! இராத்திரி நீங்கள் நன்றாய்த் தூங்கினீர்களா?

**புதியவர்:** (அலுப்புடன்) இல்லை ஸார். இராத்திரி முழுவதும் கண்ணை மூடவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

**ஹோட்டல் மானேஜர்:** அடடா! கண்ணை மூடாவிட்டால் எப்படி ஸார் தூக்கம் வரும்?

பார்த்திருந்தாலும் அப்போது ஏற்க மனமில்லாதது போல் ஒரு தயக்கம்.

''அந்தப் பேச்சு ஏன்?''

''இல்லை மீனாட்சி. சொன்னேன்.''

''நீ சொல்லியிருக்க வேண்டாம்.''

அவன் பதில் சுட்டது. அவளைத் தடுத்து நிறுத்தி விட்டாற் போல் 'அப்படி ஒரு சொல்.

அவள் பிரிந்து அவிழ்ந்த கூந்தலை வாரி முடிந்து கொண்டாள். ஒவ்வொரு அசைவிலும் அழகு கோலமிட்டது. ஆனால் அந்த ஒளிவிடும் வனப்பு, அந்த வேளையில் நெருப்பாகத்தான் சுட்டது. மனத்தில் என்னென்னவோ எழும்பிக் குழம்பியது.

''இனிமேல் கேட்க மாட்டேன் மீனாட்சி!''

அன்று சாயங்காலம் அவளே கடைக்கு வந்த போது கைக் குட்டையில் முடிந்த பணத்தை அவனிடம் கொடுத்து விட்டாள். அவள் நேரே சைக்கிள் கடைக்குத்தான் போனாள்.

அவனுக்குத் தெரிந்ததுதான், அந்தப் பணம் ஜானுக்குத்தான் போகுமென்று.

ஆனால் அதற்கு அவனுக்கென்ன ஆட்சேபம்? அவளிடம் அவனுக்கு என்ன உரிமை? அவளைத் தடுக்கவோ, புத்தி சொல்லவோ அவன் யார்?

அவன் மனத்தில் துடிக்கும் அந்த ஏக்கத்துக்குத்தான் என்ன பொருள்? பொறாமையா அது? சம நிலையில் இருப்பவர்கள் பொறாமைப் படலாம். ஜானின் பேரில் பொறாமைப்பட அவனுக்கு ஏது யோக்கியதை? அவனைவிட அவன் எவ்வளவோ அதிர்ஷ்டசாலி அல்லவா? அந்தஸ்தை அடைந்ததில் மட்டுமல்ல; மீனாட்சியை அப்படிக் கவர்ந்து விட்டதிலும்தான்.

இருந்தும் அந்த நிகழ்ச்சிக்கு அவன் தயாராகத்தான் இல்லை. இரண்டாம் நாள் சைக்கிள் கடை காலியாக இருந்தது. மீனாட்சியை ஊரில் காணோம்.

ஆறுமாதங்கள் ஓடிவிட்டன. அவர்கள் போன இடம் தெரியவில்லை. அவன் விசாரிக்கவும் இல்லை. பேசாமல் சிரிக்காமல் பார்வை நிமிராமல் வேலையை மட்டும் பார்த்துக் கொண்டு ஒதுங்கிக் கொள்ள அவன் பழகி விட்டான்; அந்த வாழ்க்கையில் அவன் ஊறி விட்டான்.

எப்போதாவது நினைவு குமுறும். தனிமை தாங்காமல் மனம் புலம்பும். ஆற்றங்கரையில் அந்திக் கருக்களில் யாரும் பார்க்காத இடமாக உட்கார்ந்து கொண்டு முகத்தை மூடிக் கொண்டு தேம்புவான்.

கடையில் சினிமாப் பாட்டு கேட்கும் போதுதான் அவனால் சமாளிக்க முடியாது. வெளியே போய் வரும் சாக்கில் கடையிலிருந்து நழுவிவிடுவான்.

அப்படி ஒரு நாள் புறப்பட்டுக் கொண்டிருந்த போதுதான் பட்டாளத்திலிருந்து விலகி வந்த ஆள் ஒருவன் அவனை நிறுத்தி வைத்து ஜானைப் பற்றி விசாரித்தான். ஒரு நிமிஷம் அவனுக்கு எந்தப் பதிலும் சொல்லத் தயக்கம்.

''ஜான் கடையை எடுத்துக் கொண்டு போய் விட்டான். இந்த ஊரில் இல்லை.''

''எங்கே போனான்?''

''தெரியாது.''

''அந்த ஆள் வியவகாரமே இப்படித்தான். நைச்சியமாகப் பழகுகிறது. சிநேகம் பண்ணுகிறது. கைமாற்று வாங்குகிறது. தகவல் சொல்லாமல் ஓடி விடுகிறது.''

காதில் ஏதும் விழாதது போல் இருக்க முயன்றான் ரத்தினம். ஆனாலும் மனம் கேட்கவில்லை. அவனுக்கு ஜானைப் பற்றி அதிகம் தெரியாது. தெரிய வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால் அவன் எப்படிப்பட்டவன்? மீனாட்சியை அவன் ஒழுங்காக வைத்துக் கொள்வானா? அந்தப் பெண் அவனிடம் ஏமாறாமல் இருப்பாளா?

''உனக்கு ஏதாச்சும் கொடுக்க வேண்டியது பாக்கியா?''

ரத்தினம் சொல்ல வாயெடுத்ததைச் சட்டென்று விழுங்கி விட்டுத் தலையை ஆட்டினான் அவன். கொடுத்த தொகை கடன் அல்ல. அவர்கள் சௌக்கியத்துக்காக அளித்த பரிசு. அதையும் ஜானையும் சேர்த்துப் பேச வேண்டாம் என்று மீனாட்சியே சொல்லியிருக்கிறாள். அதை அவன் மீற மாட்டான்.

''கேட்டேன். இங்கேகூட யாரோ ஒரு பெண்ணை—''

அதற்குமேல் கேட்க அவனுக்குப் பொறுமை இல்லை. வேலை இருக்கிறதென்று சொல்லி விட்டுக் கடைக்குத் திரும்பி விட்டான். அவனைப் பொறுத்தவரை மீனாட்சி பேரில் தப்பு இல்லை. இன்னும்தான். அவள் அவனுடைய மதிப்பீடுகளின் எல்லைகளுக்கு அப்பாற்பட்டவள். அந்த நினைவை அவனால் போற்றத்தான் முடியும்; ஆராய முடியாது.

வேனில் பிறந்து விட்டது. மீனாட்சி போய்க் கிட்டத்தட்ட இரண்டு வருஷங்களாகி விட்டன. அவள் எங்கேயாவது சந்தோஷமாக இருப்பாள். இப்போது அவர்களுக்கு ஒரு குழந்தைகூட இருக்கலாம்.

இரவு எட்டு மணி. அன்று சந்தை நாள். கூட்டம் அதிகம். வியாபாரம் அதிகம். உள்ளே உட்கார இடம் இல்லை. கடை வாசலில் இரண்டொருவர் நின்று கொண்டு டீ குடித்துக் கொண்டிருந்தார்கள்.

படி ஓரம் முக்காடிட்டுக் கொண்டு ஓர் உருவம் வந்து நின்றது. பிச்சை கேட்கத்தான் இருக்கும். முதலாளி பார்த்தால் சத்தம் போடுவார். இடுப்பு முடிச்சைப் பிரித்து ஒரு நாணயத்தை எடுத்துக்கொண்டு முன்வந்து ரத்தினம் நீட்டினான்.

''இந்தா, பிடி!''

கை நீளவும் இல்லை. தாழ்ந்து ஏற்கவும் இல்லை. முக்காட்டின் பின்னாலிருந்து ஒரு விம்மல் மட்டும் தெறித்து விழுந்தது.

''ரத்தினம்!''

அந்தக் குரலைப் புரிந்துகொள்ள அவன் முகத்தைப் பார்க்க வேண்டியதில்லை.

மீனாட்சி !

உனக்கா பிச்சை போட வந்தேன்? இந்தச் சந்திப்புக்காகவா நான் இத்தனை நாட்களும் காத்திருந்தேன்?

அவள் பேசக்கூட இல்லை. அவள் முக அவஸ்தையை அவன் பார்த்து விட்டான். மேலும் வருத்த மனமில்லாமல் அந்த இடத்தை விட்டே போகத் தொடங்கினாள்.

ரத்தினம் அவள் பின்னால் ஓடினான். அவன் திரும்பும் உத்தேசத்தோடு போகவில்லை; அவள் முன்னால் போய் நின்று கொண்டு அவளைத் தடுத்தவரையில்.

# பாரதி கலா மன்றம் (Regd.)

மோடி மிஹா, பிராமணவாடா ரோடு, மாதுங்கா, பம்பாய்-19

(போன் 471865)



நாடக விழா - 1963 (நூல் நிலைய கட்டிட நிதிக்காக)

நடிகர் திலகம் **சிவாஜி கணேசன்** அளிக்கும்

சிவாஜி நாடக மன்றத்தாரின் மூன்று புதிய நாடகங்கள்

| A பிரிவு | | B பிரிவு |
|---|---|---|
| 17-1-63 இரவு 8 மணி | **தேன் கூடு** | 18-1-63 இரவு 8 மணி |
| 19-1-63 இரவு 7 மணி | **ஜஹாங்கீர்** | 20-1-63 இரவு 7 மணி |
| 21-1-63 இரவு 8 மணி | **நீதியின் நிழல்** | 22-1-63 இரவு 8 மணி |

இடம்: காஸ்மாபாலிடன் விளையாட்டு மைதானம்
கிங்க்ஸ் சர்க்கிள் ரயில்வே ஸ்டேஷன் அருகில், மாதுங்கா, பம்பாய்-19

| கட்டணம்: | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| சீசன் | ரூ. | 100/-, | 60/-, | 30/-, | 12/-, | 9/-, | 7/- |
| தினசரி | ரூ. | ... | ... | 15/-, | 5/-, | 4/-, | 3/- |

(நாடகம் முடிந்ததும் செம்பூர், காட்கோபர், அந்தேரி, குலாபா, வர்லி மற்றுமுள்ள இடங்களுக்குப் போவதற்கு பஸ் வசதிகள் உண்டு)



இவ்விழாவில் வசூலாகும் தொகையிலிருந்து கணிசமான தொகை ஒன்று தேசிய பாதுகாப்பு நிதிக்கு அளிக்கப்படும். ஏற்கனவே மன்றத்தார் ரூ. 1001 தேசிய பாதுகாப்புக்கு அளித்துள்ளனர்.



டிக்கட்டுகள் கிடைக்குமிடம்: (1) ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஸ்டோர்ஸ், மாதுங்கா தபால் தந்தி ஆபீஸ் அருகில் - (2) பாரதி கலா மன்றம் (Phone 471865)

இருவரும் அவன் அறைக்குப் போய்ச் சேரும்போது மணி பத்து.

அவன் அப்படி வந்து இருக்கச் சம்மதித்ததே ரத்தினத்துக்குத் திருப்தியாக இருந்தது. அவன் அவளை ஒன்றும் கேட்கவில்லை. அவளுடைய பழைய பேச்சு, சிரிப்பு எதையுமே இப்போது காணவில்லை. ஒட்டிய கன்னத்துச் சதையில், நரை காணத் தொடங்கிவிட்ட கூந்தலில், குழி விழுந்த கண்களில், அவள் சிதைவு தெரிந்தது. அவன் அதைப் பற்றி மேலும் கேட்க விரும்பவில்லை.

இருந்தும் பேச்சுவாக்கில் அவர்களையும் மீறி ஜானைப் பற்றி ஏதாவது ஒரு குறிப்பு வந்து விடும். அப்போது அவள் குரல் நின்று போகும். வெறுப்புக் கொந்தளிப்புப் பொங்கி வழியும் முகச் சுளிப்பு. சாம்பல் பூடாய் வற்றிப் போன ஆசைகளின் நிழல் தெரியும் பார்வை. கன்னத்தில் கண்ணீர் சில்லிடும்.

ஜான் அவளை ஏமாற்றி விட்டான். இப்போது அவன் ஞாபகம் வெறும் பொருமல் தான். ஆனாலும் அவள் இன்னும் நினைவு முகம் மறக்கவில்லை; அவனை வெறுக்கவும் அவளால் முடியவில்லை. அதுதான் அவள் படும் அவஸ்தை.

ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது. கட்டிலை விட்டு இறங்கி நிற்கக் கூடத் தெம்பு இல்லை. வாங்கிக் கொடுத்த ஆரணம், பழம், இங்கிலீஷ் மருந்து, மாத்திரை எதுவுமே உடம்பில் உறைக்கவில்லை. இரவு முழுதும் கொல்லு கொல்லென்று இருமல். உடம்பில் சவலை வெளுப்பு. கண்ணில் ஈரமில்லாமலே கண்ணாடிப் பளபளப்பு. மெலிந்து தேய்ந்த உடலில் பச்சை நரம்பின் புடைப்பு தெரிந்தது.

''நாளைக்கு உனக்குத் தொந்தரவு கொடுக்க நான் இருக்க மாட்டேன்.''

''நீ இப்படி எல்லாம் பேசக் கூடாது.''

''இருந்ததெல்லாம் போதாதா?''

''பேசாமல் படுத்துக் கொள். மீனாட்சி! எனக்காக—''

அவள் பேச்சை நிறுத்திவிட்டு அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். அது அவன் வருத்தத்தைத் தூண்டும் விதமாகவே இருந்தது. இன்னும் அவள் மேல் அவனுக்கு எத்தனை பரிவு? அதற்குப் பதில் செய்ய அவளிடம் என்ன இருந்தது?

''ரத்தினம்!''

அவள் குரலில் புத்துணர்ச்சி மலர்ந்தது. அவள் முகத்தருகே அவன் குனிந்தான்.

''நீ என்னை அப்படிப் பார்க்கும் போது என்னை ஏதோ கேட்க ஆசைப்படுவது புரிகிறது. நீ அதை எப்பவும் கேட்கக் கூடாது என்கிறதுதான் என் ஆசை. உனக்கு அது கிடைக்க எல்லா யோக்கியதையும் இருந்தப்போ நான் அதைக் கொடுக்க மறுத்துவிட்டேன். இப்போது நீ கொடுக்க வரப்போ, எனக்கு வாங்கிக்க யோக்கியதை இல்லை.''

தணற்குடு தாங்காதவன் போல் அவன் துடித்துப் போனான். விரல்களால் அவள் வாயைப் பொத்தினான். ஆனால் அவள் பேச்சு அடங்கவில்லை. 'என்னைப் பேச விடு' என்று கேட்பது போலப் பார்வையில் ஒரு கெஞ்சல். அவன் விரல்கள் நழுவின.

''நான் அடிக்கடி நினைக்கிறதுண்டு, உனக்கு நான் தங்கையா பிறந்திருக்கக் கூடாதா என்று? உன் சுகசௌக்கியம் எல்லாத்தையும் நான் கருத்தா அக்கறையாகக் கவனிச்சிருப்பேன். என் மனசிலேயும் வேறே எந்த ஏமாற்றமும் இருந்திருக்காது. அந்த மாதிரி ஒரு பிரியம் அபூர்வமானது. அதுக்கு நான் கொடுத்து வைக்கவில்லை!

''எல்லாத்தையும் வாங்கிக்கிட்டு நான் போறேன். உனக்குக் கொடுக்க என்னிடம் எதுவுமே இல்லை. என்னை உட்டுடு. நீ அழக் கூடாது என்று சொல்ல ஆசையா இருக்கு. ஆனால் எனக்காக ஒருத்தராவது அக்கறை காட்டுகிறதைப் பார்க்கவும் துடிப்பாக இருக்கிறது. அதை நான் புரிஞ்சுக்கிட்டேன் இப்போ. நான் அனாதை இல்லை. அந்த நெனைப்பு எனக்கு எவ்வளவோ ஆறுதலாக இருக்கு!''

திடீரென்று மனம் குழைந்த கனிவில் அவனால் தாங்க முடியவில்லை. கொஞ்ச நேரம் இருவரும் பேசவில்லை.

பிறகு அவளே மீண்டும் பேசினாள்.

''ஒன்னு செய்வியா ரத்தினம்?''

''என்னது?''

''இன்றைக்குத் தாங்காது. பாதிரியாரைக் கூப்பிடு.''

நெருப்பை மிதித்தவன் போல் அவன் சரேலென்று பின்வாங்கினான். அது வரை அவனுக்குத் தெரியாத உண்மை அது. அவள் தலை நழுவித் தரையில் புரண்டது. முகத்தைத் திருப்பிக் கொண்டான் ரத்தினம்.

''உனக்குக் கடைசியாச் சொல்லணும்னு இருந்தேன். நான் மதம் மாறி இரண்டு வருஷங்களாச்சு.''

அவன் அதிர்ந்து போய் நின்றான்.

அறைக்குள் அவள் முணுமுணுப்பு கேட்டது. பக்கத்தில் பாதிரியார் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தார். அவள் குரலில் சிவன் இல்லை. ஆனால் முகத்தில் மட்டும் ஏதோ தரிசனம் கண்டாற் போலப் பிரகாசம். அவனுடைய வாழ்க்கையில் அனுபவித்த சொற்ப நாட்களின் இன்பம், ஜான் அவளிடம் இருந்த போது காட்டிய பிரியம், அவர்களுக்குப் பிறந்து பத்து நாட்கள்வரை வாழ்ந்து விட்டு மறைந்து போன குழந்தையின் முக ஞாபகம் – எல்லாம் அவள் பேச்சில், பார்வையில் நிறைந்து நின்றது போன்ற தோற்றம்.

பாதிரியார் எழுந்து வந்து அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தார். அவனுக்குப் புரிந்து விட்டது. அதற்கு மேல் அடக்க முடியவில்லை. கடித்த உதட்டைத் திறந்து விட்டு வாய் விட்டு அழுதான்.

மீனாட்சியின் அடக்கம் ஆகிவிட்டது. சர்ச் ஓரம் அந்த இடத்தில் தலைமாட்டில் ஒரு கல். மேலே ஒரு கொத்துப் பூ.

நிழல் குறுகும் வேப்ப மரம். அதன் அடியில் அதே மாம்பழ வண்டி. உள்ளடங்கினாற் போல் மக் கடை.

கிராமபோன் தட்டு பாட்டு கேட்கிறது.

ஆனால், கடை வாசலில் டீ ஆற்ற அடுக்கி வைத்திருக்கும் கண்ணாடித் தம்ளருக்குப் பக்கத்தில் ரத்தினத்தின் முகம் தெரியவில்லை.

அவன் எங்கே போனானென்று யாருக்கும் தெரியாது.

ரகு அகில இந்தியச் சிறுகதைப் போட்டியில் நீங்கள் முதல் பரிசு பெற்றதைச் சொல்லவே இல்லையே?

உன் நினைவின் இனிய எண்ணங்களிலே உருவான கதை தானே அது சிவகாமி. உனக்குச் சொல்லாமலா?

# சந்திரனே சாட்சி

3

அகில இந்தியப் புகழ் பெற்ற எழுத்தாளராகி விட்டார். இனி நாமெல்லாம் அவருக்கு லட்சியமா சிவகாமி?

கதை: கௌசிகன்
சித்திரம்: வினு













ரகுநாதனுக்காகச் சிவகாமி காத்திருக்கும் போதெல்லாம் தனபால்தான் வருகிறான்.
அட, சிவகாமியா? ரகுநாதனுக்காகவா காத்துக் கொண்டிருக்கிறாய்? அவன் இத்தனை நேரம் ஷீலாவின் காரில் அவளுடன் போய்க் கொண்டிருப்பானே.
ஷீலாவா? அது யாரது?
படம் ஆரம்பமாகி விட்டது உள்ளே போய் உட்கார்ந்து பேசலாம் வா.


கங்காணி சிங்காரத்தைத் தெரியுமல்லவா? அவன் பெண் தான் ஷீலா. பத்திரிகை நடத்தப் பண உதவி செய்... காக அவளை மணம்புரிய வாக்களித்திருக்கிறான் ரகு.
என் ரகுவா? இருக்கவே இருக்காது.


தனபால் என் போல நீ என்னுடன் சகஜமாகப் பழகுவதில்லை. என் இலக்கிய முயற்சிகளுக்கு உதவுவாய் என்று நம்பி ... தேன்
ஊரில் உள்ள பெரும் புள்ளிகளை எல்லாம்தான் விளாசித் தப் போட்டிருக்கிறயே...


சிவகாமி, என்னைப் பற்றி உன்னிடம் யாரோ தவறான எண்ணங்களை விதைத்திருக்கிறார்கள். தனபாலும் கூட அதுமாதிரியாகப் பேசிப் பழகுகிறான்...
உங்களுக்குத்தான் எங்களுடன் பேச ...மில்லை. பிடிக்கவுமில்லையே.


ஒரு முக்கியமான விஷயம் சிவகாமி. துரைசாமியைத் தெரியுமல்லவா உனக்கு?
தெரியாமலென்ன? அவர் நோட்டுகளில் ஒருமாதிரி என்றாலும் இப்போது ஊராருக்குத் தெரியுமானவர்
நாளை மாலை என் வீட்டுக்கு வா. ஒரு பெரிய உண்மையை அறிந்து கொள்ளலாம்.


கரெக்டாக வந்து விட்டாயே! நீ வந்திருப்பது யாருக்கும் தெரிய வேண்டாம். இந்த அறைக்கு வா.
தனபால் ஏன் ஆவலை அதிகமாக்குகிறீர்கள். எந்த உண்மையைக் காட்டப் போகிறீர்கள்?

உன் ரகுவின் உண்மை வடிவத்தை இன்னும் சற்று நேரத்தில் காணப் போகிறாய். ஹாலில் துரைசாமி இருக்கிறார். அவரைச் சந்திக்க ரகு.. அதோ வந்து கொண்டிருக்கிறான். அந்த அறையில் அவர்கள் பேசும்போது நான் கூட இருப்பேன். இங்கிருந்தபடியே அவர்கள் பேசுவதை நீ கேட்க வசதி செய்திருக்கிறேன்.

"நான் கேட்டிருந்த தொகையைக் கொடுக்கிறீர்களா, அல்லது..."

இது மோசடி. பகல் கொள்ளை..

"நீங்கள் உபயோகிக்கும் இந்த மாத்திரைகளை... போதும். உங்களைப் பற்றி நான் எழுதப் போகும்... மாத்திரைகள் அதிப்பில் உபயோகிக்கப் பட வேண்டியவைகளல்லவா?"

"கௌரவமான பத்திரிகைத் தொழிலை வைத்துக் கொண்டு இந்த அசிங்கமான நடத்தையில் ஈடுபட வேண்டாம்."

"எனக்கு உபதேசம் தேவையில்லை. பணம்தான் தேவை."

"பணத்துக்காக எதுவும் செய்யும் பேயன் நீ"

"இருக்கலாம். ஆனால் மக்கள் அதை நம்ப வேண்டுமே!"

சிவகாமி கேட்டாயா?

மெதுவாகப் பேசு

இப்போ, போதும் போதும் என்ன அவமா இது? யாரைப் பண்புள்ளவர் என்று எண்ணிப் பெருமை கொண்டிருந்தேனோ அவரா இவர்?

அன்றிரவு சிவகாமிக்கு டெலிபோன் வருகிறது.

ஹலோ நான் துரைசாமி பேசுகிறேன். பத்திரிகாசிரியர் ரகுநாதனுக்குத் தாங்கள் மிகவும் நெருங்கியவர் என்று அறிந்தேன். அவருடைய நன்மையை உத்தேசித்துத் தாங்கள் உடனே என் வீட்டிற்கு வர முடியுமா?

அவசியம் வருகிறேன்.

அம்மா என் சிநேகிதி ஒருத்திக்கு உடல் நலமில்லையாம். பார்த்து விட்டு வருகிறேன்.

இரவு இத்தனை நேரத்துக்கு மேலா!

நல்ல நிலா அடிக்கிறது. கவலைப் படாதேம்மா.

ரகுநாதனை இந்தக் கேவலமான செய்கையிலிருந்து எப்படியும் திருத்தாக வேண்டும். அதோ... அந்த உருவம்... யார்...?

ஹா, இப்போ! நீங்களா! இது... இது துரைசாமி யல்லவா? கொலை.. கொலை செய்து விட்டீர்களே....

தொடரும்

# உங்கள் வீட்டுக்கும் ஆபீசுக்கும் ஏற்றவை...



# கீரா ஸ்டீல் பீரோக்கள்

கீரா ஸ்டீல் பீரோக்கள், நவீன மெஷின்களை அமைத்து, புதிதாக விஸ்தரிக்கப்பட்ட எமது பம்பாய் தொழிற்சாலையில், நூதனமான உற்பத்தி முறைகளைக் கையாண்டு தயாரிக்கப்படுகின்றன.

கீரா ஸ்டீல் பீரோக்கள் துருவும் அரிப்பும் ஏற்படாமலிருக்க பிரத்தியேக முறையில் தயாரான ஸ்டீலினால் ஆனவை. இவை மூன்று விதங்களில் பூட்டும் வசதியும், விரும்பியபடி மேலும் கீழும் பொருத்திக் கொள்ளக் கூடிய தட்டுக்களும் பெற்றவை... அழியாத மெருகுடன் விளங்குபவை.




கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிட்., பம்பாய்-54

*அங்கீகாரம் பெற்ற டீலர்களும் ஸ்டாக்கிஸ்டுகளும்*

சென்னை: வில்லியம் & ஜாக்ஸ் கோ. லிட்., மகமத் இப்ராஹிம் & கோ. பிரைவேட் லிட்., இந்தியன் ரேடியோ ஹவுஸ், ஆம்னன் & கோ., - கோயமுத்தூர், ஈரோடு, சேலம்: ராயல் டிரேடிங் கோ. எர்ணாகுளம், திருச்சூர்: 'சாரோலக்' சி. பி. ஜோனப்பன் & சன்ஸ் - ஆலப்புழை, கோட்டயம்: வாசன் & கம்பெனி - கும்பகோணம், மதுரை, திருச்சிராப்பள்ளி: ஸ்ரீ கணேஷ் ஸ்டோர்ஸ் விசாகப்பட்டினம்: காவேரி ஏஜன்சீஸ் - பாண்டிச்சேரி: இந்தியா ரேடியோ ஹவுஸ் விஜயவாடா, ராஜமகேந்திரபுரம்: ஸ்ரீ ராமா கார்ப்பொரேஷன் - திருநெல்வேலி, நாகர்கோவில்: ஏ.ஆர். ஏ. செண்பக நாடார், பி.வி.பி. வாலசுப்ரமணிய நாடார் & கம்பெனி - கள்ளிக்கோட்டை: கே. என். பார்த்தசாரதி & சன்ஸ் மற்றும் பெங்களூர், மங்களூர், மைசூர், பாலக்காடு, கொல்லம்

---

**பாதுகாப்பு சேமிப்புப் பத்திரங்களிலும் சர்டிபிகேட்டுகளிலும் முதலீடு செய்யுங்கள்**

# கனவு

அவள் எழுதிய கடிதம்தான் அது; அதை இன்னொரு முறை படித்துப் பார்த்தாள்:

''சிரஞ்சீவி ராகவனுக்கு அம்மா அநேக ஆசிகள்; உன்னிடமிருந்து வெகு நாட்களாகக் கடிதம் வரவில்லை. நான் மட்டும் எழுதிக் கொண்டே யிருக்கிறேன். என் கைப்பட எழுதுவதானால் இதுகூட நடக்காது. ஏதோ அந்தப் பெண் ஒருத்தி எனக்குக் குமாஸ்தா போலக் கிடைத்ததினால் ஒன்றுக்குப் பின் ஒன்று என்று தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறேன். ஒரு வாரத்துக்கு ஒரு கார்டு எழுதி உன் சௌக்கியத்தைத் தெரிவித்தால் என்ன? உன் சௌக்கியம் பற்றித் தெரிந்து கொள்ள



முடியாமலிருந்த ஒரு பத்தாண்டுக் காலத்தில் கூட நான் இவ்வளவு தவித்ததில்லை; நீ புனர்ஜன்மம் எடுத்தது போல் மறுபடியும் எனக்கு எழுதத் தொடங்கிய பிறகு தினம் ஒரு கடிதம் உன்னிடமிருந்து வந்தால்கூடத் தேவலை என்று ஆசைப்படுகிறேன். இந்தக் கடிதத்துக்காவது பதில் கடிதம் எழுது....''

அவள் கடிதம் எழுதி முடித்த மறுநிமிஷம் தெருக் கோடியில் இருந்த தபால் பெட்டியில் கடிதத்தைப் போட்டுவிட்டு வருவதற்காக வெளியில் சென்றாள்.

நாலு நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் அவள் அந்த வீட்டு அம்மாளின் முன்னால் ஒரு பாத்திரத்தைக் கொண்டு வந்து வைத்து விட்டு, ''இதை எடுத்துக் கொள்ளுங்கள், மாமி. இன்னும் கொஞ்ச நேரத்தில் வருகிறேன். வீட்டில் கைவேலைகளைப் பாதியில் போட்டு விட்டு வந்திருக்கிறேன்'' என்றாள்.

''என்ன இது?'' என்று கேட்டாள் அந்த அம்மாள்.

''சர்க்கரைப் பொங்கல்.''

''இன்றைக்கு என்ன, ஸ்ரீராமநவமிக்காகப் பண்ணியதா?''

''ஆமாம்; எங்கள் வீட்டில் பண்ணியதில்லை; கோயில் பிரசாதம்.''

''கோயில் பிரசாதம் எத்தனை கிடைத்திருக்கும்? அதில் எனக்கே இவ்வளவு கொண்டு வந்திருக்கிறாயே!''

''கோயிலில் என் தகப்பனார் மடைப் பள்ளியில் வேலை பார்க்கிறார். அதனால்.....''

''ஓஹோ! சரி, இருக்கட்டும்; நீ போய் விட்டு வா. வேலை கிடக்கிறது என்கிறாயே.. இன்னும் நீ அன்றைக்கு எழுதின கடிதத்துக்குப் பிள்ளையாண்டானிடமிருந்து பதில் வரவில்லை; என்ன பிள்ளையோ!....''

அந்த அம்மாளின் தொண்டைக் கமறலைப் புரிந்து கொண்டு மௌனமாக வெளியேறினாள் அவள்.

தன் தகப்பனாரைப் பற்றிச் சொல்ல வேண்டிய சந்தர்ப்பம் இது வரை வந்ததில்லை; அதனால் பொதுப்படையாக, அவருக்குக் கோயிலில் வேலை என்று அந்த அம்மாளிடம் அவள் சொல்லி வைத்திருந்தாள். அந்த ஊரில் குடியேறி மூன்று மாதங்கள்தாம் ஆகியிருக்கின்றன. புதிய குடி என்று தெரிந்து அந்த அம்மாள் விசாரித்தபோது ஆரம்பத்தில் அவள் சுருக்கமாகத் தங்களைப் பற்றிச் சொல்வது போதும் என்று நினைத்தாள்; அதன்படி சொல்லியிருந்தாள். அந்த வீட்டிலேயே வந்து அதிகமாகப் பழக நேரும் என்று அவள் முன்னால் எதிர்பாராததுதான் இதற்குக் காரணம்.

வீட்டிலேயே வேலை இருக்கிறதென்று சொல்லி விட்டு வந்தாளே தவிர, அவளுக்கு வேலை ஒன்றும் ஓடவில்லை. 'மாமியிடம் இப்போது சொல்லி விட்டு வந்ததைப் பற்றி மாமி என்ன நினைக்கிறாளோ! நம்மைப் பற்றி இன்னும் கொஞ்சம் உயர்வாக இது வரை அவள் நினைத்திருந்திருக்கலாம். கோயிலில் மடப்பள்ளியில் வேலை செய்கிறவருடைய பெண் நான் என்று தெரிந்ததும் 'சு' என்று போயிருக்குமோ.... இன்னும் எப்போதாவது அவருக்கு எழுதப் போகும் கடிதத்தில் இதையும் பற்றி எழுதச் சொல்லி விடுவாளோ அந்த மாமி? ஆனால் எழுதப் போவது நான்தானே; இதையெல்லாம் பற்றி அவருக்கு எழுதாமல் விட்டுவிடுகிறேன்.... என்னைப் பற்றி ஏன் நான் இப்படி விமரிசனம் செய்து கொள்ள வேண்டும்? நான்



யார், எந்த மாதிரியான குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று அங்கே அவர் அலசப் போகிறாரா என்ன? நான் முன் பின் கூடப் பார்த்திராதவர் அவர். மாமிக்காக நான் எழுதும் கடிதங்களின் சாக்கில் அவருடைய நினைவாகவே என் மனம் ஏன் உருகிக் கொண்டிருக்கிறது?....

நினைவில் கேள்விகள் அடுக்கடுக்காய் ஏறிக் கொண்டன. சிலவற்றுக்கு அவளுக்குப் பதில் புரிந்தமாதிரி இருந்தது. சில கேள்விகள் வெறுமையாகவே நின்றன. ஆனால் கேள்விகளின் முடிவில் இனிமை உருவாகிக் கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள்.

சிறிது நேரம் கழித்து அவள் மறுபடியும் எதிர் வீட்டுக்கு வந்தாள். எதிர் வீட்டில்தான் அந்த அம்மாள் தனிக்கட்டையாக ஒரு பாலைவன வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தாள். வீடு சொந்த வீடு. ஊர்க் கோடியில் பெரிய பெரிய பண்ணை நிலங்களுக்கு நடுவே வில்லை போட்டாற்போல் ஒரு காணி நிலம் விட்டுப் போயிருந்தார் அவளது கணவர். அது சாப்பாட்டுக்கும் கொடுத்து மஞ்சள் துணி முடிப்புக்கு 'மேம்பண'மும் கொடுத்துக் கொண்டிருந்தது.

''வாடியம்மா, கோதை! நீ வைத்து விட்டுப் போன சர்க்கரைப் பொங்கலை அப்படியே விழித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன். அது என் ஞாபகங்களைக் கிளறி விட்டு எங்கெங்கோ 'ரவுண்ட்' அடித்துக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது!'' என்றாள் பெரியம்மாள்.

# நினைவாகியும்....

## வை. சுப்ரமண்யம்



''ஏன் மாமி அப்படி? நீங்கள் அதை இன்னும் சாப்பிடவில்லையா?'' என்று கேட்டாள் கோதை. தன் பெயரை இதுவரையில் அடிக்கடி அந்த அம்மாள் உபயோகிக்காததையும் கண்டுவந்திருக்கிறாள் அவள். இப்போது தன்னைப் பெயரைச் சொல்லி அழைத்ததுடன் கூட முன் போல் சாதாரணமாகவும் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டாள். தங்களுடைய குடும்ப நிலை பற்றி அம்மாள் மனத்தில் ஒன்றும் கொள்ளவில்லை என்பது கோதைக்கு உறுதியாயிற்று.

''என்றைக்கு நான் சாப்பிட்டேன், இதை நான் சாப்பிட? பத்து வருஷங்களுக்கு முன்னால் அது என் பிள்ளையுடன் சேர்ந்து என்னிடம் உத்தரவு வாங்கிக் கொண்டுவிட்டது! நான் அதைச் சீண்டுவதில்லை...''

பெரியம்மாள் பேசிக் கொண்டிருக்கும்போதே கோதைக்கு அவளுடைய வார்த்தைகளின் முடிவு உருவாக்கித் தரப்போகும் செய்தியை அறிந்து கொள்ளும் வேகம் உண்டாயிற்று. நிமிர்ந்து பார்க்கையில் வான் கோடியில் ஓர் ஒற்றை நட்சத்திரம் மினுமினுத்து ஏதோ சொல்லத் துடிப்பது போன்ற துடிப்பை அந்த வார்த்தைகளின் மூலம் அவள் தெரிந்து கொண்டாள்.

''என் பிள்ளைக்கு நான் எழுதுவது போல் நீ கடிதங்கள் எழுதிக் கொண்டிருக்கிறாயே கோதை; அதிலிருந்து ஒரு முக்கியமான நிகழ்ச்சி தெரிந்திருக்கும்: என் பிள்ளை ராகவன் பத்து வருஷங்களுக்கு முன்னால் இந்த ஊரை விட்டு ஓடி விட்டான்..''

''தெரியும் மாமி; நான் அந்தப் பேச்சை எடுத்து உங்கள் மனசை நோக அடிக்கக் கூடாது என்று உங்களிடம் ஒன்றும் கேட்டதில்லை.''

''அதனால் என்ன? ஆனால் இன்றைக்கு என் மனசு பழைய ஞாபகங்களைக் கிளறினதற்கு நீதான் காரணம். நீ நேரிடையாகக் காரணமாகி விடவில்லை. இந்தப் பிரசாதத்தைக் கொண்டு வந்து வைத்தாயே; இதன் மூலம்தான் காரணமாகிறாய். என்

பிள்ளை ஓடிப்போனதற்குக் காரணம்கூட ஒரு சாதாரணமான விஷயம்தான். அவனுடைய மாமா எங்கேயோ ஒரு பெண்ணை ராகவனுக்காக நிச்சயம் செய்துகொண்டு வந்தான். வீட்டிலே கலியாணப் பேச்சு நடந்துகொண்டிருந்தது. பிள்ளையாண்டான் வெளியே எங்கேயோ நழுவினான். வெட்கப்பட்டுக் கொண்டு அப்பால் போகிறான் என்று எல்லோரும் நினைத்தோம். மங்களம் தேடி வந்த வீடாயிற்றே என்று விருந்துச்சமையல்பண்ணி, சர்க்கரைப் பொங்கலும் பண்ணியிருந்தேன். பகல் மூன்று மணியாகியும் போன பையன் திரும்பி வரவில்லே. அவர் இருந்தார் அப்போது — இந்தக் கூத்தையெல்லாம் காண்பதற்கு. வயல் வெளிப் பக்கம் போய்ப் பார்த்து, தேடி, குடியானவர்களை அதட்டி மிரட்டிக் கேட்ட பிறகு தெரிந்தது: அவனைக் கேட்காமல் அவன் சுதந்திரத்தைப் பறிக்கிற மாதிரி கல்யாணம் நிச்சயம் செய்ய வந்திருப்பது தன்னை அவமானம் செய்ததுபோல் ஆயிற்றென்று சொல்லி எங்கோ ஓடிப் போய் விடப் போவதாகவும் சொன்னானும். எங்கெங்கேயோ தேடி, யார் யாருக்கோ எழுதி, தந்தி அடித்தெல்லாம் பார்த்தாயிற்று. பத்து வருஷங்கள் கழித்து அவனாக ஒரு கடிதம் எழுதினான், அதுவும் விலாசம் தராமல். சௌக்கியமாக இருக்கிறானாம்; அதுதான் விஷயம். அதன் பிறகு வந்த கடிதத்தில் விலாசம் கொடுத்திருந்தான். அப்பா போய்விட்டதும் தெரியுமாம். அந்தக் கடிதத்தில் என்னுடைய க்ஷேமத்தையும் கேட்டிருந்தான். என்ன பிள்ளை இவன்! அவனும் பிள்ளையா, தென்னம் பிள்ளையா, அடடா, சமர்த்தா? அப்பா போன பிறகும் ஓடி வராத ஓர் ஆத்மாவை எதில் சேர்க்கிறது?...."

பேச்சினால் மூச்சு இரைத்தது. தள்ளாமையினால் குரல் வெடவெடத்தது. கோதை அவளைத் தேற்ற முயன்றாள். சுருண்டு கிடந்த தாய்மையின் ஏக்கம் நலிந்து போன அந்த உடலையும் சதையையும் மீறிக்கொண்டு, அனல் வீச்சைப் போல் எழுந்து சிறுவதைக் கண்டாள்.

"இத்தனை கடிதங்கள் உன்னைக் கொண்டு அவனுக்கு எழுதச் செய்திருக்கிறேனே; ஒன்றிலாவது மறுபடியும் அந்தக் கல்யாணப் பேச்சை எடுத்திருக்கிறேனா, பார்! கோதை, உன்னைப் பார்த்தது முதல் என் பிள்ளையின் நினைவு எனக்கு அதிகமாகி விட்டது. உன்னையும் அவனையும் சேர்த்து மனதில் காணும் போது ஒரு பக்கம் மகிழ்ச்சியாகவும், மறு பக்கம் அதிர்ச்சியாகவும் இருக்கிறது. மறுபடியும் இந்தப் பேச்சை என் மூச்சு உள்ளவரையில் நான் எடுக்கப் போவதில்லே. அது ஒரு புறமிருக்கட்டும்; அவனைத் திரும்பி வா என்று கூட எழுத என் மனம் இடம் தரவில்லே. தனக்காகத் தோன்றாத பிள்ளைக்கு எழுதியா என் வயிற்றுத் தணலைக் காட்ட முடியும்? என் கடைசி மூச்சு தந்தியாக மாறி அவனைத் தேடிக்கொண்டு போய்க் கொள்ளிக் கடனுக்காக அழைத்து வந்தால் உண்டு; இல்லையென்றால் அதுவும் இல்லே...."

அவள் கண்களில் கண்ணீர் ஆழ்கிணற்றின் நீர்ப்பரப்பு போல் மங்கலாகத் தெரிந்தது.

கோதை சிந்தனையின் நடுவில் குழம்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். 'இப்படி ஒரு கல் மனக்காரரா?' என்று தோன்றிய நினைவை ஒப்புக் கொள்ள முடியாமல் அவள் மனம் அதை அழித்துக் கொண்டேயிருந்தது.

இதற்கிடையில் ராகவனின் தாயார் எழுந்து தள்ளாடிக் கொண்டே நடந்து ஒரு ஓலைப்பெட்டியை எடுத்துக் கொண்டு வந்து கோதையிடம் கொடுத்தாள்.

"இதைத் திறந்து பார். என்னென்னவோ போட்டு அடைத்து வைத்திருக்கிறேன்" என்று கூறினாள் மாமி.

கோதை அதைத் திறந்து ஒவ்வொன்றாக எடுத்தாள். மடித்து மடித்து வைத்திருந்த காகிதங்கள், இரண்டு மூன்று பிராமிசரி நோட்டுகள், ரூபாய் நோட்டுகள், இவைகளுக்கு அடியில் ஒரு போட்டோ... அதைக் கையில் எடுத்துப் பார்த்தாள் கோதை. அவள் நெஞ்சில் உருவாகியிருந்த ராகவன் தான் அந்தப் போட்டோவில் இருந்தான். மனத்தின் பிரமை உணர்ச்சி அப்படித்தான் அதை ஒப்புக் கொண்டு, அவளை உணர்ச்சி மயமாக மாற்றியது. அவள் உடல் முழுதும் ஒரு பரவசம் ஓடி விளையாடிற்று. கட்டவிழ்ந்த மான் கன்றுகள் சில மின்னலெனப் பாய்வது போல் அவளுள் உணர்ச்சிகள் பிறந்து பாய்ந்து ஒன்றோடு ஒன்று மோதின.

கோதையும் பெரியம்மாளும் பழைய கதைகளைப் பேசிப் பேசிக் கழித்ததில் ஒரு

## பையனின் கேள்வி!

நான்கே வயது நிரம்பப் பெற்ற நாணுவுக்கும் அவன் தந்தைக்கும் நடந்த சம்பாஷணை இது.

"அப்பா! உனக்குப் பணம் எங்கிருந்து வருகிறது?"

"ஆபிசிலிருந்து!"

"ஆபீசுக்கு?"

"பாங்கியிலிருந்து!"

"பாங்குக்கு?"

"கஜானாவிலிருந்து!"

"கஜானாவுக்கு?"

"அரசாங்கம் தருகிறது! இந்த நோட்டெல்லாம் அது அச்சடித்துக் கொடுத்ததுதான்!"

"அப்படியா? அரசாங்கத்துக்கு எங்கிருந்து வருகிறது?"

"அரசாங்கத்துக்கு நாம் கொடுக்கிறோம்!"

"அப்படியானால் எதற்கு அப்பா நாம் இப்படிக் கொடுத்து வாங்கிச் சிரமப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்? நாமே வைத்துக் கொண்டு விட்டால்...?"

தகப்பனார் கடகட வெனச் சிரித்தார். அவரால் என்ன பதில் சொல்ல முடியும்?

மாதம் ஓடியது. நினைவுகளைக் குவித்து அனுப்பியிருந்த கோதையின் பரபரத்த உள்ளமும் தன் கண் நோக்கிய வெளியில் கனவுகள் தீட்டிக் கொண்டு மகனுக்காகக் காத்துக் கிடந்த தாயின் உள்ளமும் ஒவ்வொரு நாளும் அடுத்த நாள் தபாற்காரனை எதிர்பார்க்கத் தெம்பை ஊட்டிக்கொள்ள வேண்டி யிருந்தது. கடிதம் வந்தபாடில்லை.

ஒரு நாள் கோதை அவசரமாகப் பெரியம்மாளைத் தேடிக் கொண்டு வந்தாள்.

"மாமி! நான் இன்றைக்குப் பட்டணத்துக்குப் போனாலும் போவேன். இரண்டு நாளைக்கு முந்தி என் சித்தப்பாவின் குடும்பத்தினர் ராமேசுவரத்துக்குப் போய்விட்டுத் திரும்புகிற வழியில் எங்கள் வீட்டில் வந்து தங்கி யிருக்கிறார்கள். அவர்கள் என்னையும் தங்களுடன் பட்டணத்துக்கு வரும்படி அழைக்கிறார்கள். உங்களை விட்டு விட்டு எப்படிப் போவது என்று யோசனையாக இருக்கிறது. அதுவும் ஒரு மாசம் பட்டணத்தில் தங்கிவிட்டு வரலாம் என்கிறாள் என் சித்தி..." என்றாள் அவள்.

பெரியம்மாள் சிரித்துக்கொண்டே சொன்னாள்: "மூணு நாலு மாசத்துக்கு முன் என்னைப் பிடித்துத் தாங்கியது யாரடி, பெண்ணே? இப்படி யெல்லாம் ஒரு பாசம் வைத்துக் கொள்ளக் கூடாது. தாராளமாகப் போய் விட்டு வா..." அவள் சிரித்துக் கொண்டே சொன்னாலும் குரலில் விரக்தி தொனித்தது.

'பட்டணம்' என்று குறிப்பிட்டுப் பழக்கமான சென்னையைக் கோதை இப்போதுதான் பார்க்கிறாள். நகரின் பல பகுதிகளிலும் கண்ட காட்சிகள் மனத்தில் பதிந்தபோது அவ்வப்போது மகிழ்ச்சி, அதிர்ச்சி, பிரமிப்பு, ஓரொரு சமயம் வெறுப்பு ஆகிய உணர்ச்சிகள் உண்டாயின.

எல்லா நினைவுகளுக்கும், எல்லா உணர்ச்சிகளுக்கும் இடையே அவள் மனம் ராகவனைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தது. நினைவுகளாலும் கனவுகளாலும் அவள் மனம் அவனைப் பற்றிய பல கோலங்கள் வரைந்து கொண்டிருந்தது.

அவள் ஏழெட்டு நாட்களாக, ஏதோ ஒரு சாக்குச் சொல்லிக் கொண்டு தினம் பெரும் பகுதிப் பொழுது வெளியில்தான் சுற்றுகிறாள்.

ராகவனின் இலேசான ஜாடை கொண்ட யார் கண்ணில் பட்டாலும் கோதை உன்னிப்பாகக் கவனிப்பாள். ஒரு நாள் பத்து வயதுச் சிறுவன் ஒருவனின் கையைப் பிடித்துக் கொண்டு ஒருவர் முன்னால் போய்க் கொண்டிருந்ததைக் கண்டு கோதைக்கு ஆயிரம் எண்ணங்கள் வெடித்தன. நடையில் வேகமிட்டுக் கொண்டு அவரைத் தாண்டிப் போக முயன்றாள். அவரைப் பார்த்தால் ராகவன் மாதிரி தோன்றியது. தாண்டிச் செல்கையில் அவரை அலசுகிறாற்போல் பார்த்த பார்வையில் யாரோ என்று முடிவு கண்டாள் கோதை. பாவம், ஒரு குருட்டுக் குழந்தையை வழி நடத்திச் சென்று கொண்டிருந்தார் அவர்.

இன்னொரு நாள் கடற்கரையில் கண்ட ஒரு காட்சி அவளை அயர வைத்தது. ஓர் ஆணும் பெண்ணும் அலையோரத்தில் நின்று அதனிடம் விளையாடிக் கொண்டிருந்தனர். ராகவன்தான் அவன் என்ற தீர்மானம் கோதையின் நெஞ்சத்தில் உருவாகி விட்டது. அவனுடைய கையை அடிக்கடி பற்றிக் கொண்டு அலையை எதிர்த்துக் கொண்டு கலகலத்த சிரிப்போடு காணப்பட்ட அந்தப் பெண்ணைக் கண்டு பொருமினாள் கோதை.

## குறை எங்கே?

'என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா' என்னும் கலைக் களஞ்சியத்தை முதன் முதலாகத் தயாரித்த பொழுது ஆசிரியர் குழுவுக்குச் சரித்திர சம்பந்தமான ஆராய்ச்சிக் கட்டுரை யொன்று தேவையா யிருந்தது. பலத்த ஆராய்ச்சிக்குப் பின் அத்தகைய கட்டுரை யொன்று ஏதோ ஒரு சஞ்சிகையில் வெளியாகி யிருப்பதாகத் தெரிய வந்தது. அதைத் தேடிக் கண்டுபிடித்துத் தட்டெழுத்துக்காரரிடம் கொடுத்து நகல் எடுக்கச் செய்தார்கள். பிறகு அதனை உலகப் புகழ் பெற்ற வரலாற்று வல்லுநர் ஒருவரிடம் அனுப்பி வைத்து அபிப்பிராயம் கேட்டனர்.

வெகு நாட்கள் வரை அவ்வல்லுநர் கட்டுரையைக் 'கட்'பில் போட்டு வைத்து விட்டார். ஆராய்ச்சிக் குழுவினரிடமிருந்து கடிதத்துக்கு மேல் கடிதம் பறக்கவே, அந்தக் கட்டுரையைப் படித்துப் பார்த்து அவர் தமது அபிப்பிராயத்தை எழுதினார்.

"கட்டுரையைப் படித்துப் பார்த்தேன். தவறுகள் மலிந்திருக்கின்றன. இதனைத் திருத்திச் செப்பனிட்டு வெளியிடுவது என்பது இயலாத காரியம். அதைக் காட்டிலும் சொந்தமாக ஒரு கட்டுரை எழுதி அனுப்பிவிடுவதே சுலபம் என்று தோன்றுகிறது. எந்த முறையிலும் இதைக் களஞ்சியத்தில் வெளியிடுவதற்கில்லை."

இந்தக் குறிப்பைப் படித்த ஆசிரியக் குழுவினருக்கு 'அத்தனை தப்பும் தவறுமாகக் கட்டுரை எழுதிய ஆசிரிய சிகாமணி யாராக இருக்கும்? வரலாற்று வல்லுநர் நம் அறிவைக் குறை கூறாமல் கூறி நம் தலையில் அடித்து இப்படி மட்டம் தட்டி விட்டாரே!' என்று தோன்றவே, அந்தக் கட்டுரை எழுதியவர் யார் என்று தேடத் தொடங்கினார்கள். தேட்டத்தின் முடிவில் அவர்கள் கண்டது என்ன தெரியுமா? எந்த வரலாற்று வல்லுநர் கட்டுரையைக் குறை கூறி எழுதியிருந்தாரோ, அவரே தான் அந்தக் கட்டுரையின் சிருஷ்டிகர்த்தா என்பதுதான்!



விற்பனைக்கு வந்த பசுவை ஒருவர் ஏற இறங்கப் பார்த்தார். அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. பாலைக் கறந்து காட்டச் சொன்னார். அரைப்படி இருந்தது. "என்ன அப்பா, ஒன்றரைப்படி கொடுக்கும் என்றாயே, அரைப்படிதானே கொடுக்கிறது?" என்று ஏமாற்றத்துடன் கேட்டார்.

"மாடு இன்னும் தண்ணி குடிக்க ஆரம்பிக்கவில்லையே!" என்று பதில் சொன்னான், பசுவை விற்க வந்தவன்.

அன்றிரவெல்லாம் அவள் நினைவுக் கடவாய்க் கிடந்து அலை எழுச்சிகள் போல் புரண்டு கொண்டிருந்தாள். அவளுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை.

'அவர் அவளுடைய கணவராக இருப்பாரோ? அப்படியானால், கல்யாணம் பண்ணிக்கொண்டிருக்க வேண்டும். 'கல்யாணம் என்ற பேச்சைக் கண்டு ஓடியவர் இப்படிப் பண்ணுவாரா? ஆனால் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் இவரைப் போலத்தான் பேசுகிறார்கள்; ஓடுகிறார்கள். செய்கையில் நேர் எதிரிடையாக நின்று நிரூபிக்கிறார்கள்...... இவரும் அப்படித்தான் ஆகியிருப்பாரோ?'

பதினைந்து நாட்களிலேயே திரும்பி விட்டாள் கோதை.

கோதை கிராமத்துக்குத் திரும்பிய மறுநாள் தபால்காரன் பெரியம்மாள் வீட்டு முன் நின்று "தபால்! எதிராஜம்மாள்!" என்று குரல் கொடுத்தான். கோதையும் அந்த வீட்டினுள் நுழைந்தாள் தபாலை வாங்கியபடி. கடிதம் வந்திருக்கிறது என்று கோதை அறிவித்தவுடன் பெரியம்மாளுக்கு மகிழ்ச்சியும் பரவசமும் ஏற்பட்டு, உடலை வெறுமையாக்கி விட்டன. இலேசான காற்றுப் பண்டம் போல் கைகளை ஊன்றிக் கொண்டு தரையில் உட்கார்ந்தாள்.

கோதை கடிதத்தைப் படித்தாள்.

'அம்மாவுக்கு அனந்தகோடி நமஸ்காரம். நான் உன் முகத்தில் விழிக்க இயலாதவனாகப் போய்விட்டதால் இத்தனை காலமும் இந்த விவரமான கடிதத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வந்தேன். நான் வீட்டை விட்டு ஓடி வந்தது பேதைமைத் தனத்திலும் பேதைமைத் தனம். கல்யாணம் என்ற புனிதமான சடங்கைத் தட்டிக் கழித்ததற்காகவோ என்னவோ கடவுள் என்னைத் தண்டித்து விட்டார். தண்டனையெனில் அது ஆயுள் தண்டனை என்றால்தான் பொருந்தும்.

'கல்யாணத்தைக் கண்டு அந்த நாளில் பயந்தேனா, வெறுத்தேனா என்பதைக்கூட இப்போது என்னால் அனுமானிக்க முடியவில்லை. ஆனால் அதை விரும்பி வரவேற்று, ஏற்றுக் கொள்கிற ஒரு துடிப்புக்கூட என்னுள் ஒரு நாள் உதயமாயிற்று. என்னை வாழ்க்கைக்குத் தகுதியான முழு மனிதனாக்கிக் கொண்டு என் முயற்சியில் நானே ஒரு துணை தேடிக் கொண்டு இருவருமாய் உன் காலடியில் வந்து விழுந்து வணங்கக் கனவு கண்டேன்.

'என் கனவு ஒரு மின்நேரத்தில் மின்னல் ஒன்றினாலேயே சரிந்து விட்டது. போய்விட்ட என் கண்களைத் திரும்பப் பெற்றுக்கொண்டு தனியாக உன் மகனாக மட்டுமாவது வந்து உன்னைத் தரிசிக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். அது இயலாதென்று மூன்று மாதங்களுக்கு முன் முடிவாகத் தெரிந்து விட்டது. இந்த நிலையில் உனக்குத் துணையாக அன்றி, சுமையாக வந்து நிற்க நான் விரும்பவில்லை. என் கடன்களைக் கவனித்துக் கொண்டு எனக்குத் துணையாக ஓர் அன்பு நண்பன் வாய்த்திருக்கிறான். அங்கிருந்து நீ உன் மன ஓட்டங்களை ஒரு பெண்ணின் துணை கொண்டு கடிதங்களில் எழுதி அனுப்புவதே போன்று தான் என் உணர்ச்சிகளை முன் ஒரு கடிதத்திலும் இந்தக் கடிதத்திலும் எனக்காக என் நண்பன் வார்த்திருக்கிறான். ஆனால் ஒன்று கூறுகிறேன்: அம்மா, இன்றுவரையில் நான் உன்னை மனத்தில் துணையாகக் கொண்டு புனிதமாக வாழ்ந்து வருகிறேன்.

உன் அன்புள்ள
ராகவன்.'

இடிந்து போய் உட்கார்ந்திருந்த அன்னை உருவம் கோதையை நிமிர்ந்து நோக்கியது. கோதையின் மனத்தினின்றும் அவள் கண்ட கடற்கரைக் காட்சி நிழலாய்த் தேய்ந்து மறைந்தது. தன் கண்ணைப் பொத்திய மாயையை நினைந்து வருந்தினாள்.

"என்னடி எழுதி யிருக்கிறான்? படித்த வேகத்தில் ஏதோ புரிந்தது; புரியவும் இல்லை" என்றாள் பெரியம்மாள்.

அதற்குக் கோதை பதிலே கூறவில்லை. ஆறுகப் பெருகிக் கொண்டு வந்த துக்கத்தை அடக்கிக் கொண்டு, "அம்மா, இன்று இரவே போய் நான் அவரை அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்!" என்றாள்.

'அம்மா!' என்று கோதை அழைத்த முறையை எண்ணிக் கண் மலர்ந்தாள் பெரியம்மாள்.

"உன் இஷ்டம், அம்மா! அவனுக்கும் எனக்கும் இனிமேல் நீதான் துணை!" என்றாள் பெரியம்மாள். ராகவனின் நிலை பற்றி இன்னும் அவள் இதயத்தில் அந்தச் செய்தி ஊடுருவவில்லை என்று தெரிந்துகொண்டு அப்போதைக்கு அந்த நிமிஷத்துக்கு அதுவும் நல்லதுதான் என்று எண்ணினாள் கோதை. அவள் மனம் ராகவன் அடிகளுக்கு அஞ்சலி செய்து கொண்டிருந்தது.

தரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது

# ஹத்திபாயின்



## ஸ்டேயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

நீடித்து உழைப்பவை, ஜொலிப்புடன் திகழ்பவை'





ஸ்டேயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் தயாரிப்பவர்களில் முதன்மையானவர்கள்.

**ஹத்திபாய் துளஸிதாஸ் & சன்ஸ்** 122, கள்பராசால், பம்பாய் 2




**நான்கு நங்கையரின் கதை :**

வடிவேலுவின் தங்கை பாருவின் காலேஜ் சிநேகிதி தாரா இளம் வயதிலேயே கைம் பெண்ணானவள். சமூக சேவையில் மிச்சமுள்ள தன் வாழ்நாளைச் செலவிட்டு மன ஆறுதல் பெறத் தீர்மானித்திருந்த அவள், தோழியைச் சந்திக்கத் தேனூர் வருகிறாள். அவளுடைய அறிவாற்றலும் கண்ணியமான தோற்றமும் மதிப்பையும் மரியாதையையும் வடிவேலுவின் உள்ளத்தில் உருவாக்குகின்றன. அதே நேரத்தில் அவளுடைய விதவைக் கோலத்தைக் கண்டு பச்சாத்தாபப்படவும் செய்கிறான். இந்த உணர்ச்சிகளெல்லாம் அவன் நெஞ்சத்தில் கலந்து விளையாடும்போது அவன் தன்னைத்தானே புரிந்து கொள்ள முடியாமல் தடுமாறவும் செய்கிறான். தக்க தருணத்தில் அவனுக்கு அழைப்பு விடுத்ததன் மூலம் நன்கு சிந்தித்துப் பார்க்க அவனுக்கு நிறைய அவகாசமும் அளித்தது போர்முனை.

இன்னொரு பெண் நாடகக்காரி சகுபாய். தன் அத்தான் சிங்காரத்தை அவள் விரித்த வலையிலிருந்து விடுவிக்கக் கருதிய வடிவேலு, தானே அவள் விழிச் சுழலில் சிக்கி விடுகிறான். நெஞ்சில் கொழுந்து விட்டெரியும் ஆசைத் தீயை அணைக்கும் வகை தெரியாமல் அவளைப் பின்னோடு அழைத்து வர உற்றாராலும், ஊராராலும் ஒதுக்கித் தள்ளப்படுகிறான். சுக போகத்துடன் வாழ எண்ணி அவனுடன் வந்த சக்குவுக்கு வறுமையில் உழலுவது வேதனை அளிக்கிறது. சொல்லாமல் கொள்ளாமல் அவள் மலாய் நாட்டுக்குக் கப்பலேறி விடுகிறாள். இதனாலெல்லாம் தன் குடும்பத்துக்கு நேர்ந்துவிட்ட அபகீர்த்தியைத்துடைத்தெறிய விரும்புகிறான் வடிவேலு. அதற்கு ஒரு வழி காட்டுகிறது போர்முனை.

ஜப்பானியரை எதிர்த்துப் போராட வென்று வரவழைக்கப்பட்டுச் சிங்கப்பூரில் தண்டு இறங்கியிருக்கும் சிப்பாய்கள், சிரித்து மகிழுமாறு செய்ய அமர்த்தப்பட்டிருப்பவள் ஒரு சீனத்துச் சிங்காரி. டையென்-ஹௌன்-கய் அவமானப்படத் தக்க வாழ்க்கை நடத்துபவள் என்பதை எளிதில் ஊகித்த வடிவேலு, யுத்த அரக்கனின் சொல்லொணாக் கொடுமைகளுக்கு உள்ளாகி அந்நிலைக்கு அவள் தாழ்த்தப்பட்டிருப்பதையும் வேறு வழியின்றி அந்த அரக்கனின் அந்தப்புரத்தில் அவள் அடிமையாகிக் கிடப்பதையும் சிறிது சிறிதாகத்

தெரிந்து கொள்கிறான். அனுதாபம் பொங்கு கையில் அவனுக்காக ஜப்பானியரைப் பழி வாங்க வேண்டும் என்றும் துடிக்கிறான். அதற்கு ஒரு சந்தர்ப்பத்தைத் தேடித் தருகிறது போர்முனை.

கள்ளச் சந்தையில் ஈடுபட்டும், வெள்ளையனிடம் வளைந்து கொடுத்துக் குழைந்தும் அதே சமயத்தில் ஜப்பானியனுக்காக ஐந்தாம்படை வேலைகள் நடத்தியும் காலத்தை ஓட்டுகிறார் கதிரேசன். கொள்கைகள் ஏதுமற்ற அந்தத் தற்குறிப் பேர்வழியின் ஒரே மகள் குமாரி. அந்த வாலைக் குமரி பெரியதொரு வாயாடியும்கூட என்பதை அவளைச் சந்தித்த சில நிமிஷங்களுக்குள்ளாகவே காண்கிறான் வடிவேலு. குதர்க்கப் பேச்சும், வம்புதும்பும், கோபதாபங்களும் அவர்களிடையே சக்கைப் போடாகப் பெருகிய போதிலும் அவை யெல்லாம் தளிர்விடும் காதல் பயிருக்கு உரமாயின என்பதை அவர்களைப் பிரித்து வைத்ததன் மூலம் உணர்த்தி உதவுகிறது போர்முனை.

மனப் போருக்கும் மறப் போருக்கும் முடிவு கண்ட வடிவேலு, சுபாஷ் போஸின் தலைமையில் தோன்றிய இந்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்து அறப்போரில் குதிக்கிறான்.

## அத்தியாயம் 1

# சிங்கப்பூர்ச் சாமியார்

**ப**லனைக் கருதாமல் உலக நன்மைக்காகத் தன் கடமைகளை ஆற்றிக் கொண்டு போகும் ஒரு மகானிடத்தில் காணக் கூடிய அமைதியையும் காம்பீர்யத்தையும் என்றும் போல் அன்றும் காவிரி நதி தீரம் பிரதிபலித்தது. என்றாலும் ஆற்றங்கரை ஓரமாக நடந்து சென்று கொண்டிருந்த அந்தச் சந்யாசி அந்த நீரோட்டத்தின் தன்மையில் புதுமையைக் கண்டிருக்க வேண்டும். தான் பாய்கின்ற விதத்திலே வேறு ஏதேனும் ஒரு தனிச் சிறப்பை அல்லது அழகை அன்றைக்கு அது அவருக்குப் புதிதாகப் புலப்படுத்தி யிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர் ஏன் அப்படி அந்த நீர்ப் பரப்பையே கண்கொட்டாமல் உற்று நோக்கிக் கொண்டிருந்தார்? நீண்ட நேரம் இப்படி மௌனமாகத் தமது மனத்தை வெள்ளப் பெருக்கில் லயிக்க விட்ட அவர் இப்போது மண்டியிட்டு உட்கார்ந்து மெல்ல மெல்லத் தமது கைகளை நீட்டி விரல்களை ஜலத்தில் நனைத்தார். அவர் மேனி அத்தருணத்தில் சிலிர்த்தது! பின்னர் இரண்டு கரங்களாலும் நீரை ஏந்தி வாயருகே எடுத்துப் போய் நிதானமாக, நீரை உறிஞ்சினார். கண்களை மூடியபடி காவிரி தீர்த்தத்தின் சுவையைச் சுகமாக அனுபவித்தார். நன்கு ரசித்த திருப்தியுடன் பெருமூச் செறிந்தார். இதன் பிறகு ஏதோ ஒரு பாலைவனத்தில் நீண்ட நாட்களாக நீர் இன்றி அவதிப்பட்டவரைப் போல் பேராசையுடன் அள்ளி அள்ளிக் குடித்தார். முகத்தில் நீரை அறைந்து தாடி மீசையை யெல்லாம் நனைத்துக் கழுவிக் கொண்டார்.

அதோடு நின்றாரா? ஆற்றங்கரையில் பசும் புல் தரையில் விழுந்து புரண்டார். திடுமென எழுந்து நின்று, இங்குமங்குமாய் நிறைய மலர்ந்திருக்கும் தும்பைப் பூக்களைக் கசக்கி விட்டோமோ என்ற கவலையுடன் அச் செடிகளைத் தடவிக் கொடுத்தார். எழுந்து நின்றார். தம் எதிரே கப்பும் கிளையுமாய் ஓங்கி வளர்ந்திருந்த அரசமரத்தை மேலும்கீழுமாய்ப் பார்த்துப் பரவசமடைந்தார். அதன் கிளைகளில் அமர்ந்து கிக்கிளு கிளுகிளு வென்று சிரிக்கும் குருவிகளை அண்ணாந்து நோக்கித் தாமும் மகிழ்ச்சியுடன் புன்னகை புரிந்தார். நீளமான தடியை ஊன்றியபடி அகலக் கால் வைத்து அலட்சியமாக நடந்தார். கண்ணுக்கெட்டிய தூரம் வரை இளம் பச்சை நிறத்தில் வயல்களில் உள்ள நாற்றுகள் காற்றில் அலைப்புண்டு சரிவதைப் பார்த்துத் தாமும் தென்றலைத் தாங்கச் சக்தியற்றவர் போல் அசைந்தாடினார். மடை திறந்த வாய்க்கால்களில் தண்ணீர் குதித்தோடுவதைக் கண்டு தாமும் துள்ளிப் பாய்ந்து விரைந்தார்.

அந்த நிலையில் அவரை யாரேனும் பார்த்திருந்தால் அரைப் பைத்தியம் என்றே முடிவுகட்டியிருப்பார்கள். நல்ல வேளையாகச் சுவாமியார் அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஆள் நடமாட்டம் உள்ள இடத்தைஅடைந்த



தும் இம்மாதிரியான சேஷ்டைகளில் இறங்காமல் தமக்கு இயல்பான பாணியில் நடந்து போனார்.

தேனூர்க் கிராமத்தை அடைந்ததும் நீண்ட நாள் பழக்கமுள்ளவர் போல அவர் எங்கும் தயங்காமல் யாரையும் ஏதும் விசாரியாமல் விடுவிடுவென்று சென்று ஒரு வீட்டு வாசல் திண்ணையில் தடியை உருட்டி விட்டுத் தாமும் அமர்ந்தார்.

வாசலில் ஏதோ அரவம் கேட்டுக் கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள் முத்தையாவின் மனைவி. முகத்தைப் பாதிக்குமேல் திரை போட்டதுபோல் ஒளித்த நீண்ட தாடி, மீசை; தலையில் கட்டியிருந்த துணி ஆகியவற்றுடன் திண்ணையில் உட்கார்ந்திருக்கும் அந்த நவீன சன்யாசியைக் கண்டு அவள் சற்று நேரம் அப்படியே திகைத்துப் போய் நின்று விட்டாள்.

''தாயே!'' என்று அழைத்தார் சுவாமிகள். அவர் குரல் தழுதழுத்தது; தொண்டையை மேலே பேச முடியாத வாறு ஏதோ அடைத்துக் கொள்வது போலிருந்தது.

''பாவம்! பசிபோலேயிருக்கு'' என்று முணுமுணுத்தபடியே உள்ளே திரும்பினாள் முத்தையாவின் சம்சாரம். ''என்னங்க வாசலிலே யாரோ சுவாமியார் வந்திருக்கிறார்; என்ன வேணுமோ விசாரியுங்க'' என்றாள்.

தினசரித் தாளைத் தொந்தியோடு அணைத்துக் கொண்டு சாய்வு நாற்காலியை விட்டு முக்கி முனகிக் கொண்டே எழுந்தார் முத்தையா. யுத்தச் செய்திகளைத் தாம் சுவாரஸ்யமாகப் படித்துக் கொண்டிருக்கையில் அதற்கு இடையூறு நேருவதை அவர் அவ்வளவாக விரும்பவில்லைதான். வேறு யாராக வேனும் இருந்தால் உள்ளே இருந்த வாறே பேசி அனுப்பியிருப்பார். ஆனால் காவி உடை தரித்திருப்பவரை அவ்விதம் விரட்டிவிட அவருக்கு மனம் வரவில்லை.

திண்ணைப் பக்கம் வந்த முதலையா, ''ஏன்? ஏன் எழுந்திருக்கிறீங்க? உட்காருங்க! உட்காருங்க!'' என்று சுவாமிகளை உபசரித்துவிட்டுத் தாமும் எதிர்ப்புற மேடையில் அமர்ந்தார். ''அடிகளுக்கு எந்த ஊரோ?''

''ஷோனனிலிருந்து வருகிறேன்.''

''சோழவந்தானா?''

''இல்லே! இல்லே! சிங்கப்பூர் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?''

சிங்கப்பூர் என்றதும் முத்தையாவின் முகத்தில் புதியதோர் ஆர்வம் தலைக் காட்டியது. ''கேள்விப்பட்டிருக்கிறேனாவது? தினம் தினம் அந்த ஊரைப் பற்றிய சிந்தனைதானே!''

''சிங்கப்பூருக்குத்தான் ஜப்பான்காரன் இப்போது 'ஷோனன்' என்று பெயர் வைத்திருக்கிறான். ஷோனன் என்றால் ஜப்பான் பாஷையில் தென் பிரதேச தீபம் என்று அர்த்தம்!''

''ஆமாம், ஆமாம்! எனக்குக் கூட மித்திரனிலே படித்த ஞாபகம் இருக்கு'' என்றார் முத்தையா, மடியிலிருந்த தினசரியைத் தட்டிக்காட்டி. ''சரி, மேலே சொல்லுங்க'' என்று முன்னுக்குச் சாய்ந்து தலையை நீட்டிக் கேட்டார்.

''என்ன சொல்ல வேண்டும்?''

''ஜப்பான்காரன் வந்ததற்கப்புறம் அங்கேயெல்லாம் எப்படி இருக்கு?''

''எல்லாமே தலைகீழாகப் போய்விட்டது. நடக்கிற அட்டூழியங்களுக்குக் கணக்கு வழக்கே யில்லே. அதையெல்லாம் பார்த்துவிட்டுத்தான் எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போய்ச் சன்யாசம் வாங்கிக் கொண்டு விட்டேன்!''

''அடடா! அப்படி என்ன அக்கிரமம் நடந்து போச்சு?''

''சொல்லட்டுமா? முதலில் ஜப்பான் ராட்சதன் வரப்போகிறான் என்றதுமே வெள்ளைக்காரன் பயந்து போய் எல்லா மதுக் கடைகளையும் திறந்து விட்டுவிட்டான். ஏற்கெனவே கொலை வெறி பிடித்து அலைந்து கொண்டிருக்கும் ஜப்பானியனிடம் சிங்கப்பூரிலுள்ள சாராயப் புட்டிகளும் சிக்கி அதனால் குடி வெறியும் சேர்ந்து கொண்டால் என்னவெல்லாம் பண்ணுவானோ என்று நடுங்கிப் பிரிட்டிஷார் இந்தக் காரியத்தைச் செய்தார்கள். மக்களெல்லாம் மனம் கொண்டமட்டும் மதுவருந்தி மதியிழந்தார்கள். பீப்பாய், பீப்பாயாகச் சாராயத்தைச் சாக்கடையிலும் கொட்டினார்கள். எதிரிக்குப் பயன்படக் கூடிய பொருள்களை யெல்லாம் அழிக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் சிப்பாய்களுக்கு உத்தரவானதும் அவர்கள் நகைக் கடைகளிலும் மற்ற வியாபார ஸ்தலங்களிலும் புகுந்து பகல் கொள்ளை அடித்தார்கள். . ஜப்பானியர் நெருங்கி வந்து விட்டதும் பிரிட்டிஷார் பலர் சிங்கப்பூரிலிருந்து கப்பலேறிப் போய்விட்டார்கள். காவலன் இல்லாத காரணத்தால் மக்களில் பெரும்பாலோர் கயவர்களாக மாறித் தான்தோன்றித்தனமாக நடந்து கொண்டார்கள். அகப்பட்டதைச் சுருட்டினார்கள். இதன் பிறகு ஜப்பானியச் சிப்பாய்கள் வந்தார்கள். அவர்களும் தங்கள் பங்குக்குக் கொள்ளை யடித்தார்கள். அத்துடன் நின்றிருந்தாலும் பரவாயில்லே. சொல்லி முடியாத அட்டூழியங்களைச் செய்தார்கள். மலாயாவில் ஜப்பானியர் ஒரு கிராமத்துக்குள் புகுந்தார்கள்

# கால்கேட்டின்மூலம் நாள்முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.




வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

என்றால் தங்கள் பசியைத் தீர்க்க இவ்வளவு உணவும் இவ்வளவு மதுவும் வேண்டும் என்பது போல் இத்தனை பெண்களையும் அனுப்பி வைக்க வேண்டும் என்று உத்தரவு போடுவார்கள். இதற்காகப் பல பெண்கள் கேசத்தையெல்லாம் வெட்டிக் கொண்டு ஆண் வேஷத்தில் அலைந்தார்கள்.

''கொள்ளையடிக்கப்பட்ட பொருள்கள் ஏராளமாக விற்பனைக்கு வந்ததால் கொஞ்ச நாட்களுக்கு எல்லாமே மிகவும் மலிவாக இருந்தன. ஜப்பானியர் திருட்டுக் குற்றம் புரிந்ததாகச் சந்தேகிக்கப்பட்டவர்களை விசாரணை ஏதுமின்றி வெட்டிக் கொன்று அவர்கள் தலையை ஈட்டி முனையில் செருகி நாற் சந்தியில் நடுவதற்கு ஆரம்பித்ததும் அத்தியாவசியப் பொருள்கள் எல்லாம் கூட மாயமாய் மறைந்து விட்டன. பதுக்கல் வியாபாரம், கள்ளச் சந்தையெல்லாம் கனஜோராக நடைபெற்றன. கூடவே பண வீக்கமும் உண்டாகியது. கத்தை கத்தையாக நோட்டுக்களைக் கொடுத்தால்தான் ஒரு ரொட்டியை வாங்க முடியும் என்ற நிலை ஏற்பட்டது! ஜப்பானியரின் கோபத்துக்கு ரொம்பவும் ஆளானவர்கள் சீனர்கள்தான். வெற்றிப் போதையில் பல்லாயிரக் கணக்கான சீனர்களைச் சித்திரவதை செய்தார்கள்; படுகொலை புரிந்தார்கள். அதெல்லாம் வார்த்தைகளால் விவரிக்கவே ஏற்றதல்ல. அவ்வளவு பயங்கரமானது!''

''சீனாக்காரனிடம் ஜப்பானியனுக்கு என்னத்தினால் அவ்வளவு துவேஷம்?''

''பல வருஷங்களாக இருந்து வரும் விரோதம். சீனாமீது ஜப்பானியன் படையெடுத்தபோது சீனக் கம்யூனிஸ்டுகள் தான் ஜப்பானியனுக்கு ரொம்பவும் தொந்தரவு கொடுத்தார்கள். சீனாவை ஆக்கிரமிப்பது இலகுவான காரியமாக இல்லை. அப்போது அடைந்த தொல்லைகளுக்கு மலாய்ச் சீனர்களைப் பழி வாங்கி வஞ்சம் தீர்த்துக் கொண்டார்கள். மலாய் நாட்டில் யுத்தம் ஆரம்பித்ததுமே அங்குள்ள சீனச் செல்வந்தர்கள் பிரிட்டிஷாருக்கு ஏராளமான பொருளுதவி செய்தார்கள். பரம ஏழையான ஒரு சீனச் செம்படவன்கூடத் தன்னுடைய ஒரே சொத்தான படகைப் பிரிட்டிஷ் தளபதிகள் தப்பி ஓடக் கொடுத்து உதவினான். அப்படி அவர்கள் ஆங்கிலேயர்களுடன் யுத்த காலத்தில் ஒத்துழைத்திருக்கிறார்கள். சிங்கப்பூரில் அடியெடுத்து வைக்க ஜப்பானியர் முற்பட்ட சமயத்தில் பிரிட்டிஷார் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு உடலுக்குக் கப்பலில் இடம் பிடிக்கப் பிரயத்தனம் செய்கின்ற தருணத்தில் அவர்களுக்கு வசதியாக ஜப்பானியரைச் சிங்கப்பூர் தீவுக்குள் நுழைய விடாமல் ஒரு வார காலம் தடுத்து நிறுத்திச் சமாளிப்பதற்குப் பேருதவி செய்தவர்கள் சீனர்கள்.

இத்தனைக்கும் அவர்கள் ராணுவப் பயிற்சி பெற்றவர்களும் இல்லை. அவர்



களுக்குப் பயிற்சி அளிக்க அவகாசமோ அவர்களிடம் கொடுத்து வைக்கப் போதிய ஆயுதங்களோ பிரிட்டிஷாரிடம்கிடையாது. அப்படியிருந்தும்கூடச் சீனர்கள் கடைசி நிமிஷத்தில் சிங்கப்பூரைக் காப்பாற்றத் தாங்களாகவே முன்வந்தார்கள். மள மளவென்று மலாய்த் தீபகற்பம் முழுவதையும் கைப்பற்றிவிட்ட ஜப்பானியருக்கு அத்துடன் ஒப்பிடும்போது சிங்கப்பூர்த் தீவு கண்டைக்காய்ச் சமாசாரமாகத் தோன்றியிருக்க வேண்டும். அதை ஆக்கிரமிக்க விடாமல், பல நாட்கள் தங்களைத் தாமதப்படுத்தி விட்ட சீனர்கள் மீது ஆத்திரம் பொங்கியது அவர்களுக்கு!''

''சீனக்காரனும் ஜப்பான்காரனும் எப்படியோ தொலையறான்கள். இப்போ சுபாஷ் பாபு மலாயாவில் ரொம்பவும் மும்முரமாகச் சேனை திரட்டிக் கொண்டிருக்கிறாராமே, இந்தியா மீது படை எடுத்து விடுதலை வாங்கித் தர; வாஸ்தவம்தானா?''

''உம், உம்! என்னமோ மலையைப் புரட்டிவிடலாம் என்றுதான் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். காரிய சாத்தியமானதுதானா என்பதைக் காத்திருந்துதான் பார்க்க வேண்டும்.''

இத்தருணத்தில் முத்தையாவின் சகதர்மிணி ஜன்னல் வழியே அவரை அழைத்தாள். ''என்னங்க! மகனைப் பற்றிக் கேட்பீங்களா, ஊர் வம்பெல்லாம் பேசிக்கிட்டிருக்கீங்களே?''

முத்தையா சிரித்தார். ''பாவம்! இதுகளுக்கு என்ன தெரியுது, சாமியார் ஐயா! சிங்கப்பூரிலே எண்ணிப் பத்து சிப்பாய்கள்தான் இருப்பாங்க என்கிற நினைப்பிலே மகனைப் பற்றி விசாரிக்கச் சொல்கிறாள் பாருங்க! அது பெரிய சமுத்திரம்! அதிலே வடிவேலுவை இவருக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?'' என்றார் பின்புறமாய்ப் பார்த்து.

''அதுக்கில்லீங்க. சாமியார் வாயால் இரண்டு நல்ல வார்த்தை சொன்னால் பலிக்காமல் போய்விடுமா?''

''கவலைப்படாதீர்கள் அம்மா!'' என்று அபயம் அளித்தார் காவி உடை தரித்தவர். ''உங்கள் மகன் செளக்கியமாகத்தான் இருக்கிறான்!''

''அப்படிச் சொல்லுங்க! இப்பத்தான் வயிற்றிலே எனக்கும் பால் வார்த்த மாதிரி இருக்குது.''

''கடிதாக போடுகிறானல்லவா?''

''அது எங்கே? அவன் ஒழுங்கா எழுத மாட்டான். அப்படி எழுதினாலும் அது தப்பாமல் வந்து சேராது. அங்கே யாரோ ஒருத்தியைக் கல்யாணம் கட்டிக்கிட்டதா ஒரு கடிதாக வந்தது. அப்புறம் ஒண்ணையும் காணோம்.''

''கௌரவமான நல்ல குடும்பத்தில் தான் பெண்ணைப் பிடித்திருக்கிறான். அவள் பெயர் குமாரி. மாமனார் சுந்தரேசன் பரம்பரைப் பணக்காரர். இப்போது ஜப்பானியர் ஆட்சியிலும் சரி; முன்னே பிரிட்டிஷ் ஆட்சியிலும் சரி நல்ல பேர் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார். அதனாலே செளகரியமாகத்தான் இருக்கிறார்கள். குழந்தை பிறந்து ஒரு வருஷமாச்சு. பெண் குழந்தை. பெயர் சிவகாமி.''

முத்தையாவும் அவர் சம்சாரமும், வாயடைத்துப் போய் நின்றார்கள். சற்று நேரத்துக்குப் பிறகு தம்மை ஒரு மாதிரியாகச் சுதாரித்துக் கொண்டார் முத்தையா. ''சுவாமி... தங்களுக்கு...''

''எனக்கு எப்படித் தெரியும் என்று தானே கேட்கிறீர்கள்? ஞானதிருஷ்டி என்று சொல்லி நான் உங்களை ஏமாற்றப் போவதில்லை. வடிவேலு எனக்கு நெருங்கிய நண்பன். இரண்டு பேரும் ஒரே பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் தான். அவன் இந்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்து விட்டான். எனக்கோ வாழ்க்கை வெறுத்துப் போய்த் தாய் நாடு திரும்பத் தீர்மானித்தேன். அப்போது வடிவேலுதான் எனக்கு உபகாரம் செய்தான். அவனுக்குத் தெரிந்த ஜப்பானியக் கப்பல் காப்டன் ஒருவனிடம் சொல்லி ரகசியமாக அவருடைய நீர்மூழ்கிக் கப்பலில் என்னை ஏற்றி விட்டு விட்டான். இந்தியாவில் மேற்குக்கடற்கரை ஓரமாக ஓர் இடத்தில்



என்னைக் கொண்டு வந்து சேர்த்து விட்டார் கப்பல்காப்டன். வடிவேலு மட்டும் உதவியிருக்க வில்லை யென்றால் பிறந்த மண்ணை நான் இப்போதைக்குப் பார்த்திருப்பேனா?''

உள்ளே யிருந்து பெரிதாக அழுகுரல் கேட்டது.

''ஏய்! ஏய்! ஏதுக்குச் சும்மா அழறே!'' என்று அதட்டல் போட்டார், இமைகளைக் கொட்டிக் கண்ணீரை அடக்க முயன்று தோல்வியுற்ற முத்தையா.

''பிறந்த மண்ணைப் பார்க்கச் சாமி யாரை அனுப்பி வைத்தவன் தன் பெற்றோர்களைக் காண வரவில்லையே என்று அம்மாவுக்கு ஏக்கமாகத்தான் இருக்கும்; அவங்களைக் கோபிக்காதீங்க!'' என்று பரிந்து கொண்டார் சந்நியாசி.

''ஏங்க! பேசாமே உட்கார்ந்துக்கிட்டு இருக்கீங்களே! போய்ப் பாருவையும், மாப்பிள்ளையையும் குழந்தையையும் அழைச்சுக்கிட்டு வாங்க!'' என்று கடிந்து கொண்டாள் வடிவேலுவின் தாயார்.

முத்தையா உலுக்கி எழுப்பப்பட்டவராய் நின்றார். ''ஆமாம், இதோ போகிறேன். ஆனால் அவசரமும் ஒன்றுமில்லை. சுவாமி நாலைந்து நாட்களாவது இங்கேதானே இருக்கப்போகிறார்.''

''அடடா! நான் எங்கேயும் தங்குவதற்கில்லை. வடிவேலு விவரம் தெரியப் படுத்தச் சொன்னான், கூறிவிட்டேன். என் வேலை முடிந்தது. இதோ கிளம்பிக் கொண்டே யிருக்கிறேன்...''

''அவ்வளவு சுலபமாக உங்களை விட்டு விட மாட்டோம். ஒரு வேளையாவது சாப்பிட்டு விட்டுத்தான் போகவேண்டும்'' என்றார் முத்தையா. ஜன்னல் பக்கம் பார்த்து, ''சீக்கிரம் ஆகட்டும்'' என்று இல்லாளுக்கு உத்தரவு போட்டு விட்டுப் படிகளில் இறங்கினார்.

அவர் தலை மறைந்ததும், ''ராஜா! இது என்னடா வேஷம்?'' என்றாள் செல்லம்மாள் வாசல் கதவருகே வந்து நின்று கொண்டு.

''அம்மா!'' என்று அன்பு பொங்க அழைத்தவாறே அவள் காலடியில் விழுந்து பாதங்களைப் பற்றிக் கொண்டான் துறவிவேஷத்திலிருந்த வடிவேலு.

## அத்தியாயம் 2

# திருடத் துணிந்தவன்

எவ்வளவுதான் சாமர்த்தியமாக வேஷம் போட்டுத் தன் சுயரூபத்தை மறைத்துக் கொண்டாலும் அதை யெல்லாம் தாயின் உள்ளுணர்வு ஊடுருவிப் பார்த்து விடும் என்பதனை வடிவேலு அறிய வில்லை. இப்போது மற்றவர்களுக்கும் தன்னைக் காட்டிக் கொடுத்து விடாமலிருக்குமாறு அவன் அவளை மன்றாடிக் கேட்டுக் கொண்டான். ''அம்மா! மிக முக்கியமான ஒரு காரியத்துக்காக நான் மாறு வேஷத்தில் இந்தியாவுக்குத் திரும்பி யிருக்கிறேன். உற்றார் உறவினர் யாரையுமே சந்திக்கக் கூடாது என்று எனக்கு உத்தரவாகி யிருந்தது. ஆனால் என்னால் ஆசையை அடக்கிக் கொள்ள முடிய வில்லை. அம்மா! இது விஷயத்தில் நான் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். போலீஸார் என்னைச் சல்லடை போட்டுத் தேடிக் கொண்டிருப்பார்கள். அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டால் என்னை மீண்டும் நீங்கள் உயிருடன் பார்ப்பதென்பதே சந்தேகந்தான்!''

''நான் அதை ஏற்கனவே ஊகித்து விட்டேனடா. அதனால்தான் அப்பாவை அனுப்பி விட்டுப் பிறகு உன்னைக் கேட்டேன். ராஜா! இரண்டு நாட்களாவது தங்கி விட்டுப் போகக் கூடாதா நீ?''

''அம்மா! தயவுசெய்து என்னை மன்னித்து விடு! என்னால் முடியாது. நான் இங்கே தாமதிக்கும் ஒவ்வொரு நிமிஷமும் ஆபத்துக்கு அடிகோலுவதாய்த்தான் அமையும். இங்கே எல்லாருக்கும் என்னைத் தெரியும். உன்னைப் போலவே இன்னும் சிறிது நேரத்தில் வேறு பலரும் என்னை அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? அப்புறம் செய்தி காட்டுத் தீ போல் பரவ எவ்வளவு காலமாகும்? எனக்குத் தரப்பட்டுள்ள வேலைகள் பூர்த்தியாவதற்கு முன்னால் போலீஸாரிடம் அகப்பட்டுக் கொள்வதை நான் விரும்பவில்லை, அம்மா! ஒற்றனைப் பிடித்தால் என்ன செய்வார்கள் என்று தெரியுமல்லவா உனக்கு?''

''ஐயோ! வேண்டாம்! நீ இப்போதே கூடப் புறப்பட்டுப் போய்விடு; எனக்கு ஆட்சேபணை யில்லை!''

''பாருவையும் அவள் குழந்தையையும் பார்க்காமல் போக நான் பிரியப்படவில்லை அம்மா!''

''சரி, நீ இருக்கப் போவது சிறிது நேரம். அதையும் வீணாக்காதே! எல்லாம் விவரமாய்ச் சொல்லு. என் நாட்டுப் பெண் பார்ப்பதற்கு எப்படி இருக்கிறாள்? பேத்தி நடக்க ஆரம்பித்து விட்

# டினோபால் மட்டுமே ஆடைகளை அதிகப்படியான வெண்மை யாக்கு மென்பதை விவேகமுள்ள அன்னைகள் அறிவார்கள்

டினோபால் வெண்மையைச் சேருங்கள்.

மின்னும் வெள்ளை உடுப்புகளில் உங்கள் குழந்தைகளைக் காண என்ன ஆனந்தமாயிருக்கும்! வெள்ளை ஆடைகளை கண் கூசும் அதிகப்படியான வெண்மையாக்கும்படி டினோபால் பிரத்தியேகமாய்த் தயாரானதென்பதை விவேகமுள்ள தாய்மார்கள் அறிவார்கள்.

மேலும், டினோபால் மிகச் சிக்கனமானது.

டினோபால் வெண்மையைப் பெற நேரமோ பணமோ விரயமாவதில்லை—ஒரு வாளி நிறைந்த ஆடைகளை வெண்மையாக்க கால் தேக்கரண்டி அளவே உங்களுக்கு தேவை! மேலும், டினோபால் வெண்மை நீடித்திருக்கும்: அதனால் உங்கள் ஆடைகளைத் துவைக்கும் ஒவ்வொரு தடவையும் இம்முறையைச் செய்யும் அவசியமில்லை.

ஞாபகமிருக்கட்டும்—

ஒரு சிறிதளவு
**டினோபால்**
வெள்ளைத் துணிகளை மிக
வெண்மையாக்கப் போதுமானது.

டினோபால் என்பது ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பாஸ்ல், ஸ்விட்ஸர்லாந்து கம்பனியாருடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

தயாரிப்பாளர்கள்:
சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், வடிவாடி, பரோடா

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்:
சுஹ்ரித் கெய்கீ ட்ரேடிங் லிமிடெட், த. பெ. 965, பம்பாய்-1. பி. ஆர்.

டாளா? தாத்தா பாட்டி என்றெல்லாம் சொல்கிறாளா? அவர்களை இங்கே அழைத்து வந்திருக்கக் கூடாதா நீ? ஆனால் அது எப்படி முடியும்? ஏதோ ரகசிய காரியமாக அல்லவா வந்திருக்கிறாய்? ராஜா! ஜாக்கிரதையாக இரு! உனக்கு ஏதாவது நேர்ந்து விட்டது என்று தெரிந்ததோ என் நெஞ்சு பிளந்து போய்விடும்!.....''

தாய்க்கும் மகனுக்கும் இடையில் இப்படி எத்தனையோ விஷயங்கள் பகிர்ந்து கொள்ளுவதற்கு இருந்தன. பின்னர் பாருவையும் அவள் குழந்தையையும் பார்த்துப் பரவசமடைந்தான் அவன்.

''முருகையா! இந்தச் சாமியார் வடிவேலு மாமாகிட்டே போகிறாராம். நீயும் அவர் பின்னோடு போகிறாயா? என்னடா, முழிக்கிறே? மாமா உனக்காகப் பெண்ணைப் பெற்று வைத்துக் கொண்டிருக்கிறாரடா, தயாராக!'' என்றாள் பாரு மகனிடம்.

''நான் சிங்கப்பூருக்குச் சண்டை போடத்தான் போவேன். கலியாணம் வேண்டாம். வடிவேலு மாமாகிட்டே துப்பாக்கி பிடிக்கக் கற்றுக் கொள்வேன்!'' என்று ஆணித்தரமாகக் கூறிய சிறுவனைக் கட்டி அணைத்து உச்சி முகர்ந்து மகிழ்ந்தான் வேடதாரி.

''முறைப் பெண் உனக்குக் கிடைக்கவில்லை என்றால் அதற்கும் சண்டை போட வேண்டுமடா!'' என்று பாரு இப்போதே போர்முரசு கொட்டினாள்.

''இல்லை அம்மா, இல்லை! வடிவேலு தன் மகளைப் பற்றி வேறு திட்டம் போட்டு வைத்திருக்கிறான்! உன் சிநேகிதி தாரா என்று இருக்கிறாளே...'' இவ்வாறு கூறிக் கொண்டே வந்த சந்நியாசி இடையில் நிறுத்திவிட்டு, ''தாரா! இங்கே ஒரு பள்ளிக்கூடம் நடத்திக் கொண்டிருந்தாளாமே? அதைத் தனக்காக ஒரு தடவை பார்க்கும்படி வடிவேலு என்னிடம் சொன்னான். அப்படியே கிராமப்புறத்தையும் சுற்றிப் பார்த்து விட்டு வருகிறேன். சரியாகச் சாப்பாட்டு நேரத்துக்கு ஆஜராகி விடுகிறேன்!'' என்றார். தாம் எடுத்து வந்திருந்த பையைத் தூக்கித் தோளில் தொங்க விட்டுக் கொண்டு வீதியில் இறங்கி வேகமாய் நடந்தார்.

**ப**ள்ளிக்கூடம் முன்பு இருந்ததை விட ஒரு பங்கு அதிகமாக வளர்ந்திருந்தது. முத்தையாவும், பொன்னம்பலமும் சொன்ன வாக்கைக் காப்பாற்றி வருகிறார்கள்; பள்ளிக்கூடத்தைச் செவ்வனே நடத்தி வருகிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டான் வடிவேலு.

ஒரு பக்கச் சுவரில் தாராவின் படமும் அதற்கு அடுத்தாற்போல் உமாகாந்தின் படமும் மாட்டப் பட்டிருந்தன. அவற்றுக்கு மாலைகள் போட்டிருந்தார்கள்.

அருகில் சென்று ஆராய்ந்தான் வடிவேலு. நிரந்தரமாகப் போட்டு வைக்கும் காகிதப் பூ மாலை அல்ல. உண்மையான மலர்கள். அன்றலர்ந்த வாடாத புஷ்பங்கள். பள்ளி நடத்துவோருக்கு உள்ள சிரத்தையையும் ஸ்தாபகரிடத்தில் அவர்கள் கொண்டிருந்த பக்தி மரியாதையையும் அந்த மாலைகள் புலப்படுத்தின. பள்ளி, தாரா எப்படி வைத்துக்கொண்டிருந்தாளோ அதே போல் சுத்தமாக இருந்தது.

கண்களில் ததும்பி நின்ற நீரை ஒரு விரலால் வழித்தெடுத்துச் சுண்டினான் வடிவேலு. தாராவைப் பற்றிய நினைவுகள் ஒரு பழைய கனவு போல் தேய்ந்து அரைகுறையாகத் தோன்றவில்லை; பசுமையாகவே இருந்தன, அவன் உள்ளத்தில். ஆனால் அவன் வாழ்க்கை?......

தாராவின் முகம் படத்தைச் சுற்றியிருந்த மலர்களைப் போல் புதுமைப் பொலிவும் மலர்ச்சியும் பெற்றுத்தான் விளங்கியது. 'வாழ்க்கை என்பது இல்லறம் மட்டும்தானா? வீடு வாசல், கணவன் குழந்தைகள் — இவைதானா? சிலருக்கு வாழ்க்கை என்பது அதுதான். அதிலேயே அவர்கள் மனத் திருப்தியும் நிறைவும் பெறுவார்கள். ஆனால் தாரா இதற்கெல்லாம் அப்பாற்பட்டவள். உன்னத லட்சியங்களையும், உயர் நோக்கங்களையும் கொண்டு அவற்றுக்காகப் பாடுபடுபவள். இல்லை, தாராவின் வாழ்க்கை பாழாகிப் போன பயனற்ற வாழ்க்கை அல்லவே அல்ல!' இவ்வாறு எண்ணிய வடிவேலு தேனூரரை விட்டுப் புறப்படு முன்னர் தாராவின் இப்போதைய விலாசத்தைப் பாருவிடமிருந்து கேட்டுப் பெற வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். 'வடிவேலு அவளுக்கும் சேதி சொல்லி அனுப்பியிருப்பதாகக் காரணம் கூறினால் போகிறது!'

பள்ளியை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்தான் வடிவேலு. கிராமத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கும் அவனுக்கு ஒரு ஞாபகத்தைக் கிளறியது. எந்த இடத்தையும் விட்டுப் பிரிய அவனுக்கு மனம் வரவில்லை. எல்லாப் பகுதிகளிலும் அவன் ஒரே சமயத்தில் வியாபித்திருக்க விரும்பினான். நடக்கிற காரியமா அது? நடக்கிற காரியம்தான் நடந்தது. காலாற நடந்து போனவன் மறுபடியும் காவிரி ஆற்றங் கரையை வந்தடைந்தான்.

திடீரென்று சாமியாருக்கு ஆசை அளவு மீறிப் பெருகியது. 'மீண்டும் காவிரி ஸ்நானம் எப்போது கிடைக்குமோ?'— தடியையும் பையையும் தரையில் போட்டுவிட்டு நீரில் இறங்கினான், மூழ்கினான், மிதந்தான், திளைத்தான், நீந்தினான். இதமாகத் தன்னைச் சூழ்ந்திருந்த தண்ணீரை விட்டு நீங்கிச் செல்ல மனம் வரவே யில்லை அவனுக்கு. கை காலெல்லாம் சளைக்கும் வரை புது வெள்ளத்தை எதிர்த்துப் போராடினான். வெகுதூரம் சென்ற பிறகு இரைக்க இரைக்கக் கரை ஏறி அமர்ந்தான். அவன் உட்கார்ந்த இடத்தில் நாணற் புதர்கள் சில மடிந்து ஒடிந்தன.....

குளித்துக் கும்மாளம் போடுகையில் நீந்தியபடி பின் துரத்தி வந்து கட்டிப் பிடிக்க முயலும் வடிவேலுவிடமிருந்து தப்பிக் கரை சேர்ந்து களைத்துப் படுத்துப் புரளுகையில் சக்குவின் உடல் பளுவைத் தாங்காமல் எத்தனை நாணல் கீற்றுக்கள் இவ்வாறே ஒடிந்து சரிந்து

மரகதப் பச்சை நிறத்தில் அவளுக்கென்று அமைந்த மிருதுவான மெத்தையாக மாறியிருக்கின்றன? சுற்றிலும் உயர்ந்து அடர்ந்து வளர்ந்திருந்த நாணல் காடு திரை போட்டது போல் அவர்களை மறைக்கின்றன. அவர்களுடைய இன்பத்துக்காக, ஒன்றுடன் ஒன்று உரசும் மூங்கில் புதர்கள் தாள வாத்தியமாக மாறுகின்றன. புள்ளினங்கள் அவர்களுக்காகக் கீதமிசைக்கின்றன. பூங்காற்றிலே நாணல் கீற்றுக்கள் ஒய்யாரமாக அசைந்தாடுகின்றன. கொஞ்சம் கொஞ்சமாகத் துணிச்சல் பெறும் அவன் கரங்களை ஒதுக்கித் தானும் விலகிக் கொண்டு மதர்ப்புடன் அவள் சிரிக்கிறாள். நாலாபுறமும் அவளுடைய நாணமற்ற நகைப்பு பரவுகிறது....

அத்துடன் இப்போது வேறு ஒரு சிரிப்பொலியும் கலந்து கேட்கிறது. சிப்பாய்களின் ஏளனச் சிரிப்பொலி. வடிவேலுவைப் போலவே இந்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்திருந்த பலருள் ஒரு சிறு கூட்டம் அந்த உணவு விடுதியின் ஒரு மூலையில் விரசமான சிரிப்பொலியை எழுப்புகிறது. சிரிப்புக்குக் காரணமும் அவர்களில் ஒருவனுடைய பேச்சிலிருந்து வடிவேலுவுக்குத் தெரிய வருகிறது. அவன் நெஞ்சு கொதிக்கிறது. அவர்களை வலுச் சண்டைக்கு இழுக்கிறான். அடியும் உதையும் பெற்றுக் கொள்கிறான். உடலெல்லாம் ரத்த விளாராக அந்தக் கோலத்துடனேயே சக்குவைக் காணச் செல்கிறான். ராணுவத்தினரின் உரையாடலிலிருந்து அவளுடைய விலாசத்தையும் தெரிந்து கொண்டிருக்கிறான், அவன். வீட்டைக் கண்டுபிடித்து உள்ளே புகுந்து போகிறான். அவன் நிலையைக் கண்டதும் அவள் மிரண்டு பதுங்குகிறாள். "'பன்றியை வீட்டிலே கொண்டு வைத்து வளர்த்தால் அது நன்றியுள்ள நாயாகாது. வீட்டையும் சாக்கடையாக்கிவிடும்' என்று அப்பா சொன்னார். அன்றைக்கு அவர் கூறியது எதுவும் என் காதுகளில் ஏறவில்லை. இன்றைக்குப் புரிகிறது, பிறவிக் குணம் என்பது தனியானதொன்று என்று. பணம் தானே உனக்குப் பிரதானம்? இன்று நான் பணக்காரன்; செல்வந்தன் மகளைக் கல்யாணம் செய்து கொண்ட சீமான்! உனக்கு இப்போது எவ்வளவு பணம் வேண்டும் சொல்!'' கால் சராய்ப் பைக்குள்ளிருந்து கத்தை நோட்டுக்களை உருவி அவள் முகத்தில் அடிக்கிறான் வடிவேலு. ''பொறுக்கி எடுத்து எண்ணிக் கொள்! எவ்வளவு இருக்கிறதோ அதற்கு உண்டானதை எனக்குக் கொடு!'' என்றவாறே அவளை நெருங்குகிறான்.

பீதியடைந்தவளாக அவள் பின்னுக்கு நகருகிறாள். 'என்னைத் தொடாதீர்கள்! நான்... நான்... ரோகி!''

அதிர்ச்சி அடைந்து சில விநாடிகள் சிலையாக நிற்கின்ற வடிவேலு, பின்னர் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடுகிறான். அவள் சிரிப்பொலி அவனைப் பின் தொடர்கிறது. ஆனால் இது வளமான சிரிப்பல்ல, வறட்டுச் சிரிப்பு. சாவைக் கை நீட்டி வரவேற்கும் வேதனைச் சிரிப்பு.

பல நாட்களுக்குப் பிறகு மரணப் படுக்கையில் கிடக்கும் சக்குவிடமிருந்து அவனுக்கு ஒரு கடிதம் வருகிறது. ராணுவ டாக்டர் ஒருவரையும் அழைத்துக் கொண்டு அவளைக் காணச் செல்கின்றான். ''ஒரு நாள்; இருபத்து நாலு மணி நேரம்!'' என்று கெடு வைக்கிறார் வைத்தியர். இரக்கம் இதயத்தை நிறைக்க, ''டாக்டர்! ஒரு வழியும் தோன்றவில்லையா உங்களுக்கு?'' என்று வடிவேலு கேட்கிறான். ''இருக்கிறது. ஆனால் நடைமுறையில் சாத்தியமல்ல'' என்கிறார் அவர்.

''என்ன வேண்டும் டாக்டர்? சொல்லுங்கள்!''

''பெனிஸிலின் கொண்டு வா! இவளை உயிர் பிழைக்க வைக்கிறேன். அதுவும் சீக்கிரம் வரவேண்டும்!'' என்று கூறிவிட்டு டாக்டர் பெட்டியைத் தூக்கிக் கொண்டு கிளம்பி விடுகிறார்.

போர்க் களத்தில் படுகாயமுற்று, ஆஸ்பத்திரியில் இருந்தும்கூட மருந்து கிடைக்காமல் அவதிப்படும் இந்தியச் சிப்பாய்கள் ஆயிரக்கணக்கில் இருப்பதை வடிவேலு நன்கு அறிந்திருக்கிறான். பிரிட்டிஷார் தங்கள் வசமிருந்த மருந்துகளையெல்லாம் வெள்ளையனுக்கே பயன்பட வேண்டும் என்கிற பேராசையுடன் சாமர்த்தியமாகப் பின்னோடு கொண்டு போய் விட்டார்கள்; ஜப்பானியர் தங்களைச் சிறை வைத்திருந்த சாங்கி கைதிகள் முகாமிலே எல்லா மருந்துகளையும் பத்திரப்படுத்திப் பூட்டி வைத்திருக்கிறார்கள் என்பதையெல்லாம் அவன் தெரிந்து வைத்திருக்கிறான். எந்த மருந்தையுமே அவர்களிடமிருந்து கேட்டுப் பெறுவதென்பது அவர்களை வெற்றி கொண்ட ஜப்பானியருக்கே மிகவும் கடினமான காரியம். அவ்வாறிருக்க, சஞ்சீவி மூலிகை போன்ற பெனிஸிலினையா அவர்கள் தனக்கு, ஓர் இந்தியனுக்குத் தரப் போகிறார்கள்?

தனக்குச் சொல்லி முடியாத தீங்கு இழைத்து விட்ட ஒரு துரோகி உயிர் பிழைப்பதற்காக, மனப் பூர்வமாய்த் தன்னால் வெறுக்கப்படுகிற ஒருத்தியின் நலனுக்காகத் திருடவும் துணிந்து விடுகிறான் வடிவேலு. (தொடரும்)



**உங்கள் ஆல்பத்துக்கு**

ஐரோப்பாவில் மிக உயர்ந்த தேசம் ஸ்விட்ஸர் லாந்து. ஐரோப்பியர்களின் உல்லாச யாத்திரை ஸ்தலமாக விளங்கும் நாடு. ஒவ்வொரு சிறிய கிராமமும் மின்சார வசதி பெறும் நாடு. நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர்கள் மின்சாரத்தின் முழுப் பயனையும் இங்கு அனுபவிக்கிறார்கள். நிலக் கரியின் தேவை இல்லாமலே பெரிய தொழிற்சாலை கள் இயங்கிப் பொருட்களை உற்பத்தி செய்யும் தேசம் ஸ்விட்ஸர்லாந்து. பெரிய யந்திரங்கள் முதல் மிக நுட்பமான கைக் கடிகாரம் வரை இந்த நாட்டில் செய்யப்படுகின்றன. சிறந்த கைக் கடிகாரங்களுக்குப் பெயர் பெற்ற தேசம் இதுதான். இங்குள்ள ஏரிகள் அற்புதமான அழகு வாய்ந்தவை. மத்திய தரைக் கடல் நாடுகளைப் போன்ற சீதோஷ்ண நிலை இங்கு இருப்பதால் திராட்சையும் கூடப் பயிராகி றது. மலை ஏறுவதில் வல்லவர்கள் ஸ்விஸ் மக்கள். 'ஸ்கி' என்னும் பனிச் சறுக்கல் விளை யாட்டுக்குப் பெயர் பெற்ற இடம் ஸ்விட்ஸர் லாந்துதான். ஸ்விட்ஸர்லாந்து மக்கள் உழைப்பாளிகள். ஓர் அங்குல நிலத்தைக் கூட வீணடிக்க மாட்டார்கள். இங்கு வளரும் புல்லைக்கூட இவர்கள் வீணுக்குவதில்லை. சூரிய வெப்பத்தால் உலர்ந்து காய்ந்து போகும் பசும் புல்லையும் பாழாக விடுவதில்லை. பெரிய சாக்குகளில் உலர்ந்த புல்லை மூட்டையாகக் கட்டிக் கழுதைகளின் மீது ஏற்றித் தொழு வத்திற்குக் கொண்டு வந்து சேமித்துக் கொள்ளுவார்கள். மாரிக் காலத்தில் கால் நடைகளுக்கு இந்த உலர்ந்த புல் பயன்படும். ஸ்விஸ் குடியானவப் பெண் ஒருத்தி காய்ந்த புல்லைக் கழுதை மேலேற்றிக் கொண்டு செல் வதையே இவ்வாரம் உங்கள் ஆல்பத்துக்காக வழங்கி இருக்கிறோம்.

## குழந்தைகளே, உங்களுக்கு எமது புது வருட வாழ்த்துக்கள்!

உலகத் தீவுகள்-2

### ஐஸ்லாந்து

பெயரைப் பார்த்ததும் இந்தத் தீவில் ஒரே ஐஸாகத்தான் இருக்கும் என்றுதானே நினைக் கிறீர்கள்? அதுதான் இல்லை. ஆர்க்டிக் வட் டத்துக்கு மிகச் சமீபத்தில் இருந்தாலும் கூட இந்தத் தீவு இதன் பெயருக்கு ஏற்றபடி உறை பனி மூடியதாக இல்லை. இந்தத் தீவின் தென் கரையில் கதகதப்பான கடல் நீர் வந்து மோதுகிறது. இதைத் தவிர இந்தத் தீவில் நூற்றுக்குமதிகமான எரிமலைகள் இருக்கின் றன. வெந்நீர் ஊற்றுக்கள் வேறு, ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. இந்தத் தீவின் ஜன நெருக்கம் மிகக் குறைவு. காரணம் நெருப் பைக் கக்கும் எரிமலைகளின் அபாயம் அடிக் கடி ஏற்படுவதுதான். இத்தீவில் உள்ள வெந் நீர் ஊற்றுக்களின் நீரைப் பம்ப் செய்து இங்குள்ள முக்கியமான நகரங்களின் வீடு களுக்கெல்லாம் உபயோகமாகும்படி அனுப்பு கிறார்கள். வீட்டைக் கதகதப்பாக வைத்திருக் கவும் வெந்நீர் ஊற்று நீரைப் பயன்படுத்து கிறார்கள். இந்த வெந்நீர் ஊற்றுக்களுக்கு அருகே பூமி கதகதப்பாக இருக்கும். இயற்கை அன்னையின் உதவியினால் பணச் செலவு இல் லாமலே இங்குள்ள பெண்கள் தங்களது ரொட்டிப்பாத்திரத்தைப் பூமிக்குள் புதைத்து வைத்து உணவைப் பக்குவம்செய்துகொள்ளு கிறார்கள். மாரிக் காலத்தில் உறைந்து கிடக் கும் ஏரிகளில் ஐஸ்லாந்துவாசிகள் சறுக்கல் நடனம் ஆடி மகிழ்வார்கள். அதன் அருகி லேயே வெந்நீர் ஊற்றின் இதமான கத கதப்பு நீரிலே வாத்துக்கள் சுகமாக நீந்திக் கொண்டிருக்கும். உறை பனியும் வெந்நீர் ஊற்றுக்களும் அருகருகேயுள்ள அதிசயமான தீவு இது. இந்தத் தீவில் ரயில் வண்டி கிடையாது. சிறிய கொழுத்த ஐஸ்லாந்து மட்டக் குதிரைகளால்தான் இங்கு போக்கு வரத்து நடைபெறுகிறது.





# புள்ளி மான் பொம்மை

காகிதப் பொம்மைகள் செய்து ரொம்ப நாட்களாகி விட்டன போலிருக்கிறதே? கீழே கொடுத்துள்ள மாதிரியைப் போல் நல்ல கார்ட்ரிட்ஜ் காகிதத்தில் வரையுங்கள். கார்ட்ரிட்ஜ் காகிதம் கிடைக்காவிடில் கெட்டியான




டிராயிங் காகிதத்தையும் உபயோகிக்கலாம். அரை அங்குலக் கட்டங்களாக வரைந்து கொண்டீர்களானால் ஏழரை அங்குல உயரமுள்ள மான்குட்டி உருவாக்கலாம்.

முதலில் மானின் உடலிலிருந்து ஆரம்பிக்கலாமா? மான் ஒய்யாரமாக நடந்து செல்லும் நிலையில் உள்ளது. நான்கு கால்களும் ஒரே நிலையில் இல்லை. ஆகவே உடலைக் கத்திரிக்கும் போது விசேஷ கவனம் செலுத்தியாக வேண்டும். காகிதத்தை இரண்டாக மடித்துக் கொண்டு, மடிப்பில் மானின் முதுகு இருக்கும்படி மாதிரியை வரைந்து கொள்ள வேண்டும். காகிதத்தின் ஒரு பக்கத்தில் உடல், அடிவயிற்றில் நீட்டிக் கொண்டிருக்கும் A, B என்ற துண்டுகள், 2, 4 என்று குறிப்பிட்டுள்ள இரண்டு கால்களையும் மறுபக்கத்தில் (மடிப்பைப் பிரிக்காமல்) இதே போன்று உடல், A, B துண்டுகள், கால்களில் 1, 3 என்று குறிப்பிட்டுள்ளதையும் வரைந்து கொள்ள வேண்டும். இனி காகிதத்தைப் பிரித்து மானின் முழு மாதிரியையும் (இரண்டு உடல்களையும் மாறுபட்ட கோணங்களில் உள்ள நான்கு கால்களையும்) கத்திரிக்கோலால் கத்திரித்துக் கொள். கத்திரிக்கோலினால் வெட்ட முடியாத சில மூலைகளைப் பிளேடினால் கீறி வெட்டிக் கொள். 'S' என்று குறிப்பிட்டுள்ள இடங்களில் வெட்டுவாய்களை உண்டாக்கிக் கொள்ள மறக்காதே. கால்களின் நடுவேயுள்ள புள்ளிக் கோட்டின் மீது கத்தியின் கூரற்ற முனையால் அழுத்திக் கீறிக் கொள். கிழிந்து விடாதே. இனி, குதிரைக்குச் செய்தது போல் மானின் உடலை ரூல் தடியின் கீழ் வைத்து இழுத்துச் சற்றே வளைந்து உருட்சியாக இருக்கும்படி செய்து கொள். இனி, அடி வயிற்றில் நீட்டிக் கொண்டிருக்கும் A, B என்ற துண்டுகளை அதனதன் இனத்தோடு, இரண்டு உடல் பக்கங்களுக்கும் ஓர் அங்குல இடைவெளி இருக்கும்படி சேர்த்து ஒட்டி விடு. கால்களில் கீறியல்லவா? அதை உட்பக்கமாகச் சற்றே மடித்துவிடு. மான் உறுதியாக நிற்க இது உதவும்.

இனி, தலையையும் இதே போல் மடித்த காகிதத்தின் மடிப்பில் மானின் வாய் அமையும்படி வரைந்து கொண்டு வெட்டிக்கொள். புள்ளியிட்ட இடங்களில் கத்தியின் பின்பக்கத்தால் அழுத்திக் கீறிக்கொள். கண்ணைப் பிளேடினால் கீறித் துவாரம் செய்துகொள். கண் துவாரத்தை மூடி ஒரு கறுப்புக் காகிதத்தைத் தலையின் உட்பக்கமாக ஒட்டி விடு. மானின் கொம்புகளையும் மடித்த காகிதத்தின் மடிப்பின் ஓரமாக வரைந்து இரண்டு வரும்படி வெட்டிக் கொள். புள்ளிக் கோடுகளின் மீது கீறி இலேசாக மடித்து உருட்சியாக்கிக் கொள். அந்தக் கொம்புகளைத் தலையில் சரியான இடத்தில் நுழைத்துத் தலையின் உட்புறத்தில் பசை தடவிப்



பொருத்திவிடு. கடைசியாக இருப்பது வால் ஒன்றுதான். இதை ஒரு தனித் துண்டுக் காகிதத்தில் வெட்டிக் கொள். ஒரு வால் இருந்தால் போதும். முடிவாக உடலோடு தலையை இணைக்க வேண்டும். தலைப் பகுதியை உடலின் தோள்பட்டையில் உள்ள வெட்டு வாயில் நுழைத்து, C என்ற பாகத்தில் பசை தடவி உடலின் இரு பக்கமும் ஒட்டி விட்டால் உடலோடு தலை பொருந்தி நிற்கும். இதே போல் மான் உடலின் பின்புறம் உள்ள வெட்டு வாயில் வாலைச் செருகி ஒட்டிவிடு. இப்போது மான் கம்பீரமாக உருவாகி நிற்கும் அழகைக் காண்பாய். சாம்பல் நிறக் காகிதத்தில் சிறு சிறு வட்டக் காகிதங்களைக் கத்திரித்து உடலில் புள்ளிகளாக ஒட்டிவிடு. இன்னும் அழகாக இருக்கும்.

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.

எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.








மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

ECHO.C.4.TAM.

# நட்புப் பணியில் வளர்ந்த பாங்கி

இந்தியாவில் உள்ள பெரிய பாங்கிகளின் வரிசையில் பதின்மூன்றாவதும், தென்னிந்திய பாங்கிகளில் இரண்டாவதுமாக ஸ்தானம் வகிக்கும் இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கு இவ்வாண்டுடன் இருபத்தைந்தாண்டுகள் நட்புப் பணி ஆற்றியுள்ளது. அதனுடைய வெள்ளி விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடத் திட்டமிட்டிருந்தனர். ஆனால் நாட்டின் தற்போதைய நெருக்கடிநிலைமையை முன்னிட்டு விழா கைவிடப் பட்டது. ஆனாலும் அதன் உயர் பணி உற்சாகம் குன்றாது மேலும் மேலும் விரிவடைந்து வருகிறது. சென்னை மௌண்ட் ரோட்டில் அதனுடைய அடுக்கு மாடிக் கட்டடம் வேகமாகப் பூர்த்தியாகி வருகிறது. அனேகமாக இப்போது கொண்டாடாது விடப்பட்ட விழா ஸ்வப் புதுக் கட்டடத்திலே கொண்டாடக் கூடும்.



திரு எம். ஸிடி. முத்தையா

1936–ம் ஆண்டு எம். ஸிடி. சிதம்பரம் செட்டியாரால் இப்பாங்கி தொடங்கப்பட்டபோது அயல்நாட்டு வாணிபத்துக்கு உதவும் செலாவணி நடவடிக்கை முழுதும் ஆங்கில பாங்கிகளிடமே குவிந்திருந்தது. நம் நாட்டவர்கள் வெளிநாடுகளில்—முக்கியமாகக் கீழை நாடுகளில் வர்த்தகம் நடத்தினாலும், வெளிநாட்டுப் பாங்குகள் மூலமே செலாவணி நடவடிக்கைகள் வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. இந்தக் குறையை நீக்கவே இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கு ஆரம்பிக்கப் பட்டது. காரைக்குடியில் ஒரு காரியாலயமும் மலாயாவிலும் பர்மாவிலும் இரண்டு கிளைகளும்தான் முதலில் தொடங்கப்பட்டன. இரண்டாவது உலகப் போரில் இந்த நாடுகள் ஜப்பான் ஆதிக்கத்திற்குள் அகப்பட்ட போது பாங்கின் வளர்ச்சி சற்றுத் தடைப்பட்டது.

ஆனால் அமைதி நிலைமை திரும்பியபோது நொடித்துப்போன இந்திய வர்த்தகர்களைக் கைதூக்கிவிட இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கி புரிந்த நற்பணி அளவிடற்கரியது. சொத்து மதிப்பின் பேரில் மட்டுமே கடன்கள் வழங்கப்படும் என்ற சம்பிரதாயமான பாங்கி முறைகளைத் தளர்த்தி வியாபாரிகளின் நாணயத்தின் மீதே கடன்கள் உதவிப் பலருக்குக் கைகொடுத்து உதவியது இந்த பாங்கி. அதற்கு ஊக்கம் அளித்த பெருமை எம். ஸிடி. சிதம்பரம் செட்டியாரைச் சாரும்.

இந்த நட்புப் பணியின் விளைவாக பாங்கிக்கும் அதன் கணக்கற்ற வாடிக்கைக்காரர்களுக்குமுள்ள பிணைப்பு நாளுக்கு நாள் வலுப்பெற்றதுடன் பல புதிய கிளைகளை ஸ்தாபிக்கவும் மேல் நாடுகளில் கையாளப்படும் பல புதுப் புதுத் துறைகளில் பாங்கிகளின் சேவைகளை விஸ்தரிக்கவும் வாய்ப்புக்கள் கிடைத்தன. தவணைக் கடன் உதவி நம் நாட்டில் வேகமாகப் பரவி வருகிறது. மத்தியதர வகுப்பாருக்குத் தேவைப்படும் பல அவசியப் பொருள்களைத் தவணைக் கடன்கள் மூலம் பெற்றுக் கொள்ளும் முறை நமது நாகரீக வளர்ச்சிக்கும் இப்போதைய வாழ்க்கைக்கும் தவிர்க்க முடியாததாகிவிட்டது. இத்துறையில் இந்தியன் ஓவர்ஸீஸ்பாங்கி புரிந்து வரும் சேவை குறிப்பிடத்தக்கது.

இரண்டு கிளைகளுடன் 12 லட்சம் ரூபாய் மூலதனத்துடன் ஆரம்பிக்கப்பட்ட இப்பாங்கி இப்போது 80 கிளைகளுடன், 153 லட்சம் மூலதனமும் காப்பு நிதிகளும் உடையதாக, இந்தியாவைத் தவிர ஆறு கீழை நாடுகளில் கிளைகளை அமைத்துக் கொண்டு, கிளைகள் இல்லாத நாடுகளில் தகுதியான தொடர்புகள் வைத்துக்கொண்டு சுறுசுறுப்புடனும் சிறப்பான பெயருடனும் பணியாற்றி வருகிறது. சேவை உணர்ச்சியும், பெரிய வாடிக்கைக்காரர் சிறிய வாடிக்கைக்காரர்கள் என்ற பாகுபாடு இல்லாது எல்லோருக்கும் ஒரே மாதிரியான கவனிப்பு அளித்து உதவி செய்யும் மனப்பான்மையுமே இந்தப் பாங்கியின் குறிக்கோளாகும். இத்தனை ஆண்டுகள் இந்தப் பாங்கி செய்து வந்த நட்புப் பணி வருங்காலத்தில் மேன்மேலும் அபிவிருத்தியடைய வாழ்த்துகிறோம்.



ஒரு நடிகை வெளிநாடுகளுக்குப் போய் வந்தாள். பத்திரிகை நிருபர்கள் அவளைப் பேட்டி கண்டார்கள். "வெள்ளைக்காரப் பெண்களுக்கு நம் தமிழ் நாட்டுச் சேலைகளின் மீது அபார மோகம். எப்படிச் சேலை கட்டுவது என்று என்னைத் துளைத்தெடுத்து விட்டார்கள். தினந்தோறும் கூட்டம் கூட்டமாக என்னிடம் வந்தார்கள். நானும் அலுப்பின்றி அவர்களுக்குச் சேலை கட்டும் விதத்தைக் கற்றுக் கொடுத்தேன்" என்று பெருமையோடு சொன்னாள் நடிகை.

"அப்படியானால், உங்களுக்கு ஓய்வு நேரம் ரொம்பவும் குறைவாகத்தான் இருந்திருக்கும்; அதை எப்படிச் செலவிட்டீர்கள்?" என்று கேட்டார் ஒரு நிருபர்.

"ஓய்வு நேரத்தில், எப்படிச் சேலை கட்டுவது என்று என் பாட்டி எனக்குச் சொல்லிக் கொடுத்தாள்!" என்றாள் நடிகை.

# நந்தவனம்

சோமு



# 53. திருமண அழைப்

திருவாளர் செந்தில்நாயகம் அவர்களைச் சந்திக்கச் சென்ற சிவகாமிநாதன் மறுநாட் காலையிலேதான் சந்திரவிலாஸ் விடுதிக்குத் திரும்பினான்.

சிவகாமிநாதன் எங்களிடம் சொன்ன செய்தி மகிழ்ச்சி தருவதாக மட்டுமில்லை; வியப்பை அளிப்பதாகவும் இருந்தது.

திவான்பகதூருடைய வீட்டுக்குச் சிவகாமிநாதன் சென்றபோது அங்கே வக்கீலுடன் கூடச் சித்திரானந்தரும் இருந்தார்! ஓரளவு இதை எதிர்பார்த்திருந்தான் சிவகாமிநாதன்! ஆனால் அவன் முற்றிலும் எதிர்பாராத ஒரு மனிதரும் அங்கே இருந்தார். அவர் வேறு யாருமில்லை, எல்லா மகிமைகளும் ஒருங்கே பொருந்திய வல்லாளவேலர் அவர்கள்தான்!



எந்த வல்லாளவேலர் சிவகாமிநாதனை ஆற்று மணலில் பதுங்கிப் பதுங்கி உளவு பார்த்தாரோ அதே வல்லாளவேலரை, எந்த வல்லாளவேலரால் தனது தந்தையின் வாழ்வில் இத்தனை பெரிய விபரீதங்கள் விளைந்தனவோ அந்த வல்லாளவேலரை, வக்கீல் செந்தில்நாயகம் அவர்களின் முன்னிலையில் அடக்க ஒடுக்கமாகப் பார்த்தபோது சிவகாமிநாதனுக்கு அவனுடைய கண்களையே நம்ப முடியவில்லை! அப்போது சித்திரானந்தர் பேச ஆரம்பித்தார்.

''தம்பி! பிரிவுபட்ட சக்திகள் எல்லாம் ஒன்று சேருகிற வேளை வந்து விட்டது. அதற்கு அறிகுறியாகத்தான் இதோ நமது வல்லாளவேலரை இங்கே பார்க்கிறாய்!'' என்றார் சித்திரானந்தர்.

அப்படி அவரை ஒரே அடியாக ஒன்று சேர்த்து இணைக்கும் நிகழ்ச்சி என்ன நடந்தது?

சிவகாமிநாதன் திருநெல்வேலிக்கு வரப் போவதாகக் கடிதம் எழுதினானல்லவா? அந்தக் கடிதம் கிடைத்த அன்றைக்கே திவான்பகதூர் அவர்கள் சித்திரானந்தருக்கு ஒரு கடிதம் எழுதினார், தம்மை உடனே வந்து பார்க்கும்படியாக.

ஒரு வாரத்தில் சித்திரானந்தர் வண்ணார்பேட்டைக்கு வந்து சேர்ந்தார். வந்து சேர்ந்தவர் வக்கீலை உடனே கல்கத்தாவுக்கு வரும்படி வற்புறுத்தினார்.

''வக்கீலையா! இங்கே சிவகாமிநாதனுக்கு இந்தப் பெண்ணை மணம் முடிப்பதாக நாம் முடிவு செய்து விடுகிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள். இதற்குப் பிறகு சிவகாமிநாதனின் தாயார் ஏதாவ[illegible]ப்புச் சொன்னால் நம்முடைய நிலைமை மிகவும் மே[illegible] விடும்.

ஆகையால் சிங்கம்புத்தூருக்குச் சென்று திருமணப் பேச்சை முடிப்பதற்கு முன்பாக நாம் கல்கத்தாவுக்குப் போய்ச் செண்பகசுந்தரி அம்மாளின் சம்மதத்தைத் தெரிந்து கொண்டு வர வேண்டும். அந்த அம்மாள் இந்தத் திருமணத்துக்குச் சம்மதம் தெரிவித்து விட்டால் போதும். மறு விநாடியே இந்தக் கலியாண உறவை முடிவு செய்து விடலாம்!'' என்றார் சித்திரானந்தர்.

''சிங்கம்புத்தூராரின் சம்மதத்தைப் பெறுவதுதான் கஷ்டம் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் இப்படிச் சொல்லுகிறீர்களே!'' என்று கேட்டார் திவான்பகதூர்.

''வக்கீலையா! வல்லாளவேலர் ஒருவர் குறுக்கே நின்று இத்தனை ஏற்பாடுகளையும் குழப்பியடித்து விடுவாரோ என்றுதானே நீங்கள் தயங்குகிறீர்கள். அதற்கு அவசியமே இல்லை. சிவகாமிநாதனின் தாயார் இந்தத் திருமணத்துக்குச் சம்மதம் தெரிவித்து விட்டால் போதும். வேறு யாரைப் பற்றியும் நீங்கள் கவலைப்படவே வேண்டாம். நமது வல்லாளவேலர் என்னுடைய கைப்பிடிக்குள்ளே இருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று சொன்னார், பூர்வாசிரமத்தில் கடலையாண்டியாக விளங்கிய சித்திரானந்தர்!

''அது எப்படி?'' என்று கேட்ட திவான் பகதூருக்குச் சித்திரானந்தர் அந்த இரகசியத்தை விளக்கினார்.

தேசாந்திரமாகப் புறப்படுவதற்கு முன்னால், கடலையாண்டி திருக்குற்றாலத்துக்குச் சென்று வல்லாளவேலரைச் சந்தித்த நிகழ்ச்சியையும், ஐந்தருவிப்பாதையிலே வல்லாளவேலர் கடலையாண்டியிடம் செய்து கொடுத்த சபதத்தையும் சித்திரானந்தர் வக்கீலிடம் சொன்னபோது வக்கீலுக்கு முகம் மலர்ந்தது.

''கடலையாண்டி! எப்பொழுதாவது ஒரு நாள் அந்த வில்வநாதனுக்கு ஏதாவது ஒரு உதவி செய்ய முடிந்தால் அதுதான் எனக்கு நிம்மதி. மனசைத் திறந்து சொல்கிற வார்த்தை இது. அப்படி ஒரு உதவி செய்யாமற் போனால் எனக்கு என்னுடைய கடைசிக் காலத்தில் அமைதி இராது. வெளியே நாலு பேரைப் போல் நடமாடுவேன். ஆனால் மனசுக்குள் நிம்மதி இராது. அந்த ஒரு சந்தர்ப்பம் எப்பொழுதாவது வரவேண்டும். அதுதான் என்னுடைய ஆசை!''

இவ்வாறு வல்லாளவேலர் கடலையாண்டியிடம் கூறிய போது அதை அப்படியே விட்டுவிடவில்லையே கடலையாண்டி! தொடர்ந்து அவரிடம் உறுதியோடு வார்த்தையாடி ஒரு பெரிய வாக்குறுதியையும் பெற்றுக் கொண்டார் அல்லவா?

''கடலையாண்டி! நான் செய்த குற்றம் எனக்குத்தான் தெரியும்! அந்த நிலைமையில் ஒரு வாக்குறுதி கொடுக்கிறேன். எப்பொழுதாவது என்னால் வில்வநாதனுக்கு ஒரு பெரிய உதவி செய்யக் கூடிய சந்தர்ப்பம் வந்தால், அப்போது முழு மனசோடு அதைச் செய்வேன். இது சத்தியம்! செண்பகநாயகி அம்மன் ஆணை, இது சத்தியம்!''

இப்படிப்பட்ட ஆணித்தரமான சபதம் ஒன்று தம் கைவசம் இருக்கிறது என்பதைச் சித்திரானந்தர் சொல்லி வக்கீல் செந்தில்நாயகம் அவர்களைத் துரிதப்படுத்தினார்!

கல்கத்தாவில் வக்கீல் அவர்களுக்கும் சித்திரானந்தருக்கும் அதிகமான சிரமம் ஒன்றும் இருக்கவில்லை. முதன் முதலாகச் சித்திரானந்தர் தம்முடைய வீட்டுக்கு வந்து போன வினாடியிலிருந்து தனது மனப்பான்மையில் ஏற்பட்ட பெரிய மாறுதலையும், பிறகு அவருடைய அற்புதக் கடிதத்தினால் நேர்ந்த நிகழ்ச்சிகளையும் உருக்கத்தோடு சொன்னாள் செண்பகசுந்தரி.

''உங்கள் இருவருக்கும் தெரியாத யோசனையாக நான் என்ன புதிதாகச் சொல்லி விடப் போகிறேன்? வேறு யாராவது இப்படி ஒரு திருமண யோசனையை என்னிடம் சொல்லியிருந்தால் நான் உடனே மறுத்துப் பேசியிருப்பேன். ஆனால் நீங்கள் இருவருமோ ஆதியோடு அந்தமாக எல்லா நடப்புக்களும் தெரிந்தவர்கள். எல்லா நிகழ்ச்சிகளிலும் பங்கு கொண்டவர்கள். உங்களுடைய விருப்பம் அப்படி இருக்குமானால் அதுவே தான் எனது விருப்பமுமாக இருக்க வேண்டும்!''

இவ்வாறு கூறி விட்டுச் சற்று நேரம் மௌனமாக இருந்தாள் செண்பகசுந்தரி. பிறகு சொன்னாள்:

''எதற்கும் சிவகாமிநாதனைப் பார்த்து அவனுடைய மன நிலையையும் தெரிந்து கொள்வது நல்லது!''

செண்பகசுந்தரி இவ்வாறு சொன்னதும் சித்திரானந்தர் புன்முறுவல் செய்தார். சென்னையில் மாலதியும் சிவகாமிநாதனும் ஒருவரையொருவர் சந்தித்த கதையைப் பற்றி அவர் எதுவுமே பேசவில்லை.

''அம்மா! இன்னும் இரண்டு வாரங்களில் சிவகாமிநாதனை ஒரு தெளிவான முடிவோடு இங்கே அனுப்பி வைக்கிறோம். அதன் பிறகு நீங்கள் அவனோடு புறப்பட்டுச் சிங்கம்புத்தூருக்கு வந்து சேருங்கள்!''

இவ்வாறு கூறினார் சித்திரானந்தர். இதன் பிறகு திவான்பகதூரும் சித்திரானந்தரும் கல்கத்தாவிலிருந்து புறப்பட்டு நேரே வண்ணார்பேட்டைக்கு வந்து இப்போது வல்லாளவேலரையும் அங்கே வரவழைத்திருக்கிறார்கள்!

''தம்பி! கல்கத்தாவில் நடந்த முடிவு இதுதான்! இனிமேல் நீதான் உன்னுடைய முடிவைச் சொல்லவேண்டும்!'' என்று கேட்டார் சித்திரானந்தர் சிவகாமிநாதனிடம்.

சிவகாமிநாதன் மறுமொழி பேசாது புன்முறுவலோடு வல்லாளவேலரைப் பார்த்தான்! வல்லாளவேலர் சொன்னார் :

''தம்பி! நான் நினைத்தது ஒன்று. நடந்திருப்பது ஒன்று. நேற்று வரை நீங்கள் யாரோ ஒரு இளைஞராக எனக்குத் தோன்றினீர்கள். நேற்று வரை நானும் வக்கீல் குமாஸ்தாவும் உங்களை உளவு பார்த்து வந்ததின் நோக்கமே வேறு. ஆனால் இனி அப்படியில்லை. மறைந்து சென்ற வில்வநாதனுக்கு உதவக் கூடிய ஒரு சந்தர்ப்பம் எனக்கு இப்போது கிடைத்திருக்கிறது என்பதைச் சித்திரானந்தர் அவர்கள் எனக்கு உணர்த்தி விட்டார். இந்தச் சந்தர்ப்பத்தை நான் கை நழுவவிடமாட்டேன். இந்த உதவியினால் மறைந்த ஆத்மாவுக்குச் சாந்தி ஏற்படும் என்பது ஒருபுறமிருக்க, என் வாழ்நாளின் கடைசிக் காலத்தில் எனக்குமே ஒரு மனச்சாந்தி இதன் மூலமாகத்தான் ஏற்படவேண்டும்!'' என்றார் வல்லாளவேலர். அவருடைய குரலில் பச்சாத்தாபமும் உருக்கமும் விம்மி ஒலித்தன.

திவான்பகதூர் செந்தில்நாயகம் சிவகாமிநாதனைத் தனியாக அழைத்துப் போய் அவனிடம் சொன்னார்:

''தம்பி! பாஷாணப் பொருள்களை அனலிலே நீற்றி நீற்றித்தான் மருந்து செய்கிறார்கள் நம்முடைய வைத்தியர்கள்! அப்படி அவற்றைப் பக்குவப்படுத்தும் போது, உயிரை மாய்க்கிற கொடிய விஷமானது தனது கொடிய இயல்பிலே மாற்றம் பெற்று, உடம்புக்கு அமுதமாக மாறி விடுகிறது. இது போலத்தான் மனித மனமும் அதன் தீய சக்திகளும்! கெடுதியான சக்தியே நன்மையாக மாறுவது என்பது, வாழ்க்கையின் அதிசயமான ஒரு ஸ்புடம்! தன்னை எதிர்த்து வந்த சூரபதுமனைத் தனக்கு வாகனமாக மாற்றிக் கொண்டான் முருகப் பெருமான்! தெய்வ அருள் கிட்டும் போது, தீய சக்திகள் எல்லாம் நமக்குச் சாதகமான சக்திகளாக மாறி விடுகின்றன! இதுதான் வாழ்க்கை என்ற நாடகத்தின் நாடகப் பண்பு. இனி உன் வாழ்நாளில் உன்னுடைய முன்னோர்களின் இலட்சியங்களை நிறைவேற்றுவதற்கான நற்காலம் பிறந்து விட்டது! உனக்கு என் வாழ்த்து !''

## 54. மங்கள வாழ்த்து!

திவான்பகதூர் அவர்களின் வீட்டில் நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் எங்களிடம் சொல்லி விட்டுக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டான் சிவகாமிநாதன். அவனுடைய திருமண ஏற்பாடுகளை நிறைவேற்றும் பொறுப்பு அவனிடமோ அல்லது மாலதியிடமோ சாராமல் அந்த முழுப் பொறுப்பையும் தாமே ஏற்றுக் கொண்டு விட்டார் வல்லாளவேலர்! இதனால் அந்த ஏற்பாடுகள் எவ்வித விக்கினமும் இல்லாமல் செவ்வனே நடைபெற்றன.

சிவகாமி நாதன் கல்கத்தாவுக்குச் சென்ற பிறகு இரண்டு மூன்று வாரம் கழித்துச் சிங்கம்புத்தூரிலிருந்து எனக்கும் லாலாவுக்கும் திருமண அழைப்பு கிடைத்தது. அந்த அழைப்போடுகூடச் சிவகாமிநாதன் எங்களுக்கு ஓர் உருக்கமான கடிதமும் எழுதியிருந்தான். ஆற்று மணலில் எங்களைச் சந்தித்த அந்நிகழ்ச்சியைக் குறித்து ஏதேதோ அன்பு மொழிகளைக் கொட்டியிருந்தான் சிவகாமிநாதன்!

கலைஞர்கள் மிகவும் உணர்ச்சிவசப்பட்டவர்கள் என்று சொல்லுவதுண்டு. அப்படிப்பட்ட ஒரு கலையுள்ளத்தில் மெய்யான அன்பு எங்களிடம் தோன்றியிருக்கும்போது, அந்த அன்பு மொழிகளில் எத்தனை ஆழமும் வேகமும் இருக்கும்!!

லாலாவும் நானும் சிங்கம்புத்தூர்த் திருமணத்துக்குச் சென்றபோது நாங்கள் மட்டும் செல்லுவதாகத் தோன்றவில்லை எங்களுக்கு. எங்களோடு அந்த ஓவிய இளைஞனுடைய வரலாறு முழுவதையுமே நாங்கள் எடுத்துச் செல்வது போல் ஓர் உணர்ச்சி எனக்கும் ராம்சிங்கிற்கும் ஏற்பட்டது!

ஆம்; திருமணச் சடங்கு நிறைவெய்தியபோது அந்த மண மண்டபத்தில் எத்தனையோ நூற்றுக்கணக்கான ஆடவரும் பெண்டிரும் மணமக்களை வாழ்த்தினார்கள். சிவகாமிநாதனும் மாலதியும் தரையிலே குனிந்து வணங்கி எழுந்த போது செல்வியும் பொன்னுத்துரையும் திவான் பகதூரும், சித்திரானந்தரும்

மனமுவந்து ஆசி நல்கினார்கள். முகமும் உள்ளமும் மலர அந்த ஜமீன் மாளிகையின் பழைய ரதசாரதி சுப்பையா கூட்டத்துக்கு மத்தியிலே நின்று குதூகலமாக ஆனந்தக் கண்ணீர் வடித்தான். வந்தவர்களுக்கெல்லாம் பன்னீர் தெளித்தான். சந்தனம் வழங்கினான். வல்லாளவேலரோ தமது கையினாலேயே தேங்காயும் வெற்றிலை பாக்குந் தாம்பூலமும் வாரி வாரிக் கொடுத்தார். இத்தனை மனிதர்களும் இந்தப் பரந்த நிலப்பரப்பிலே நின்று மணமக்களுக்கு ஆசி வழங்கியதை நாங்கள் பார்த்தோம். அதே சமயம் இந்த மக்கள் கூட்டத்துக்கு மேலே இத்தனை விருந்தினர்களும் நெருக்கிக் கொண்டு நின்ற அந்தத் திருமணச் சூழலிலே, மண வேள்வியின் புனிதமான யாகப் புகைக்கு மேலே மேக மண்டலத்தில் எங்கள் கண் முன்னால் வேறு சில உருவங்கள் தெரிந்தன. செண்பக நாயகி கோவிலின் சுவர் ஓவியங்களைப் புதுப்பிக்க வேண்டும் என்று கனவுகண்ட ஜமீந்தார் அனவரத புவனபதி, அந்தக் கனவை நனவாக்குவதற்காகத் தமது மகனை அவரிடம் ஒப்படைத்த முதிய ஓவியர் சிவகாமி நாதர், இந்தப் புண்ணிய ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதற்கு முயன்று அந்தக் கலைக் கனவுகளிலே நிறைவு காண முடியாமல் எதிர்பாராத விபரீதச் சூழலிலே தன்னைப் பறி கொடுத்த வில்வநாதன் — இந்த மூன்று உருவங்களும் திருமண வேள்விப் புகையின் மேக மண்டலத்திலே காட்சி தந்தார்கள். இரண்டு கைகளையும் உயர்த்தி மணமக்களுக்கு ஆசி நல்கினார்கள். அந்த மங்களக் காட்சியிலே நானும் ராம்சிங்கும் மெய்ம் மறந்து நின்றுகொண்டிருந்தபோது, வல்லாள வேலரையும், திவான் பகதூரையும் தம்மோடு சேர்த்து அழைத்துக் கொண்டு எங்கள் முன்னால் வந்தார் சித்திரானந்தர்.

"நண்பர்களே, நீங்கள் இருவரும் உங்களுடைய திருமணப் பரிசை அன்றைக்கே சிவகாமிநாதனிடம் கொடுத்து விட்டீர்கள். இந்த உலகில் வேறு எந்தப் பரிசுக்கும் அதற்கு ஒப்பான மதிப்பு இல்லை. அத்தகைய சித்திரமடலை நீங்கள் உங்களுடைய பரிசாக அன்றைக்கே வழங்கி விட்டீர்கள். நான் மணமக்களுக்குக் கொடுக்கக் கூடிய பரிசு உண்டு. அது இந்தச் சிறிய பெட்டிக்குள்ளே இருக்கிறது. என்னுடைய இந்தப் பரிசானது நீங்களும், நானும், வக்கீலையாவும், வல்லாள வேலரும் எல்லாருமாகச் சேர்ந்து நம் ஒவ்வொருவருடைய கையாலும் தொட்டு வாழ்த்தி வழங்க வேண்டிய பரிசாகும். ஆகையினால் இதை அன்போடு உங்கள் கையினால் தொட்டு வாழ்த்தி ஆசியோடு நல்குங்கள்!"

சித்திரானந்தர் கொடுத்த அந்தப் பெட்டியை நாங்கள் அனைவரும் மிகுந்த பக்தியோடு வாங்கி வாழ்த்திச் சித்திரானந்தரிடம் கொடுத்து அவருடைய ஞானக் கரங்களால் மணமக்களுக்குக் கொடுக்கும்படி கூறினோம். வல்லாள வேலர் அந்தப் பெட்டியின் நெற்றியிலே சந்தனப் பொட்டு வைத்துக் குங்குமமும் இட்டார்.

"மேளம்! மேளம்!" என்று கூவினார் திவான்பகதூர் செந்தில் நாயகம்.

"ரீம் ரீம்" என்று கொட்டு மேளம் வாசித்தார்கள்.

பெண்கள் மங்கல ஒலியோடு குரவையிட்டார்கள்.

அந்தத் திருமணப் பந்தலிலே கூடியிருந்த அத்தனை மக்களும் பூக்கள் சொரிந்தார்கள்.

அங்கே கூடியிருந்த ஆடவரும் பெண்டிரும் ஆனந்த வாழ்த்துக் கூறினார்கள்.

ஜமீந்தாரின் மாளிகை முழுவதும் பரவி நின்ற இதய மகிழ்ச்சியிலே ஆயிரம் குரல்கள் ஏக காலத்தில் வாழ்த்தொலியை முழங்கின!

சித்திரானந்தர் தேவதைகளை மனத்தினால் வணங்கி, மறைந்த பெரியோர்களின் ஆசியை இதயத்திலே வேண்டிப் பெற்று, அந்தத் திருமணப் பரிசை ஒரு தாம்பாளத்திலே வைத்து மணமக்களிடம் நீட்டினார். மாலதியும் சிவகாமிநாதனும் பணிந்து வணங்கி அந்தத் தாம்பாளத்தைச் சித்திரானந்தரிடமிருந்து பரிவோடு வாங்கிக் கொண்டு உள்ளே சென்றார்கள். செண்பக சுந்தரியும் தாமரைச் செல்வியும் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்ததும் அவர்களுக்கு முன்பாக அந்தத் தாம்பாளத்தை வைத்துத் தரையிலே விழுந்து வணங்கி எழுந்தார்கள், மணமக்கள்! அன்னையர் இருவரும் ஆசி நல்கவே, அந்தச் சித்திரானந்தப் பெட்டியை வாங்கி அதைத் திறந்தார்கள் மாலதியும் சிவகாமிநாதனும்.

சித்திரானந்தர் கொடுத்த அந்தப் பெட்டிக்குள்ளே நேர்த்தியான இரண்டு ஓவிய இறகுகள் மெய் சிலிர்த்து நின்று மாலதியையும், சிவகாமி நாதனையும் வாழ்த்தியருளின! அந்த இறகுகளை எடுத்துக் கண்ணிலே ஒற்றிக் கொண்டார்கள் ஓவிய மணமக்கள்!



**மிக்க நன்று—நானும் சிசர்ஸைத்தான் பிடிக்கிறேன்**

ஒம்பது ஆண்டுகளுக்கு மேலாக, நாட்டின் கிராமங்கள் நகரங்கள் எல்லாவற்றிலுமுள்ள வெவ்வேறு வகுப்பைச் சேர்ந்த வெவ்வேறு பருவமுள்ள ஆயிரக்கணக்கான மக்கள் 'சிசர்ஸ்' சிகரெட் பிடித்து புகழ்ந்து கொண்டிருக்கின்றனர். 'சிசர்ஸ்' சிகரெட், மட்டற்ற தேவையிலிருந்தே அதன் உச்ச ரகத்தை ருசுப்படுத்துகிறது. 'சிசர்ஸ்' ஒரு உயர்தரச் சிகரெட்—அதன் சுவை மறக்கமுடியாதது—அதன் மணமோ ஒரு தனி ரகம் ஆனது. குளிர்காலம் ஆனாலும் சரி, கோடைகாலம் ஆனாலும் சரி, மழை காலமானாலும் சரி 'சிசர்ஸ்' எப்பொழுதும் திருப்தி அளிக்கும்.



JWT



# போர்க் கருவிகள்

அமெரிக்க மக்கள் கம்யூனிஸ்ட் சீனாவின் ஆக்கிரமிப்பை முறியடிக்க நமக்கு உதவும் பொருட்டு அனுப்பி வைத்துள்ள ஆயுதங்களில் ஒரு பீரங்கியை அமெரிக்கத் தூதர் கால்பிரெய்த் பார்வையிடுவதையே படத்தில் காண்கிறீர்கள். மொத்தம் ஐந்து மிலியன் டாலர் பெறுமானமுள்ள போர்க் கருவிகளை இந்தியாவுக்கு அறுபது அமெரிக்க விமானங்கள் ஏற்றி வந்தன என்று பிரபல அமெரிக்கப் பத்திரிகையான 'டைம்' கூறுகிறது. நூற்றி ஐம்பது டன் எடையுள்ள ஆயுதங்களை பிரிட்டன் அனுப்பியதாகவும் குறிப்பிடுகிறது. பாரத மக்களாகிய நாம் நன்றியுடன் அவற்றை ஏற்றுக் கொள்ளுகிறோம். என்னென்ன யுத்த தளவாடங்கள் கிடைத்துள்ளன என்னும் விவரங்களெல்லாம் பரம ரகசியமாகக் காப்பாற்றப்படும் என எதிர்பார்க்கலாம். எனினும் நவீனமான போர் உபகரணங்களாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

குண்டுகளைச் சுடுகின்ற எந்தப் போர்க் கருவியும் அது பழங்காலத்ததாயினும் சரி, நவீனமானதாயினும் சரி; பிரம்மாண்டமான பீரங்கியானாலும் சின்னஞ் சிறிய கைத் துப்பாக்கியானாலும் அவை இயங்கும் அடிப்படைத் தத்துவம் ஒன்றேதான். இந்தப் போர்க் கருவிகளில் மொத்தம் நான்கு முக்கிய பாகங்கள் உள்ளன. ஒன்று, முன்புறத்தில் நீண்டிருக்கும் 'பாரல்' எனப்படும் குழாய். இதன் உட்புறத்தில் திருகாணியில் உள்ளது போன்ற வரிவரியான கோடுகள் செதுக்கப்பட்டிருக்கும். இதனால் தோட்டா பாரலைவிட்டு வெளிப்படும்போது 'விர்'ரென்று சுழன்று கொண்டே காற்றை ஊடுருவிச் செல்கின்றது. இந்தப் பம்பரச் சுழற்சி காரணமாகத் தான் தோட்டா குறி பிசகாமல் இலக்கைச் சென்று தாக்குகிறது. அதோடு தோட்டாவின் கூர் முனை முன்புறத்தில் ஒரே நேராக இருக்குமாறு பாய்கிறது. துப்பாக்கிக் குழலில் இந்த வரிக் கோடுகள் இல்லையேல் தோட்டா குட்டிக்கரணம் அடித்துக் கொண்டு தான் செல்லும். அதனால் வேகம் குறையும், பலனும் இராது.

துப்பாக்கிக் குழல், பின்புறத்தில் கொஞ்சம் அகன்று சேம்பர் எனப்படும் ஓர் அறையாக உள்ளது. இந்த அறைக்குள்தான் குண்டு வெடிப்பதற்குத் தயாராக உட்கார்ந்து கொண்டிருக்கும். மூன்றாவது அம்சம் பிரீச் மெகானிஸம். துப்பாக்கி குழலைப் பின்புறத்தில் மூடுவதற்கான ஏற்பாடு இந்தப் பிரீச் மெகானிஸத்தில் முக்கிய பகுதி.

பெரிய பீரங்கிகள் பாட்டில் மூடி போலத் திருகித் திருகி அழுத்தமாய் மூடுகின்ற அடைப்பான்களைக் கொண்டிருக்கும். துப்பாக்கிகளைக் குச்சியை ஒடிப்பது போல் மடித்தால் பிரீச் திறந்து கொள்ளத் தோட்டாக்களைச் செருகலாம். பாரலைப் பற்றிப் பழையபடி நிமிர்த்தினால் பிரீச் மூடப்படுகிறது. இதைத் தவிரவும் துப்பாக்கி வெடிக்கும் போது மேலும் இறுக்கமாக மூடி வைக்க ஒரு தாழ்ப்பாளும் பொருத்தப்பட்டிருக்கும். கடைசி அம்சம் துப்பாக்கியை வெடிக்கச் செய்கின்ற இயக்கம். ஸ்பிரிங் ஒன்றினை இழுத்துக் கொண்டு கத்தி பின்னுக்கு நகருகிறது. டிரிக்கரை விரல் அழுத்தியதும் கத்தியை இழுத்துப் பிடித்திருக்கும் கிளிப் விலகிக் கொள்ள ஸ்பிரிங் சுருங்க, கத்தி முன்னுக்குப் பாய்ந்து பிரீச் அடைப்பானிலுள்ள சிறிய துவாரம் வழியே புகுந்து போய் 'பிரைமர்' வெடிமருந்தைத் தாக்குகிறது. இது சேம்பரில் உள்ள தோட்டாவையும் ஊக்குவிக்கக் குண்டு வெளியிலே பாய்கிறது.

மெல்லிய கம்பி வழியே மின்சாரம் பாய்ச்சி அதனைச் செந்தணலாக உஷ்ணப்படுத்தச் செய்வதன் மூலம் பெரிய பீரங்கிகளின் குண்டுகளை வெடிக்கச் செய்கிறார்கள்.

ஐரோப்பாவில் 1249-ல் வெடிமருந்து கண்டுபிடிக்கப்பட்டது என்று பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட போதிலும் பொல்லாத சீனர்கள் கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே வெடிமருந்து ஆயுதங்களைப் பயன்படுத்தி வந்தார்கள் என்று நம்புவதற்கும் இடமிருக்கிறது!

அன்று முதல் இன்று வரை இத்தகைய கருவிகளில் எவ்வளவோ முன்னேற்றத்தை உலகம் கண்டிருக்கிறது. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் மற்றத் துறைகளில் காணும் முன்னேற்றத்தைப்போல் சிறிய அளவிலிருந்து பெரிதாக இக்கருவிகள் வளர்ச்சியுற வில்லை. பெரிய பெரிய பீரங்கிகளிலிருந்து படிப் படியாகச் சிறுத்துத் துப்பாக்கிகளில் வந்து முடிந்திருக்கின்றன. பயங்கரமான வெடிமருந்தைக் கையில் ஏந்தியபடி போரிடக் கூடிய ஆயுதங்களில் உபயோகப்படுத்துவதாவது என்ற அச்சமும் தயக்கமுமே இத்தகைய கருவிகளைக் கண்டுபிடிப்பதில் ஏற்பட்ட தாமதத்துக்குக் காரணம் எனலாம். அதற்கேற்றுப் போல் சரியானபடி தயாரிக்கப்படாத அன்றையப் பீரங்கிகள் தாறுமாறாக இயங்கி எதிரிக்கு மட்டுமல்லாது அவற்றை வெடிக்கச் செய்தவனுக்கே பல இன்னல்களை விளைவித்தன.

அக்காலத்தில் இப்போதுள்ளது போல், கச்சிதமாகத் தயாரிக்கப்பட்ட தோட்டாக்கள் கிடையாது. ஒரு குழாயில் வெடிமருந்தை

நிரப்பிக் கொண்டு செல்வார்கள். உள்ளங் கையில் தோராயமாக எடை பார்த்துத் துப் பாக்கியின் முன்புறத் துவாரம் வழியாகத் திணிப்பார்கள். இன்று தயாரிக்கப்படும் தோட்டாவில் பித்தளை உருளை ஒன்றில் சரியான எடைக்கு வெடிமருந்தும் அதன் மேல் சரியான அளவினதாயும் இரும்பு அல்லது ஈயத்தினாலானதுமான குண்டும் வைக்கப்படுகிறது. பித்தளை உருளை குண்டைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிற மாதிரியாக மேல் புறத்தில் நசுக்கப்படுகிறது. கீழ்ப்புறத்திலிருந்து மூடி போடப்படுகிறது.




இன்றையதினம் சாதாரணமாகச் சிப்பாய்கள் கையில் ஏந்திப் போர் முனைக்கு எடுத்துச் செல்லும் ரைபிள் வெட்டவெளிப் பிரதேசத்தில் ஒரு மைல் தொலைவில் வருகிற எதிரியைக் கூடக் குறி பார்த்துச் சுடுவதற்கு மிகவும் ஏற்றவை. ஆனால் குழி பறித்துப் பதுங்கிப் போராடுகையிலும் அடர்ந்த வனங்களில் ஒளிந்து மறைந்து யுத்தம் நடத்துகையிலும் இவற்றினால் மிகக் குறைந்த பலனையே பெற முடியும். கானகங்களில் எதிரியைச் சந்திக்கையில் வீரர்கள் துப்பாக்கி முனையில் கூரிய கத்தியைப் பொருத்திக் கொள்வார்கள். இது மிகமிகப் பயனுள்ளதாயிருந்ததை இரண்டாம் உலக மகாயுத்தத்தில் கண்டார்கள். பேயோன் என்ற ஊரிலிருந்து வந்த ஒருவர் முதன் முதலாக இவ்வாறு ஒரு துப்பாக்கியையும் கத்தியையும் இணைத்துப் பார்த்தார் 1647ல். அதனாலேயே இக்கத்திகள் பேயோனெட் எனப் பெயர் பெற்றன.

இதே போலத்தான் மாதுளங் கனியைப் போல் தோற்றமளிக்கிறதென்பதற்காகக் கைக் குண்டிற்கு கிரனேட் என்ற பெயர் வந்தது. ஸ்பெயின் மொழியில் அக்கனிக்கு உள்ள பெயர் அது. கைக் குண்டினால் சிப்பாய்க்கு ரொம்பப் பிரயோஜனம் உண்டு. கிரிக்கெட் பந்து வீசுவது போல் தோளுக்கு மேலாக இதனை உயர்த்தி வீசுவார்கள். இரும்பினாலான இதன் கவர் குண்டு வெடிக்கும் போது தூள் தூளாகும். குழி பறித்துப் பதுங்கியுள்ள விரோதிகள் மீதும் மேட்டுப் பாங்கான இடத்துக்குப் பின்புறத்தில் மறைந்திருக்கும் எதிரிக் கூட்டங்கள் மீதும் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய இயலாது. அத்தருணங்களில் கைக் குண்டுகள் பிரயோஜனப்படும்.

சென்ற நூற்றாண்டில் பீரங்கிகளை இயக்கி விட்டு அதனைச் சுற்றிலும் இருப்பவர்கள் அப்பால் ஒதுங்குவார்கள். ஏனெனில் குண்டு முன்னால் பாயும்போது பீரங்கி பின்னுக்கு வேகமாய் நகரும். அங்கு இருக்கக் கூடியவர்களுக்கு அடிபடும். குண்டு எதிரி மீது பாய்ந்த பிறகு மறுபடியும் அனைவரும் பீரங்கியை நெருங்குவார்கள். உடனடியாக அப்படி வந்து விடவும் முடியாது. ஏராளமாய்க் கிளம்பும் புகை அடங்கிய பின்னர்தான் மீண்டும் பீரங்கியைப் பழைய நிலைக்குத் தள்ளி, பிறகு முன்போலவே சுடுவதற்கான ஆயத்தங்களைச் செய்வார்கள். இதனால் மிகுந்த காலதாமதமாயிற்று. நாளடைவில் பீரங்கியின் இந்தப் பின்வாங்கு படலத்தை ஸ்பிரிங்குகளினாலும் மற்றும் பல உபாயங்களினாலும் நிறுத்தினார்கள். அதோடு புகையைக் கக்காத வெடிமருந்தும் கண்டுபிடிக்கப்பட்டது.

பீரங்கிகளை முக்கியமாக மூன்று வகையாகப் பிரிக்கலாம். **ஆர்ட்டிலரி கன்:** முன்புறத்தில் நீளமானதும் அகலக் குறைவானதுமான பாரல் அல்லது குழலைக் கொண்டிருக்கும். **ஹொவிட்ஸர்:** நீளக் குறைவானதும் சற்று அகலமானதுமான குழலைக் கொண்டது. மலைப் பிராந்திய யுத்தங்களுக்கு மிகவும் ஏற்றது இது. **மார்டர்:** கட்டையாயும் குட்டையாயும் அகன்ற வாயுடன் கூடியது. முந்தையது பின்னிரண்டினையும் காட்டிலும் அதிக தூரத்தில் உள்ள இலக்குகளைத் தாக்கும் திறம் படைத்தது.

பஸூகா எனப்படும் ராக்கெட் பீரங்கிகள் அத்தகைய உருவம் கொண்ட ஒரு வாத்தியத்தை ஒத்திருந்ததால் அப்பெயர் பெற்றன. இரண்டாக மடித்து இதனை இலகுவாகத் தோளில் சுமந்து செல்லலாம். இதன் உதவியுடன் தனி ஒருவனால் ஒரு டாங்கை சர்வநாசமாக்க முடியும். செங்கல், இரும்புச் சுவர்களை இது தவிடு பொடியாக்கும். இருநூறு கெஜ தூரம் வரையில் இதன் ராக்கெட் குண்டு பாயும்.

ஆரம்பத்தில் தயாரான இயந்திரத் துப்பாக்கிகளைத் தூக்கிப் போக மூன்று ஆட்கள் தேவைப்பட்டனர். வேகமாக இயங்கியபோது உண்டான அபரிமிதமான உஷ்ணத்தைக் குறைக்க அதன் குழலைச் சுற்றி வெளிப்புறத்தில் குளிர்ந்த தண்ணீர் நிரப்பிவைக்க வசதி வேண்டியிருந்தது! போகப் போக இந்தச் சங்கடங்களையெல்லாம் வெற்றி கண்டனர். காற்றினால் குளிர்விக்கப்பட்டதும், மிக இலேசானதுமான மிஷின் கன்கள் உற்பத்தியாகின.

இதைத் தவிர தானாகவே இயங்கும் ரைபிள்களும் தயாராகின. 'மிஷின் கன்'களைவிட இது ஒரு விதத்தில் சிறந்தது. எப்படியெனில் இதில் பயன்படுத்தப்படும் தோட்டா அதிக தூரம் குறி தவறாமல் பாயக் கூடியது. ஆட்டோமாடிக் ரைபிளில் வெடிமருந்து வெடிக்கும் போது ஏற்படும் சக்தியில் ஒரு பகுதி குண்டை வெளியேற்றவும் மறு பகுதி அந்தத் துப்பாக்கியைத் தன்னால் இயங்கச் செய்யவும் பயன்படுகிறது. துப்பாக்கியின் பிரீச் பகுதியைத் திறக்கச் செய்து உபயோகப்படுத்தப்பட்ட பழைய தோட்டாக்களை வெளியே கக்க வைக்கிறது; புதிய தோட்டாக்களை உள்ளே செருகுகிறது. பிரீச்சை மீண்டும் மூடுகிறது. சிப்பாய்க்குக் குறி பார்த்து டிரிகரை விரலால் அழுத்திக் கொண்டிருப்பது மட்டுமேதான் வேலை. மூன்று வினாடியில் இருபது குண்டுகளைக் கக்கும் இது போன்ற நவீன துப்பாக்கிகளின் துணையைக் கொண்டு சீனர்களை வெற்றி காண்பது கடினமாகவா இருக்கப் போகிறது?

எழிலின் எல்லையை எட்ட...

# "'ஹேஸலின்' ஸ்னோ"

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்றது "'ஹேஸலின்' ஸ்னோ." மென்மையான, எண்ணெய்ப் பசையற்ற இவ்வழகுப் பொருள் சருமத்துக்கு மழமழப்பையும் வனப்பையும் ஊட்டுகிறது. பவுடர் படிவதற்கெனவோ அல்லது தனிப்பட்ட முறையிலோ உபயோகித்து உங்கள் சருமத்துக்குப் பொலிவுடன் கூடிய பாதுகாப்பை அளியுங்கள். "'ஹேஸலின்' ஸ்னோ" அரம்பையர் குலத்தின் பாரம்பரை அழகுசாதனம்.




பர்ரோஸ் வெல்கம்
தயாரிப்பு



BWY-11-TAM



**தொண்டை**
**மற்றும் மார்பு**
**உபாதைகளுக்குக்**
**குணமளிக்கும்**

# பெப்ஸ் வில்லைகளை

**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்**

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும். தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.



PPY.54-TAM

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.
எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

**ஜி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.**

சோல் ஏஜண்டுகள் நாகா அண்டு கம்பெனி
86, நைனியப்ப நாயக்கன் தெரு, சென்னை - 3

---

## அனைத்திலும் சிறந்தது



**VICCO**

***Vajradanti***

## விக்கோ வஜ்ரடந்தி

முதன் முதலாக ஆயுர்வேத
முறைப்படித் தயாரித்த

## பற்பசையும் பௌடரும்

பதினெட்டு வகை மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்பட்டவை. ஈறுகளைக் கெட்டிப் படுத்தி பற்களை உறுதியுடன் இருக்கச் செய்கின்றன. ஒருமுறை உபயோகித்து திருப்தி அடையுங்கள்



**விக்கோ லாபரட்டரீஸ்**
பம்பாய் - 14

சென்னைக்கு ஸ்டாக்கிஸ்டுகள்:
**M/s. ஆர். எச். கவுடர் & கம்பெனி**
59, பந்தர் தெரு, சென்னை-1

# பண்டரிபுரத்துப் பாண்டுரங்கன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

'தந்தை தாய்ப் பேண்' என்று மக்களுக்கு அறிவுறுத்தினார்கள் பெரியவர்கள். ஆனால் அப்படிப் பேணுவார்களோ மாட்டார்களோ என்று சந்தேகம் இருந்தது அவர்களுக்கு. அதனால் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று தெய்வமாகவே பெற்றோரை உயர்த்தியும் கூறினார்கள். இப்படியெல்லாம் சொல்லியிருந்தும் மக்களில் பெரும்பாலோர் தாய் தந்தையரை மதிக்கிறதில்லை. அதிலும் ஆடவரெல்லாம் தத்தம் மனைவியருக்கு அடங்கியவராய்த் தந்தை தாயரைப் பேணுவதையே நிறுத்திவிடுகிறார்கள். ஆனால் தந்தையையும் தாயையும் தெய்வமென்று மதிப்பவர்களைத் தெய்வமுமே மதிக்கும், அவர் சொற்படி கேட்கும் என்பதை விளக்க ஒரு கதை மராத்திய நாட்டில் வழங்கி வருகிறது.

ஜானு தேவர் என்று ஒரு மராத்திப் பிராமணர். அவருக்குச் சத்தியா தேவி என்று மனைவி. இருவரும் சிறந்த விஷ்ணு பக்தர்கள். இருவரும் தவமிருந்து பெறுகின்றனர் ஒரு மகனை. புண்டரீகன் என்று அவனுக்குப் பெயரிடுகின்றனர். அவனை வளர்த்து வாலிபமாக்கினர். தக்கதொரு பெண்ணையும் அவனுக்கு மணம் முடித்து வைக்கின்றனர். அவ்வளவுதான்; மனைவி கீறிய கோட்டைத் தாண்டாதவனாகப் புண்டரீகன் வாழ்கிறான். தாய் தந்தையரை உதாசீனம் செய்கிறான். அதனால் மனம் உடைந்து பெற்றோர் இருவரும் காசி யாத்திரை புறப்படுகிறார்கள். புண்டரீகனும் மனைவியும் உடன் சென்று வழியிலும் பெற்றோரைத் துன்புறுத்துகின்றனர். காசி சென்று அங்குள்ள குக்குட முனிவர் ஆசிரமத்தில் தங்குகிறார்கள். அக் குக்குட முனிவரின் ஆசிரமத்துக்கு ஒவ்வொரு நாளும் அதிகாலையில் மூன்று பெண்கள் வந்து திரும்புகின்றனர். அழுக்கான உடையுடன் வரும் அவர்கள் முனிவருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து விட்டுத் திரும்பும் போது புனிதமான உடையோடும், காந்தி பொருந்திய முகத்துடனும் திரும்புகின்றனர். இதைப் பார்க்கிறான் புண்டரீகன். பெண்களை நெருங்கி அவர்கள் யாரென விசாரிக்கிறான். விசாரித்ததில் அவர்களே கங்கை, யமுனை, சரஸ்வதி என்றும், பலரும் தங்களிடம் மூழ்கிப் பாபச் சுமையைக் கழிப்பதால் தாங்கள் அழுக்கடைவதாகவும். அந்த மாசுகளெல்லாம் குக்குட முனிவருக்குப் பணிவிடை செய்வதால் அகல்கிறது என்றும் தெரிவிக்கிறார்கள். குக்குட முனிவரிடம் எப்படி அவ்வளவு புனிதத் தன்மை இருக்கிறது என்று விசாரித்ததில் அவர் தம் பெற்றோருக்கு உரிய கைங்கரியத்தை ஒழுங்காகச் செய்வதால் பெரிய பேறு உடையவர் என்று தெரிகிறது. அன்றைய தினத்திலிருந்து புண்டரீகனும் அவன் மனைவியுமே தந்தை தாயரைப் பணிந்து அவர்களுக்கு வேண்டும் பணிவிடைகளைச் செய்வதில் முனைகிறார்கள். திரும்பித் தங்கள் ஊர் வந்து வாழ்வில் ஒரு புதிய அத்தியாயத்தை ஆரம்பிக்கிறார்கள்.

இதே சமயத்தில் துவாரகையில் இருந்த பரந்தாமனுக்கும் ருக்மிணிக்கும் ஒரு பிணக்கு ஏற்படுகிறது. ருக்மிணி தன் கணவனைப் பிரிந்து புண்டரீகன் வசிக்கும் பகுதிக்கு வந்து தவம் புரிகிறாள். அவளைத் தேடிக் கொண்டு வைகுண்டபதியும் அங்கு வருகிறார். இருவரும் இணைந்து புண்டரீகன் இருந்த குடிலுக்கு வருகிறார்கள். வந்து தாங்கள் இன்னார் என்று அவனிடம் அறிமுகப்படுத்திக் கொள்கிறார்கள். அவனோ தாய்தந்தையருக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கிறான். ஆதலால் ஒரு செங்கல்லை எடுத்துப் போட்டு "இதில் கொஞ்சம் நின்று கொண்டிரும். நான் என் பெற்றோருக்குச் செய்யும் பணிவிடைகளையெல்லாம் முடித்து விட்டு வருகிறேன்" என்று சொல்லி விடுகிறான். அந்தப் பக்தன் சொற்படியே பரந்தாமனும் அந்தச் செங்கல்லின் மேலேயே நின்று கொண்டிருக்கிறான். தாய் தந்தையருக்குச் செய்யும் பணிவிடைகளையெல்லாம் முடித்து விட்டுப் புண்டரீகன் வந்து பரந்தாமனை வணங்கி உபசரணை செய்கிறான். பின்னர் அவன் விரும்பிய படி அவன் எடுத்துப் போட்ட செங்கல்லின் மேலேயே நின்று இன்றும் சேவை சாதித்துக் கொண்டிருக்கிறான். அவனே விட்டோபா. மராத்தியில் 'விட்' என்றால் செங்கல். 'உபா' என்றால் நிற்றல் என்று பொருளாம். இந்த விட்டோபாவையே புண்டரீக வரதன் என்கிறார்கள். புண்டரீகன் இருந்த ஊர் தான் பண்டரிபுரம். அங்கு கோயில் கொண்டிருப்பவன்தான் பாண்டுரங்கன். அந்தப் பாண்டுரங்க விட்டலனைக் காண நாம் இன்று பண்டரிபுரம் செல்கிறோம். பம்பாய் செல்லும் மார்க்கத்தில் குருது

விட்டலர் கோயில்





புண்டரீகவரதன் கோயிலும் பிறவும்

வாடி ஜங்ஷனில் இறங்க வேண்டும். அங்கிருந்து கிராஜ் செல்லும் வண்டியில் ஏற வேண்டும். அப்படிச் சென்றால் பண்டரிபுரம் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். காரிலே செல்வதானால் பீஜப்பூரிலிருந்து ஷோலாப்பூர் போய், அங்கிருந்து பூனா செல்லும் பாதையில் முப்பது மைல் போனால் தெற்கு நோக்கி ஒரு பாதை பிரியும். அந்தப் பாதை நல்ல சிமெண்ட் ரோடாகவும் இருக்கும். அந்த ரோட்டில் இருபத்திரண்டு மைல் சென்றாலும் பண்டரிபுரம் சென்று சேரலாம். பண்டரிபுரம் செல்லுமுன் ஒரு நதியைக் கடக்க வேண்டும். அந்த நதியைப் பீமா நதி என்கின்றனர். இந்த நதி பண்டரிபுரத்தைச் சுற்றிக் கொண்டு அர்த்த சந்திர வடிவில் போவதால் இதனைச் சந்திரபாகா நதி என்றும் அழைக்கின்றனர்.

நதிக் கரையில் நிற்கும்போதே கோயிலின் சிகரங்கள் தெரியும். அதைக் குறியாக வைத்துக் கொண்டே தெருக்களில் வளைந்து வளைந்து சென்றால் கோயில் வாசல் போய்ச் சேரலாம். கோயிலை அடுத்த தெருக்கள் எல்லாம் குறுகிய தெருக்கள். பல கடைகள் இருக்கும். அதில் பலகாரக் கடைகளே அதிகம். ஆம்! பாண்டுரங்க விட்டலின் ஆராதனைக்கு நம் தமிழ் நாட்டைப் போல் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு வேண்டாம். கொஞ்சம் மிட்டாய் மாத்திரம் வாங்கி எடுத்துப் போய் ஆராதனை செய்து பிரசாதமாகக் கொண்டு வரலாம். பாண்டுரங்கன் கோயில் பெரிய கோயில். கிழ மேல் 300 அடி நீளமும் தென் வடல் 170 அடி அகலமும் உள்ளது. இக் கோயிலுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் மூன்று மூன்று வாயில்கள். வடக்கும் தெற்கும் ஒவ்வொரு வாயில்தான். இப்படி எட்டு வாயில்கள் இருந்தாலும் கிழ்ப்புறமுள்ள பிரதான வாயில் வழியாகவே உள்ளே நுழைய வேண்டும். அதை நாமதேவர் வாயில் என்பர். நாமதேவ் என்னும் மராட்டிய பக்தர் பாண்டுரங்கனிடம் யாசித்த பேறு இதுதான். 'எப்போதும் உமது திருவடியிலேயே இருக்க வேண்டும். உம்மைத் தரிசிக்க வரும் பக்தர்களது பாத தூளி என் சிரமேல் படியவேண்டும்' என்று வேண்டிக் கொண்டாராம். அதன்படியே அவர் அமரரான பின் அவரை இந்த வாயிலிலேயே அடக்கம் செய்திருக்கிறார்கள் என்கின்றனர். இந்த வரலாற்றைக் கேட்டதும் நமக்குக் குலசேகராழ்வார் வேங்கடவனிடம் செய்து கொண்ட பிரார்த்தனைதான் ஞாபகத்துக்கு வரும்.

செடியாய வல்வினைகள்
தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா!
நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும்
அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன்
பவள வாய் காண்பேனே.

என்றுதானே அவர் பெரிய திருமொழியில் பாடியிருக்கிறார்? ஆனால் நாமதேவரின் விருப்பம் பரிபூரணமாக நிறைவேறி விட்டதென்று சொல்ல முடியாது. இன்றைய பண்டாக்கள் நாமதேவர் தலையை மட்டும் சிலையாகச் செய்து அதற்குச் செப்புக் கவசம் அணிந்து வாயிலில் வைத்து அத்தலையினைக் காட்டி தட்சிணை கேட்கின்றனர். செல்லும் பக்தர்களோ நாமதேவரை நினைந்து அந்தப் படியை மிதியாமலே அடுத்த படியில் எட்டிக் காலடி வைத்துக் கோயிலினுள் சென்று விடுகின்றனர். இந்தப் படிகளைக் கடந்து சென்றால் ஒரு சிறு மண்டபம். அதனை முக்தி மண்டபம் என்கின்றனர். அதனை அடுத்தே 120 அடி நீளமும் 60 அடி அகலமும் உள்ள கூடம். அதற்கும் அப்பால் மரத்தால் கட்டப்பட்ட சபா மண்டபம். அதில் கருடாழ்வார், ஆஞ்சநேயர் கோயில்களிருக்கின்றன. இங்கே ராம பக்தியின் சிறந்தவரான சமர்த்த ராமதாஸரை பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். பெரிய அனுமார் விக்கிரகம் ஒன்றும் இருக்கிறது.

இம் மண்டபத்திலிருந்து கோயிலினுள் செல்ல மூன்று வாயில்கள். நடு வாயிலின் துவாரபாலகர்கள் இருவர். அவர்களை அடுத்து விநாயகரும் சரஸ்வதியும் தரிசனம் கொடுப்பார்கள். இந்த வாயில் கடந்தால் உள்ளே உள்ளது பதினாறு கால் மண்டபம். அந்த மண்டபத்தில் ஒரு தூணையே வெள்ளித் தகட்டில் பொதிந்து வைத்திருக்கிறார்கள். அதிலுள்ள புண்டரீக வரதனைப் பக்தர்கள் ஆலிங்கனம் செய்து அருள் பெறலாம். இதற்கடுத்து ஒரு சிறு மண்டபம். அதையும் கடந்து கருவறை செல்ல வேண்டும். அதில் நுழைய அமைந்திருக்கும் வாயில் மூன்றடி உயரமே. ஆதலால் நன்றாகத் தலைவணங்கி உள்ளே செல்ல வேண்டும். கருவறை எட்டுச் சதுர அடி விஸ்தீரணமே உடைய சிறு அறை. அதில் மேல் கோடியின் வெள்ளியால் செய்யப்பட்ட செங்கல்லின் பேரில் ஏறி நின்று கொண்டிருக்கிறார் விட்டலர். மூர்த்தி நல்ல கருங்கல் வடிவினர். இடுப்பில் இரண்டு கைகளையும் வைத்து மிடுக்காகவே நிற்பார். கொஞ்சம் கூர்ந்து கவனித்தால் இந்த விட்டலர் சிரசின் மீது சிறிய லிங்கம் ஒன்று இருக்கக் காண்போம். நாம் முன்னமேயே நரஹரி சோனார் என்ற தங்க வேலைப் பக்தர் கதையைத் தெரிந்திருக்கிறோம். சிவனைத் தவிர வேறு தெய்வத்தைக் காணவும் மாட்டேன் என்றிருந்த அந்தப் பக்தரைக் கொண்டே விட்டலருக்கு ஒரு தங்க அரைஞாண் செய்ய விரும்புகிறார் ஒரு பக்தர். கண்ணைக் கட்டிக் கொண்டே வந்து விட்டலரது இடையை அளவெடுக்க வந்த நரஹரி சோனார் தடவிப் பார்க்கும் போது அவரது கைகளுக்குச் சிவபெருமானே தட்டுப்பட்டிருக்கிறார். கண்கட்டை அவிழ்த்துப் பார்த்த போதுதான் அங்கு நிற்பவன் விட்டலனாக நின்றிருக்கிறான். தான் வேறு சிவன் வேறு அல்லவென்று அவனுக்கு

மாத்திரம் அல்ல உலகத்தினருக்கே காட்டத் தான் சிவலிங்கத்தை விட்டலர் தலை மீது வைத்துக் காட்டினார் என்கிறார்கள். இந்த விட்டலர் திருவடிகளில் நம் தலையை வைத்தே வணங்கலாம். வணங்கும்போது,

அண்டர்களும் முனிவர்களும்
அடியார் தாமும், அரன் அயனும்
யோகிகளும் அகிலம் தன்னில்

எண்டிசையுள் எதியர்களும்
இறைஞ்சி ஏத்தும் எம்பெருமான்
நின்னடிக்கு ஏழையான் உன்

தொண்டர்கள் தம் திருவடிக்குத்
தொண்டு செய்யத் தாயனே
கருணை வைத்து அருளும் இந்தப்

பண்டரியில் பக்தர்கட்காய்
வந்தமர்ந்த பாண்டுரங்கா
நின்பதத்திற்கு அபயம்தானே.

என்றும் பாண்டுரங்கனைத் துதிக்கலாம்.

பாண்டுரங்கனைத் தரிசித்தபின் திரும்ப வும் பதினறு கால் மண்டபத்துக்கு வந்து தெற்குப் பிராகாரம் சென்றால் அங்கு ஒரு பெரிய மரம் இருக்கிறது. அதைத் தாட்டி மரம் என்கின்றனர். அந்த மரத்தைப் பற்றி ஒரு கதையும் இருக்கிறது. பண்டரிபுரத் துக்குப் பக்கத்தில் மங்கல் பேடே என்னும் ஒரு சிறிய ஊர். அங்கே கானுபத்ரா என்று ஒரு பெண். நல்ல அழகு வாய்ந்தவள். அவள் பாண்டுரங்கனிடம் அத்யந்த பக்தி உடையவள். அந்த வட்டாரத்தை அன்று வந்த மகம்மதிய அரசன் ஒருவன் அவள் அழகைக் கண்டு மோகிக்கிறான். தன் சேவ கர்களை அனுப்பி அவளை அழைத்து வரச் சொல்கிறான். அவன் ஆணைக்குப் பயந்தா லும் கானுபத்ரா பாண்டுரங்கனைத் தரி சித்து விட்டு வந்து விடுவதாகச் சொல் கிறாள். அப்படியே பாண்டுரங்கன் சந்நிதி வந்து தன்னைக் காப்பாற்ற வேண்டிக் கொள் கிறாள்; சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாம் ஆண்டாளைப் போல. பாண்டுரங்கனும் அவளது காதலை ஏற்றுத் தன்னுள் ஐக்கியப் படுத்திக் கொள்கிறான். அவள் பூத உடல் மறைந்த இடத்திலேதான் இந்த மரம் தோன்றி வளர்ந்திருக்கிறது. அந்தப் பக்கத்து வாயிலையும் கானுபத்ரா வாயில் என்றே அழைக்கின்றனர் இன்றும். இந்தத் தாட்டி மரத்துக்குப் பக்கத்திலேயே வேங்கடாசலபதி யின் சந்நிதி ஒன்றும் இருக்கிறது. இந்தச் சந்நிதிக்குச் சற்று மேற்கே மகாலட்சுமி கோயிலும் அதற்குப் பின்புறத்தில் ராமேச வரர் சந்நிதியும் இருக்கின்றன.

பாண்டுரங்கன் கோயிலின் வடக்குப் பிரா காரத்தில் ருக்மிணிக்கென்று ஒரு தனிக் கோயில் இருக்கிறது. இதனை அடுத்தே சத்ய பாமைக்கும் ஒரு சந்நிதி. சத்தியபாமையை ராஹி அம்மை என்று அழைக்கின்றனர் மராத் திய மக்கள். இந்த ருக்மிணி கோயிலுக்கு எதிரிலேதான் சுவர்ண பிம்பன் என்ற பெய ரோடு ஒரு பெரிய அரச மரம் இருக்கிறது. இதனையொட்டிய பிராகாரத்தில் ஆறு அறை கள். ஒவ்வொன்றிலும் ஒரு மூர்த்தி. காசி விசுவநாதர், ராம லட்சுமணர், கால பைர வர் முதலியோர் இருக்கின்றனர். இந்தச் சந்நிதிக்கு எதிரில் உள்ள சுவரில் சௌர்யா அய்ஸ்ஸி என்னும் தேவியின் சிலை ஒன்றிருக் கிறது. சௌர்யா அய்ஸ்ஸி என்றால் மராத்தி பாஷையில் எண்பத்துநான்கு என்று அர்த்த மாம். அந்தச் சிலையின் பேரில் மராத்திய மக்கள் தங்கள் முதுகைத் தேய்க்கின்றனர். அப்படித் தேய்ப்பவர்கள் எண்பத்து நான்கு ஆயிரம் ஜன்மங்களில் முக்தி அடைகின்றன ராம். ஆனால் ஒன்று. நாம்தான் இந்தப் பிறவியிலேயே முக்தி பெற விழைகிறவர்கள் ஆயிற்றே. எண்பத்து நாலாயிரம் பிறவி எடுத்து முடிவதற்குள் முக்தி பெறுவதிலேயே வெறுப்புத் தோன்றி விடுமே. ஆதலால் முதுகைத் தேய்க்காமலே திரும்பி விடலாம்.

இப்படிக் கோயில் முழுவதையும் சுற்றிய பின் திரும்பவும் பதினறு கால் மண்டபம் வந்து அங்கு வைத்திருக்கும் பாண்டுரங்க வின் பாதுகைகளையும் தரிசித்து விட்டு வெளியே வரலாம். இந்தப் பண்டரிபுரத் தில் இந்தப் பாண்டுரங்கன் கோயிலைத் தவிர இன்னும் பல கோயில்கள் உண்டு. அவை களில் மூன்று முக்கியமானவை. அதில் ஒன்று மல்லிகார்ச்சுனன் கோயில். இது பாண்டு ரங்கன் கோயிலுக்கு மேற்கே சிறிது தூரத் தில் இருக்கிறது. சிவபெருமான்தான் லிங்க வடிவினராக மல்லிகார்ச்சுனர் என்ற திரு நாமத்தோடு எழுந்தருளி யிருக்கிறார். பாண்டு ரங்க பக்தரான நாம தேவர், இவர் கோயில் வாயிலில் வந்து பாண்டுரங்க பஜனை செய் திருக்கிறார். இக் கோயிலை நிர்வகித்த சிவாச் சாரியார்கள் நாமதேவரை விரட்டி யிருக் கின்றனர். அவர் மேல் புறம் சென்று பஜனை யைத் தொடங்கி யிருக்கிறார். நாமதேவரின் பாடலைக் கேட்க விரும்பிய மல்லிகார்ச் சுனர் மேற்கேயே திரும்பி யிருக்கிறார். ஆதலால் கோயிலே மேற்கு நோக்கிய சந்நிதியோடு இருக்கிறது.

பாண்டுரங்கன் விட்டலனுக எழுந்தருளு வதற்குக் காரணமா யிருந்த புண்டரீகருக்கும் ஒரு கோயில் இருக்கிறது. இது பாண்டுரங்கன் சந்நிதிக்கு நேராகச் சந்திரபாகா நதியின் மத்தியில் கட்டப்பட்டிருக்கிறது. ஆற்றில், வெள்ளம் வரும் போது தோணியில் சென்றே பூஜை செய்து வருவார்கள் அர்ச்சகர்கள்.

பண்டரிபுரத்துக்குத் தெற்கே சந்திரபாகா நதியின் மேல் கரையில் கோபால்பூர் என்னும் சிறிய ஊர் இருக்கிறது. இங்கு கோபாலகிருஷ் ணன் கோயில் ஒன்று பெரிய மாடக் கோயி லாக இருக்கிறது. பல படிகள் ஏறிச் சென்று தான் வேணுகோபாலனுக நிற்கும் கோபால கிருஷ்ணனைக் கண்டு வணங்க வேண்டும். அன்று துவாரகையிலிருந்து புறப்பட்டு வந்த ருக்மிணி தங்குவதற்குத் தேடி எடுத்த இடம் இதுதான் என்றும் இங்கே யசோதை, நந்தகோபன் முதலிய எல்லோருமே வந்து சேர்ந்து விட்டார்கள் என்றும் கதை சொல்லு றார்கள். பாண்டுரங்கனிடத்துப் பக்திகொண் டிருந்தவர்களில் சக்குபாய் என்பவள் ஒருத்தி. அவளை மாமன், மாமியார் மிகவும் துன் புறுத்தி யிருக்கின்றனர். அவள் பண்டரிபுரம் சென்று வரும்வரை பாண்டுரங்கனே சக்கு பாயின் வடிவம் தாங்கி, மாமன், மாமியார் இடும் கட்டளைகளைச் செய்திருக்கிறான். பக்தையின் துயரம் துடைக்க விரைந்த பாண்டு ரங்கனின் பெருமையை என்னென்பது?



# மனித உள்ளம்

ர. வேங்கடரத்தினம்

'போர்ட்டிகோ'வில் வண்டி நின்று கொண்டிருந்தது. அதன் உள்ளிருந்து டிரைவரின் குரல் வந்தது. "அப்ப, நான் வண்டியை 'ஷெட்டு'க்கு எடுத்துக்கிட்டுப் போகட்டுங்களா...?"

செட்டியார் கூடத்தில் இருந்த வண்ணம் 'சரிம்' என்று கட்டளை கொடுத்தார்.

வண்டி நகர்ந்தது.

கடையில் இன்று சரியான கூட்டம். அந்தண்டை இந்தண்டை அரை நிமிஷம்கூட நகர முடிய வில்லே. உட்கார்ந்து உட்கார்ந்து கால்கள்கூட மரத்து விட்டன. வீட்டுக்கு வந்து கால்களை நீட்டிக் கொண்டு, சாய்வு நாற்காலியில் சாய்ந்தபின்தான் முதுகுப் பிடிப் புக்கூடச் சற்று விட்டது.

'காம்பவுண்டு'க் கதவு திறக்கும் ஓசை கேட்கவே, செட்டியார் தலை யைத் தூக்கி நிமிர்ந்து பார்த்தார்.

"கந்தப்பா! வாசல்லே யார், பார்!" என்று அவர் கூறத் தோட் டக்காரன் ஓடினான்.

"இந்த நேரத்திலே தோட்ட வேலே என்னய்யா? வாசல்லே 'கேட்'டிலே இருக்கக் கூடாது?" என்று அதட்டினார் செட்டியார்.

"இல்லீங்க. சின்னம்மா கூட இருந்திச்சு. அவுங்க ஒண்டியா இருக்காங்களேன்னு சொல்லிப்புட்டுத்தான், நானும் போனேன். இல்லாட்டி 'கேட்'டிலே இருப்பேனுங்க."

கந்தப்பன் வந்தவருக்குத் தடங்கல் சொல்லிக் கொண்டிருந்தது முழுதும் செட்டி யார் காதில் விழுந்தது. அவனும் விடவில்லே; அவரும் விடவில்லே.

மாறி மாறி இதே பேச்சு நடந்தது.

"கொஞ்சம் விட்டுடப்பா. ரெண்டே நிமிஷம், செட்டியாரைப் பார்த்துட்டு வந் துடறேன். உனக்கு ரொம்பப் புண்ணியம் உண்டு...."

"இந்த மாதிரி யார் யாரோ வராங்க. போறவங்களை உள்ளாற விட்டுக்கிட்டிருந் தால், எனக்கு வேலே போயிடும், ஐயா!"

இவ்வளவுதூரம் வந்து வாதாடிக் கொண்டு நின்ற விடாக்கண்டரை உள்ளேயே கூப் பிட்டுப் பேசி விடலாம் என்று செட்டியாருக் குத் தோன்றியது.

"கந்தப்பா!" என்று அதிகாரத் தோரணை யுடன் அழைத்தார்.

"வந்துட்டேனுங்க."

"நீ வரவேண்டாம். அவரை வரச் சொல்லு, பார்க்கலாம்."

கந்தப்பன் கதவைத் திறந்து அவருக்கு வழி விட்டான்.

"உனக்குப் புண்ணியம் உண்டப்பா!" என்ற ஆசியுடன், வந்தவர் நடந்தார்.

செட்டியார் அவர் வருவதை ஏற இறங்கப் பார்த்தார்.

களைத்துப் போன உடல்; அந்த மாலே நேரத்திலும் மங்கி மறையாத பன்னிரு நாமங்கள் பட்டை பட்டையாக மஞ்சளும் வெள்ளையுமாக 'ரேடியம்' பூசினற் போலக் கண்களை மறைத்தன. உச்சிக் குடுமி. பஞ்சகச்சம் — பஞ்சக் கோலம்! அரையில் அசல் காஞ்சீபுரத்து மோஸ்தரில் வைவக் கைத்தறி வேட்டி! காது மடலில் இரு துளசிப் பத்திரம்; காதில் கடுக்கன் இருந்த இடத்தில் தொளை மட்டும்; கண்களில் ஓர் ஏக்கம்.

மெதுவாக அடிமேல் அடிவைத்து நடந்து வந்த அவரை உற்று நோக்கிய செட்டியா ருக்கு எவ்வித உணர்வும் தோன்றவில்லே; காரணம், வந்தவர் கையில் இருந்த அந்தக் காகிதச் சுருள்தான். இது மாதிரியான யாசகர்கள் எவ்வளவோ பேர்களைப் பார்த் துப் பார்த்து, அவருக்குப் புளித்துக் கசந்து கூடப் போய் விட்டது.

வந்தவர் செட்டியார் எதிரே வந்து நின்று கொண்டு கத்தமாக ஒரு கும்பிடு போட் டார். பதிலுக்குப் புன்னகை வழங்கினர் பழக்கப்பட்டவர்.

இரண்டு நிமிஷங்கள் ஆயின.

பேச்சு மூச்சு இல்லே.

செட்டியாரே தொடங்கினர்: "எங்கே வந்தீங்க?"

"ஒண்ணுமில்லே!" என்று இழுத்தார் புதியவர்.

"அதுதான் தெரியுதே."

"நான் திருநெல்வேலிப் பக்கம், கங்கை கொண்டான் பூர்வீகம்."

"ரொம்ப சரி."



“ஷேவ் பண்ண ஒன்றே கால் ரூபாயா?” என்று துடித்துக் கேட்டார் ஒருவர்.

“ஷேவ் பண்ணுவதற்கு நாலணாதான். பிறகு கத்தியைச் சாணை பிடிக்க ஒரு ரூபாய் ஆகிறதே!” என்று பணிவாகப் பதில் சொன்னார் சலூன்காரர்

குழைந்த குரலில் வந்தவர் பேசினார்: “நான் ஒரு ரிடையர்ட் டீச்சர். வாழ்க்கை முழுவதும் தான் கைகட்டிச் சேவகம் பண்ணிட்டோம் காசுக்காக. இனிமேலாவது பகவத் கைங்கரியத்திலே ஈடுபடுவோம்னு பட்டுது. அதுதான் கிளம்பினேன் இப்படி. ஸ்ரீவில்லிபுத்தூர், அழகர் கோயில் ஆச்சு. ஏதோ எம்பெருமான் திருவுள்ளத்திலே ஸ்ரீரங்க சேவையும் கிடைச்சுது. அப்படியே உங்களைப் பார்த்துண்டு....”

செட்டியாருக்குப் பேச்சுப் புரியவில்லை.

“ரங்கநாதர் எங்கே? நான் எங்கே? என்னவோ பேசறேளே!”

வந்தவரும் ஒன்றும் சளைக்கவில்லை.

“உங்களைப் பார்க்கறது மேற்கொண்டு தரிசனத்தை நடத்தி வைக்கணும்னுட்டுத்தான். வேறே ஒன்றுமில்லே. தப்பா சொல்லியிருந்தால் தேவரீர் மன்னிச்சிக்கணும்....”

“நான் என்ன பண்ணணும்கறீங்க?”

“ஏதோ நாலு இடத்திலே கொடுத்ததை வச்சுண்டுதான் நான் யாத்திரை போயாகணும். உங்களைப் போன்ற சீலர்கள் ஏதோ உபகாரம் பண்ணினால், உங்க தர்மத்திலே நான் கொஞ்சம் புண்ணியம் சம்பாதிக்கலாம்கிற ஒரு நப்பாசைதான்.” பேசியவரின் குரலில்தான் எத்தனை உருக்கம்!

“நீங்க இப்படியே இன்னும் எதுமட்டும் போகப் போறீங்க?”

“பத்ரிநாத் போயிடணும்னுட்டுத்தான் புறப்பட்டிருக்கேன். பகவான் நடத்தி வைக்கணும்.”

செட்டியார் பலமாகச் சிரித்து விட்டார். “பத்ரிநாத் வரையிலும் போகணுமா? அடி, சக்கை!”

“என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்?”

“ஆமாம், சுவாமி! இன்னும் நீங்க திருச்சிராப்பள்ளியைத் தாண்டலே. பத்ரிநாத் போகணும்கிறீங்களே!”

“பெருமாள் திருவுள்ளம் இருந்தால் நடக்கப்படாதோ? சொல்லுங்களேன்!”

செட்டியார் அவரை விழுங்குகிறாற் போலப் பார்த்தார்.

“ஸ்ரீரங்கத்திலே கேள்விப்பட்டேன், உங்க பேரை. பெருமாளுக்கு அத்தியந்த பக்தர் ஆச்சே செட்டியார்னு சொன்னார்கள் அங்கே. ஓடி வந்தேன் உங்களைக் காண. நீங்க கைவிட்டுடப்படாது.”

செட்டியார் சற்றும் அசைந்து கொடுக்கவில்லை.

“இதைப் பாருங்க. நான் இந்த மாதிரி வரவங்க, போறவங்களுக்கெல்லாம் கொடுக்கிறதில்லேன்னு வச்சுப்புட்டேன். இந்தக் காலத்துலே, எத்தனையோ நூதன யாசகம் எல்லாம் தலையெடுத்திருக்கு....”

வந்தவர் குறுக்கே பேசினார்—“அபசாரம்! நீங்க அப்படியெல்லாம் நினைக்கப்படாது. நீங்க வேணுமின்னு எங்க பக்கத்து ஸ்நேகிதர்கள் உங்களுக்கு யாராவது இருந்தால் கேட்டுப் பார்க்கலாம்.”

நம்பிக்கையில்லாமல் செட்டியார் சொன்னார்: “சுவாமி, உங்களை ஒன்றும் நான் தப்பிதமாகச் சொல்லலே. உலகம் அப்படி இருக்குன்னு சொல்றேன்.”

“செட்டியார்வாள்! நீங்க எனக்காக ஒரு சின்ன சிரமம் மேற்கொள்ளணும். திருநெல்வேலிப் பக்கத்துக்காரராக யாராவது இருந்தால் கொஞ்சம் டெலிபோன்லேயாவது பேசுங்கோ. இந்த மாதிரி ஒரு மனுஷன் வந்து சொல்றான், நம்பலாமான்னு கேட்டுண்டுங்கோ.” பேசும் போது அவர் குரல் தழுதழுத்தது. உண்மையானாலும், உதவ வேண்டியதுதான்; நடிப்பென்றால் பாராட்டலாம் நிச்சயம்!

“வீணு எதுக்குங்க சாமி, இந்த வம்பெல்லாம்? நான்தான் சொல்லிவிட்டேனே. என்னுலே ஆனதை ரங்கநாதருக்கு மொத்தமா அப்பப்ப பண்ணிப்பிடறது. மற்றப்படி சின்னதை தர்மமெல்லாம் ஒன்றும் பண்றதில்லேன்னு வச்சுட்டேன்.”

வந்தவரின் கண்களில் நீர் மல்கியது.

“நான் எவ்வளவோ நம்பிக்கையோட வந்தேன் உங்ககிட்டே. நீங்க வேறே ஒன்றும் செய்ய வேண்டாம். எனக்காக ஒரு சின்ன உபகாரம் மட்டும் செய்யுங்கோ.”

என்ன என்று கேட்கும் முத்திரையில் செட்டியார் நோக்கினார்.

“கங்கைகொண்டான் வேந்து வரததேசிகன்னு ரிடையர்ட் டீச்சர் ஒருத்தன் வந்திருக்கான். அவன் எப்பேர்ப்பட்ட பேர்வழின்னு யாரை வேணுமின்னாலும் கேளுங்க, சார். தெரியலேன்னு சொன்னால், பாம்புக் கடிக்குக்கூட மருந்து போடுவானேன்னு ஒரு வார்த்தை சொல்லிக் கேளுங்கோ.”

செட்டியார் பிடிவாதமாகப் பேசினார். “சுவாமி, உங்களை நான் நல்லவன், பொல்லாதவன்னு ஒன்றுமே சொல்லலே. நீங்க வீணு உங்க மனசை ஏன் கஷ்டப்படுத்திக்கிறீங்க? பேசாமல் போய் வாங்க. நான்தான் சொல்லிவிட்டேனே.”

வந்தவரும் பிடியைத் தளர்த்தவில்லை. இதே சமயம் “சாமி, சாமி! நம்ம சின்னம்மாவைப் பாம்பு கடிச்சிட்டாப் போல இருக்குது. துடிச்சுக்கிட்டு இருக்குது. ஓடியாங்க” என்று கூவிக் கொண்டே ஓடி வந்தான் கந்தப்பன்.



அவன்: நீங்க இந்தப் பாடுபடுத்தினால் நான் எங்கேயானும் போய்ப் பாதரசத்தைச் சாப் பிட்டு விடுவேன்.

அவர்: பாதரசம் வேண்டாம்! நீ வைத்த பருப்பு ரசத்தையே சாப்பிடு, போதும்.

---

செட்டியாரின் உயிர் ஒருகணம் பிரிந்து சென்று விட்டாற் போலிருந்தது. வாசற் கதவைத் திறந்து போட்டபடியே அவர் பின் கட்டுக்கு ஓடினார். பாம்பு தீண்டிய பெண்ணின் உடலை எல்லோருமாகத் தூக்கிக் கொண்டு வந்து கூடத்துக் கட்டிலில் கிடத்தினார்கள்.

செட்டியாரிடம் சற்று நேரம் முன் வரை வாதாடிக் கொண்டு நின்ற மனிதர் அந்தப் பெண்ணின் அருகே நின்றார். செட்டியார், அவர் மனைவி, கந்தப்பன் யாருக்குமே எதுவும் ஓடவில்லை.

''இந்தாப்பா, கட்டிலை விட்டுக் கீழே இறக்கு'' என்று வைணவர் கந்தப்பனிடம் கூறி விட்டுத் தோட்டத்துப்புறம் ஓடினார்.

''ஒரு குடம் தீர்த்தம் வேணும். நானே இழுத்துக்கறேன். குடமும் கயிறும் கொடுத் தால் போதும்.''

செட்டியார் இயந்திரம் போல், அவர் கேட்டதை எடுத்து வந்து தந்தார்.

குடத்து நீரைக் கொணர்ந்து, சுமக்க முடி யாமல் சுமந்து வந்து கூடத்தில் வைத்தார், வந்தவர். அவருடைய செய்கைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு நின்றனர் அங்கிருந்தோர்.

குடத்து நீரைச் சுற்றிக் கையைச் சொடுக் கினார்: நாலு திக்கிலும் நாலு சொட்டுத் தெளித்தார். வாயினுல் என்னவோ முணு முணுத்தார். குடத்து நீரை எடுத்துப் பாம்பு தீண்டிய இடத்தில் தெளித்தார். திரும்பத் திரும்பக் கை அசைவுகளும் மந்திர உச்சாடன மும் நிகழ்ந்தன.

செட்டியார் தம்பதிகளின் கண்களில் திடீ ரென மின்னல் பாய்ந்தாற்போலிருந்தது.

ஆம்! அடித்துப் போட்டாற் போலக் கிடந்த அவர்களுடைய பெண் ஒரு மணி நேரம் கழித்து, கால்களை அசைத்தாள்; கண்களைத் திறந்து விழித்தாள். கர்மயோகி போல் இயங்கிய வைணவரின் கைகள்கூடக் கடுத்துப் போயின.

''விஷம் இறங்கிடுத்து. இந்தக் குடத்து ஜலத்தையே கொண்டு போய்க் கிணற்றிலே விட்டு, ஸ்நானம் பண்ணி வைச்சிடுங்கோ.''

செட்டியார்த் தம்பதிகளை அப்படியே விட்டு விட்டு, வாசலுக்கு வந்தார் வைணவர்.

சிறிது நேரம் உள்ளே மௌனம் நிலவியது. பின், செட்டியார் வந்தார். அவர் கண்கள் நீருண்டிருந்தன. ''என்னை மன்னிக்கணும்'' என்றார்.

வந்தவர் பேசவே இல்லை.

''நீங்க தப்பாக எடுத்துக்கக் கூடாது: இந்தக் காலம் அப்படிப் போயிடுத்துங்க, ஒருத்தரையும் நம்ப முடியாதபடி.''

வாயைத் திறக்கவேயில்லை, நாமக்காரர்.

''இந்தாங்க'' என்று செட்டியார் கைகளை நீட்டினார். அக்கரங்களில் ஐந்து பத்துரூபாய் நோட்டுக்கள் இருந்தன.

சட்டென்று இரண்டடி பின்னால் வைத்து, ''என்ன இது?'' என்று கேட்டார், வாசகத் துக்கு வந்தவர்.

''ஒண்ணுமில்லே. ஏதோ கொஞ்சம். நீங்க வைச்சுக்கணும்.''

அலட்சியமாகச் சிறுநகை புரிந்தார் வரத தேசிகர்.

''எல்லாரையும் போல உங்களை நினைச் சது தப்புத்தான். நீங்க மன்னிச்சுக்கணும்'' என்று செட்டியார் கெஞ்சினார்.

வந்தவர் வாயைத் திறக்கவே இல்லை.

''என் மேலே சுவாமிகளுக்குக் கோபமா யிருக்கும். அப்படித்தானே?'' குழந்தை போலப் பேசினார் செட்டியார்.

''ஒரு கோபமுமில்லே, செட்டியார்வாள்!''

''நிஜமாகவா ?'' — இதயத்தின் அடியி லிருந்து வந்தது செட்டியாரது இச்சந்தேகம்.

''எனக்கு எதற்குக் கோபம் வரணும், சொல்லுங்கோ.''

''அப்படியானால், இதை வாங்கிக்கலாமே!'' செட்டியாரின் கைகள் கெஞ்சின.

''செட்டியார்வாள்! என்ன இப்படிப் பேசறேள்? உங்களுக்கு இதுகூடத் தெரி யாதா ?'' என்றார் அவர்.

''எனக்கொண்ணும் புரியலியே சுவாமி?'' உண்மையிலேயே பயந்து போய் விட்டார் செட்டியார்.

''ஏதோ நாலு பேருக்கு உபகாரம் பண் ணக் கூடிய இந்தச் சின்ன வித்தை பகவான் கொடுத்தது என்னை விட்டுப் போயிடணும்னு நீங்கள் நினைக்கிறேளா?''

''.........?'' என்னவோ பேசினார் செட்டி யார். சத்தம்தான் வரவில்லை.

''பின்னே என்ன? மந்திரத்தை ஜபிச்சு விஷத்தை இறக்கிட்டு, அதுக்குக் காசு வாங் கிக்கலாமா? நம்மகிட்டே பகவான் கொடுத்த மந்திர சக்தி நீங்க வேண்டாமா?'' என்று உறுதி மிகுதியில் உரக்கப் பேசினார். செட்டி யாரின் மூளை ஒருகணம் இயங்கவே மறுத்து விட்டது.

''அப்ப நான் இதை என்ன பண்ணட்டும்?''

''வைச்சுக்குங்கோ.''

கதவின் பின்புறத்திலிருந்து செட்டியாரின் மனைவி நெஞ்சு நெகிழ இவ்வளவையும் கவ னித்துக் கொண்டிருந்தாள். ''அவுங்க வந்த வங்க, ஒரு மோர்கூடக் குடிக்காமல் போயி ருங்களே!'' என்றாள்.

''நன்றி, செட்டியார்வாள்! நான் வர் றேன்!'' என்று ஒரு வாய் தண்ணீர் கூடப் பருகாமல் வெளியேறினார் அந்த வைணவர்.

வாதாடி வம்பு செய்து வந்த மனிதர் வந் ததற்கேயும் காலணாக் காசுகூட வாங்காது, ஆயினும் தனி மன நிறைவோடு வெளியேறிச் செல்வதை நோக்கி நின்ற செட்டியார் சிலை யாய்க் காட்சி தந்தார்.

# அதிர்ஷ்டம் வந்தது



விஜயம்

முத்து ஒரு வயதுக் குழந்தையா யிருந்த போது அவன் ஜாதகத்தைக் கணித்த சோதிடர், "இவன் பெரியவனானால் இவனிடம் பலபேர் பல்லைக் காட்டிக் கொண்டு நிற்பார்கள்" என்று அவன் தகப்பனாரிடம் கூறினார். சோதிடரின் கூற்றை ஆதாரமாகக் கொண்டுதான் முத்துவின் தகப்பனார் அவனைப் பல் வைத்தியத்துக்குப் படிக்கவைத்தார்.

பல் வைத்தியத்தில் தேர்ச்சி பெற்ற முத்து இன்னொரு பெரிய டாக்டரிடம் பயிற்சி பெற வேண்டுமல்லவா? பிரசித்தி பெற்ற சீனப் பல் டாக்டரான மிங் சிங் சூங்கிடம் பயிற்சியாளராக அமர்ந்தான். பயிற்சிக் காலம் முடிந்ததும் முத்துவின் நீண்ட நாள் கனவு நிறைவேறியது.

முத்து தனியாகவே தன் தொழிலை நடத்த ஆரம்பித்தான். ஆனால் அவனைத் தேடிக் கொண்டு பல் நோயாளிகள் யாருமே வராமற் போனதுதான் அவனுக்கு வேதனையாயிருந்தது.

ஒரு நாள் முத்துவின் நண்பருடன் ஒரு பல் வலிக்காரர் வந்தார். தன்னைத் தேடிக் கொண்டு ஒரு நோயாளி வந்ததைப் பார்த்ததும் முத்துவுக்கு உற்சாகம் பிறந்துவிட்டது. இதுவரையில் பல் வலியால் அவஸ்தைப்படுபவனைப் போல் முகத்தை வைத்துக்கொண்டு எப்பொழுதும் அவதிப்பட்டவன் நோயாளியைக் கண்டதும் துள்ளி யெழுந்தான்.

அந்த நோயாளி முத்துவிடம் தன் பற்களைச் சரியாகக் காட்ட வில்லை. தமக்கிருக்கும் நோயின் தன்மையைக் கூறும்போது கூடப் பற்களைக் கடித்துக் கொண்டுதான் கூறினார். பல்லைக் காட்டும்படி அவரை வற்புறுத்த முத்துவுக்குப் பயம்; வாராது வந்த நோயாளியும் போய் விட்டால்!

ஒருவாறு பரிசீலனையை முடித்து மருந்து கொடுத்து அவரை அனுப்பி விட்டு, தன் நண்பரிடம் வந்தான்.

"என்னப்பா, வாயைத் திறந்து காட்டினால் தானே பற்களைப் பரிசோதிக்கலாம்! முதல் முதல் வந்த பேஷண்டாயிற்றே என்று அதிகமாகக் கட்டாயப்படுத்தவில்லை" என்றான் முத்து.




"அவர் தங்கப் பல் கட்டிக் கொண்டிருக்கிறார். அதை வெளியே காட்டவே அவருக்குப் பயம். இந்தியப் பாதுகாப்பு நிதிக்குப் பொதுமக்கள் தங்கம் கொடுக்கிறார்களல்லவா? தங்கப் பல்லைக் கழற்றிக் கொடுக்க வேண்டி வந்துவிடுமோ என்று அவருக்குப் பயம்! தமது தங்கப் பல்லுக்குத் திருடன் வந்து விடுவானோ என்ற பயத்தில் அவர் இரவில் வெளியே படுப்பதில்லை" என்றார் நண்பர்.

இதைக் கேட்ட முத்துவுக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை.

மறு நாள் காலை எழுந்ததும் முத்து வழக்கம்போல் தன் வைத்திய சாலைக்குப் புறப்பட்டான். அந்தச் சமயம் பார்த்து அவனுடைய பழைய நண்பன் கோபால் வந்து சேர்ந்தான்.

"வா அப்பா கோபால்! இப்பொழுதாவது என்னை நினைவு வந்ததே. ஊரில் எல்லாரும் சௌக்கியம்தானே?" என்று கேட்டான் முத்து.

"சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்? எல்லோரும் சௌக்கியமாக இருக்கிறார்கள். நீ எப்படி இருக்கிறாய்? உன் வைத்தியம் எப்படி நடக்கிறது?" என்று பதிலுக்குக் கேட்டான் கோபால்.

"நீ என்னுடன் வாயேன், சிகிச்சை நிலையத்துக்கு. அங்கேயே காப்பி சாப்பிட்டுக் கொள்ளலாம்" என்று கூறி ஸ்கூட்டரில் அவனைப் பின் பக்கத்தில் உட்காரச் சொல்லி விட்டு அதை வேகமாகச் செலுத்திக் கொண்டு போனான் முத்து.

சிகிச்சை நிலையத்தின் பூட்டைத் திறந்து கோபாலை உள்ளே அழைத்துச் சென்றான்.

உள்ளே சென்ற கோபால், "என்னப்பா முத்து, நோயாளிகளையே காணோமே! இன்றைக்கு மாத்திரம்தான் இப்படியா, இல்லை.." என்று அவன் மேலே பேசுவதற்குள் முத்து அவனைத் தன் அறைக்கு அழைத்துச் சென்று ஒரு நாற்காலியில் உட்காரச் சொல்லித் தானும் உட்கார்ந்து கொண்டான்.

"கோபால்! உன்னிடம் சொல்லுவதற்கு என்ன? நான் தொழில் ஆரம்பித்து ஒரு வருஷம் ஆகிறது. ஆனால் பிராக்

டிஸ்தான் இல்லை. முதலில் ஆரம்பித்த புதிதில் இரண்டொருவராவது வந்து கொண்டிருந்தனர். இப்பொழுது அதுவும் இல்லை. இத்தனைக்கும் புது போர்டு ஒன்று கவர்ச்சியாக எழுதி மாட்டியிருக்கிறேன். 'பல் வைத்தியசாலையின் போர்டே கண்ணுக்குத் தெரியவில்லை. வேறு கவர்ச்சியான போர்டாக எழுதித் தொங்கவிடு' என்று நீ முன்பு வந்தபோது சொல்லவில்லையா? அதன்படி உடனே புதிய போர்டு தயாரித்து மாட்டினேன். ஒரு பயனும் இல்லை!'' என்று கூறி அலுத்துக்கொண்டான் முத்து.



''எங்கே? புதுப் போர்டை நான் சரியாகக் கவனிக்கவில்லையே!'' என்று கூறிக்கொண்டே வாசற்புறம் போய்ப் பார்த்துவிட்டு வந்த கோபால் ''ஹ ஹ ஹா!'' என்று பெரிய சிரிப்பாகச் சிரித்துக்கொண்டே உள்ளே வந்தான்.

''அடேடே! பல் சுளுக்கிக் கொள்ளப் போகிறது. மெதுவாய்ச் சிரி! புதிய போர்டில் அப்படி என்ன ஹாஸ்யத்தைக் கண்டு விட்டாய்?'' என்றான் முத்து.

''நீ அந்தப் போர்டை இதுவரை படித்துப் பார்க்கவே யில்லையா? வந்து பார்!'' என்று கூறி, கோபால் அவன் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக்கொண்டு வாசற்பக்கம் போனான்.

முத்து போர்டைப் படித்துப் பார்த்தான். ''பல் வைத்தியசாலை இவ்விடம் பல் தட்டப்படும்'' என்று எழுதியிருந்தது.

''இது என்னப்பா அதிசயமாக இருக்கிறது! இத்தனை நாட்களாக நான் இதைக் கவனிக்கவேயில்லையே! 'பல் கட்டப்படும்' என்று எழுதச் சொன்னேன். இப்படி எழுதியிருக்கிறானே!'' என்று முத்து நண்பனிடம் பரிதாபமாக அலறினான்.

'' 'பல் தட்டப்படும்' என்ற போர்டைப் பார்த்த பிறகு எவனாவது நோயாளி உன்னிடம் வருவானா? சரி. உடனே இந்தப் போர்டைக் கழற்றிப் பிழையைத் திருத்த ஏற்பாடு செய். பிழையைத் திருத்துகிற சாக்கில் இன்னும் ஒரு பிழை நேர்ந்து விடப் போகிறது. புத்தகங்களில் 'பிழை திருத்தம்' என்று ஒரு பட்டியல் கடைசிப் பக்கத்தில் போடுவார்கள். அதிலேயே பிழை இருந்துவிடும். அதுமாதிரி ஆகிவிடப் போகிறது. கவனித்துத் திருத்திப் பிறகு போர்டை மாட்டு!'' என்றான் கோபால். அந்த ஹாஸ்யம் முத்துவுக்கு ரசிக்கவில்லை. போர்டைக் கழற்றிப் பிழைத் திருத்தத்துக்கு ஏற்பாடு செய்தான்.



கோபாலன் அவனை அத்துடன் விட்டுவிடவில்லை.

''முத்து, உனக்கு இங்கிலாந்தில் நடந்த ஒரு சுவாரஸ்யமான சம்பவம் தெரியுமா?'' என்று கேட்டான்.

''எந்தச் சம்பவத்தைப் பற்றிச் சொல்லுகிறாய்?'' என்று முத்து சிறிதும் சுரத்தில்லாமல் கேட்டான்.

''.... சொல்லுகிறேன் கேள். உன் தொழில் சம்பந்தப்பட்டதுதான். நீகூட அந்த மாதிரி ஏதாவது செய்து பார்க்கலாம்.. இங்கிலாந்தில் ஒரு பெரிய மனிதர் ஒரு பெரிய கடைக்குச் சென்றார். அங்கு குண்டூசியிலிருந்து குளிக்கும் தொட்டி வரை கிடைக்காத சாமான் எதுவுமே இல்லை. பெரிய மனிதர் தமக்குத் தேவையானவற்றை வாங்கிக்கொண்டார். கடைக்காரர் பலே ஆசாமி. அவர் தலையில் இன்னும் எதையாவது கட்டிவிட வேண்டும் என்று முயன்றார்.

''ஸார், இதோ பார்த்தீர்களா? இந்தப் பற்கள் யாருடையவை தெரியுமா?'' என்று கேட்டார் கடைக்காரர்.

''என்ன, பற்களைக்கூட யாராவது விற்பார்களா?'' என்று கேட்ட பெரிய மனிதர் வியப்பினால் அயர்ந்து போனார்.

கடைக்காரர் அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே, ''இவை யாருடைய பற்கள் என்று தெரிந்தால் இப்படிக் கேட்கமாட்டீர்கள்!'' என்றார்.

''யாருடைய பற்கள்!'' என்று அதிசயத்துடன் கேட்டார் பெரிய மனிதர்.

''பேரறிஞர் பெர்னார்டு ஷாவின் பற்களாக்கும்!'' என்றார் கடைக்காரர்.

''என்ன, பெர்னார்டு ஷாவின் பற்களா? இதுவரையில் யாராவது இது வேண்டும் என்று கேட்டிருக்கிறார்களோ?'' என்று கேட்டார் பெரிய மனிதர்.

மீண்டும் ஒரு முறை ஏளனமாகச் சிரித்து விட்டுக் கடைக்காரர், ''நீங்கள் நம்பமாட்டீர்கள் ஸார். இதுவரையில் நூறு டஜன் பற்கள் விற்று விட்டேன். என்ன சொல்கிறீர்கள்!'' என்று பெருமிதத்துடன் கேட்டார்.

பெரிய மனிதர் மூர்ச்சையாகி விட்டார். ஒரு மனிதனுக்கு முப்பத்திரண்டு பற்கள்தானே? எப்படி நூற்றுக் கணக்கில் விற்க முடியும் என்று ஆச்சரியப்பட்டு மாத்திரம் அவர் மூர்ச்சையாகி விடவில்லை. இன்னொரு காரணமும் இருந்தது....!''

''அந்தக் காரணத்தை நான் சொல்லட்டுமா?

**சத்தம் இல்லே!**

மாப்பிள்ளை மாமனாரோடு சண்டை போட்டுக் கொண்டு மூட்டை, முடிச்சுக்களுடன் ஊருக்குப் புறப்பட்டார். ஜட்கா வண்டியில் ஏறியதும், "ஏன் அப்பா! ரயில்வே ஸ்டேஷனுக்கு என்ன வண்டிச் சத்தம்?" என்று கேட்டார்.

வண்டிக்காரன்: சத்தம் போடாமல் குந்திக்கிட்டு வாங்க, ஸார்! எல்லாம் நேத்திக்கே பேசிப் பெரிய ஐயா அதைக் கையிலேயும் கொடுத்திட்டாரு!

---

அந்தப் பெரிய மனிதர்தான் பெர்னார்ட்ஷா என்பதுதான் இன்னொரு காரணம்! சரி தானே?" என்று கேட்டான் மூத்து.

"இந்தத் துணுக்கை நீ வாசித்திருக்கிறாயா? நீ படித்திருக்க மாட்டாய் என்று நினைத்தேன்!" என்றான் கோபால்.

"யாராவது சரியான முட்டாளைப் பிடித்து இந்தத் துணுக்கை அவனிடம் சொல்லு. போடா!" என்று பாதி கேலியாகவும் பாதி கோபமாகவும் சொன்னான் மூத்து.

போர்டைத் திருத்தி மாட்டிய பிறகும்கூட மூத்துவுக்குப் 'பிராக்டிஸ்' இல்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் பழம் நழுவிப் பாலில் விழுந்த மாதிரி டாக்டர் மிங் சிங் சூங்கிடமிருந்து அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. அவருக்கு நிறையக் கேஸ்கள் வருவதால் சமாளிக்க முடியவில்லையென்றும், மூத்துவைத் தமக்கு உதவி டாக்டராகப் பணியாற்ற முடியுமா என்றும் கேட்டிருந்தார். மூத்து சிறிதும் தயக்கமின்றி அந்த வேலையை ஒப்புக்கொண்டு விட்டான்.

டாக்டர் மிங் சிங் சூங்கினிடம் ஏராளமான பல் நோயாளிகள் போனார்கள். டாக்டர் மூத்துவுக்கு ஓய்வு ஒழிவின்றி வேலை இருந்தது. டாக்டர் மிங் சிங் சூங் இப்பொழுதெல்லாம் நோயாளிகளை அதிகமாகக் கவனிப்பதில்லை. காலை வேளையில் வரும் நோயாளிகளைக் கவனிப்பார். மற்ற வேளைகளில் மூத்துதான் பல் வைத்திய சாலையைப் பார்த்துக்கொண்டான்.

வழக்கத்துக்கு விரோதமாக டாக்டர் மிங் சிங் சூங் எப்பொழுது பார்த்தாலும் பிரார்த்தனை அறையிலேயே இருந்தது மூத்துவுக்கு ஆச்சரியமாய் இருந்தது. மூத்து ஏற்கனவே அவருடன் இரண்டு வருஷ காலம் நெருங்கிப் பழகியிருக்கிறான். அப்பொழுதெல்லாம் இந்தப் பிரார்த்தனை அறையே கிடையாது. மூத்துவுக்கு இதன் உண்மையை எப்படியாவது அறிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆவல் உண்டாயிற்று. இதன் காரணமாக டாக்டர் மிங் சிங் சூங்கின் வீட்டுக்கு அவன் அடிக்கடி போய் வரலானான். ஆனால் ஒன்றும் விளங்குகிற வழியாயில்லை.

அன்று இரவு ஒன்பதுமணிக்கு மூத்துடாக்டர் மிங் சிங் சூங்கின் வீட்டுக்குச் சென்றான். அவன் எப்பொழுது அங்கு போனாலும் அவனை உள்ளே போக விடாமல் மடக்கிப் பேச்சுக் கொடுக்கும் சீனத்துச் சிங்காரி லிங் மீங் வழக்கத்துக்கு விரோதமாக அங்கில்லை. மூத்துவின் மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. விடுவிடென்று உள்ளே போனான். பிரார்த்தனை அறையின் அருகே சென்றான். மெதுவாகக் கதவைத் தள்ளினான். கதவு நகர்ந்தது. இடுக்கு வழியாகப் பார்த்தான். பெரிய புத்தர் சிலைக்கு எதிரே நெருங்கி நின்று கொண்டு டாக்டர் மிங் சிங் சூங் ஏதோ சீன மொழியில் மெதுவாகக் கூறிக்கொண்டிருந்தார். புத்தர் சிலையின் வாய் திறந்து கொண்டிருந்தது. பற்களில் வெளிச்சம் தெரிந்தது. சில நிமிஷங்களில் மூத்துவுக்கு எல்லாம் புரிந்து விட்டது. அவனுக்குச் சீன மொழி தெரியுமாதலால் டாக்டர் மிங் சிங் சூங் எத்தனை அபாயகரமான வேலையில் ஈடுபட்டிருக்கிறார் என்பதை அவன் தெரிந்து கொண்டு விட்டான். அதன் விளைவு சீனர்களுக்குப் பல முக்கியமான உளவுகளை ரகசிய ரேடியோ மூலம் அறிவித்து வந்த பெரும் தேசத் துரோகக் குற்றத்துக்காக டாக்டர் மிங் சிங் சூங் கைது செய்யப்பட்டார். மூத்துவின் பெயர் நாடு முழுதும் பரவியது.

இப்பொழுது டாக்டர் மூத்துவின் பல் வைத்தியசாலை பெரிதாக விஸ்தரிக்கப்பட்டு விட்டது. அவனிடம் இரண்டு பல் டாக்டர்கள் வேலை பார்த்தனர். எத்தனை பெரிய மனிதனாயிருந்தாலும் பல் டாக்டர் மூத்துவினிடம் பல்லைக் காட்டுவது பெருமையாகக் கருதப்படலாயிற்று.

# பத்தினிக் கோட்டம்



ஜெகசிற்பியன்



## அத்தியாயம் முப்பத்தேழு

## நாகோதரன்

அந்தச் செதியைக் கேட்டு வியப்பும் ஆவலுமாகக் கண்களை அகல விரித்த உத்தமசீலியின் முகத்தில் வியர்வைத் துளிகள் பூத்தன. "உண்மைதானு, நாகோதரா? உறையூரிலிருந்து என் பெரிய தந்தையார் இங்கு வந்து போனது உண்மைதானு?" என்று தன்னை மீறிய துடிப்புடன் வினவினாள்.

குருதி வழியும் காயங்களின் வேதனையைத் தாள மாட்டாமல் நெளிந்து நடுங்கிய நாகோதரன், "ஆம், தாயே! தளபதி வில்வேலியுடன் வந்த நம் சளுக்கியப் பேரரசர், சற்று முன்தான் இங்கிருந்து சென்ருர்" என்றான்.

அவன் சொன்னதை நம்பச் சிரமப்படுகிறவள் போல் அவனை ஏற இறங்கப் பார்த்து விழித்த உத்தமசீலி, "உனக்கு ஏன் இந்தத் தண்டனை விதிக்கப்பட்டது?" என்று அவசரமாகக் கேட்டாள்.

புண்பட்ட உடலைக் கூனிக் குறுக்கிக்கொண்டு தன் அருகில் உருண்டு கிடந்த அந்தத் தாமரைப் பூ வடிவான மர ஆசனத்தைப் பரிதாபமாகப் பார்த்த நாகோதரன் மௌனமாகக் கண்ணீர் வடித்தான்.

உத்தமசீலிக்கு இப்போதுதான் அவ்விஷயம் நினைவில் வந்து உரைத்தது. அன்றொரு நாள் விடியற்காலை அவளும் வில்வேலியும் சேதியக் கலைஞரின் இல்லத்திலே அமர்ந்து பேசிக்கொண்டிருந்த போது, வெளியே இருந்த அவனுடைய சிவிகை கடத்தப்பட்ட சம்பவத்தையொட்டியே அவனுக்கு இந்தத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு அவள் மிகுந்த மன வேதனைக்கு உள்ளானாள். ஆயினும் அதுபற்றிய மேல்

விவரங்களை அறியும்பொருட்டுத் தன் மன நெகிழ்ச்சியை அடக்கிக் கொண்டு அவனைப் பரிவுடன் நோக்கி, ''அது சரி; நான் இந்த இலவந்திகைப் பள்ளிக்கு வந்த நாள் முதல் நீ என் கண்ணில் படவில்லையே, எங்கே போயிருந்தாய்?'' என்று கேட்டாள்.

தலை நிமிரக்கூடச் சக்தியற்றுவிட்டிருந்த நாகோதரன் துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினான்: ''கடந்த ஒரு வாரமாக இங்குதான் இருந்து வருகிறேன், அம்மணி! யாரோ சதிகாரன் இந்த மர ஆசனத்தைச் சிவிகையினுள் வைத்து என்னை ஏமாற்றி விட்ட விஷயம்தான் உங்களுக்குத் தெரியுமே; அந்த என் தவற்றினால் இளவரசியாருக்கும் தமக்கும் பல சங்கடங்கள் ஏற்பட்டு விட்டன என்று குற்றம் சாட்டி, அதற்குத் தண்டனையாக இந்த ஆசனத்தைப் பெருவளநல்லூரிலிருந்து என் தலையில் ஏற்றிக் கொண்டு வரச் செய்து, இங்கு வந்த பின்னும் இதை நான் சுமந்துகொண்டு நிற்க வேண்டுமென உத்தரவிட்டார் தளபதி வில்வேலி. அதன்படி இரவு பகல் ஊண் உறக்கமின்றி இவ்வாசனத்தைத் தலையிலே சுமந்து கொண்டு இங்கேயே நின்றிருந்தேன். இதுவும் போதாதென்று, சளுக்கிய மன்னரவர்கள் இன்று உறையூரிலிருந்து வந்ததும் அவரை இங்கே அழைத்து வந்து இந்தச் சவுக்கடித் தண்டனையை எனக்கு வாங்கிக் கொடுத்த பிறகுதான் தளபதியின் மனம் திருப்தியடைந்தது.''

நாகோதரன் சொன்ன விவரங்களைக் கேட்டு நெஞ்சம் பதறிக் குமுறினாள் உத்தமசீலி. தன்னுடைய நாட்டிலிருந்து அழைத்து வரப்பட்ட - தனக்குச் சொந்தமான — பணியாள் ஒருவனைத் தன் அனுமதியின்றித் தண்டிக்க, சளுக்கியத் தளபதிக்கோ, சளுக்கிய மாமன்னருக்கோ என்ன அதிகாரம் இருக்கிறது என்று எண்ணி உள்ளூறச் சினந்து பொங்கினாள் அவள்.

'ஒவ்வொரு மனிதனும் தனக்குக் கிடைக்கும் அதிகாரங்களைப் பிறர் மீது பிரயோகிப்பதில்தான் எத்தனை பேய்த்தனமான ஆர்வம் காட்டுகிறான்! அதிகார வெறி தலைக்கேறி விட்டால் எந்தப் பெரிய மனிதனும் எவ்வளவு அடிமட்டத்துக்கும் இறங்கிப் போய்விடுவான் போலும்' என்று எண்ணி மனம் உலர்ந்த அவள், மறுகணமே இதற்கு மாறான மற்றோர் ஊகத்துக்குத் தாவினாள்: 'என்னுடைய விஜயத்தின் முக்கியத்துவத்தை மனத்தில் கொண்டு தான் விக்கிரமாதித்தரே நேரில் வந்து இச்சிறு விஷயத்தை விசாரிக்க முற்பட்டாரோ? அல்லது என்மீது வைத்த அளப்பரிய அன்பினால், எனக்கு நேர்ந்த சங்கடங்களைப் பொறுக்கமாட்டாமல்தான் இவனுக்கு இத்தனை கொடிய தண்டனையை அளித்து விட்டுப் போனாரோ?'

இப்படி எண்ணியதுமே அவள் உள்ளம் ஒரு விசித்திர மகிழ்ச்சியில் திளைத்தது. ''நாகோதரா! என் பெரிய தந்தையார் இப்போது எங்கே போயிருக்கிறார்?'' என்று ஆவலுடன் கேட்டாள்.

''இந்த நந்தவனத்துப் பின்புற வாயிற் பக்கமாக வந்த சளுக்கிய மாமன்னர், அவ்வழியாகவே திரும்பிச் சென்றார் என்பதைத் தவிர வேறெதும் எனக்குத் தெரியாது, அம்மணி!'' என்று குமுறினான் நாகோதரன்.

ஒருகணம் ஏதோ யோசித்த உத்தமசீலி, ''சரி; நான் இப்போதே போய் என் பெரிய தந்தையாரைப் பார்க்க வேண்டும். நீ கவலைப்படாமல் இரு. உனக்கு மன்னிப்புக் கிடைக்கச் செய்கிறேன்'' என்று கூறிக் கொண்டே அங்கிருந்து புறப்படத் திரும்பினாள்.

''இளவரசி!....''

அவள் சட்டென்று நின்றாள். இரத்தம் கசியும் தன் உடலை இரு கைகளாலும் போர்த்திக்கொண்டு தட்டுத் தடுமாறி எழுந்த நாகோதரன் அவளைப் பயப்பிராந்தியுடன் பார்த்து, ''இளவரசியாரிடம் அடியேன் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன்...'' என்று கரகரத்த குரலில் இழுத்தான்.

'என்ன?' என்பதுபோல் ஏறிட்டு நோக்கினாள் உத்தமசீலி.

''பல்லவபுரத்துக்கு விஜயம் செய்திருக்கும் சளுக்கிய மாமன்னர் வேங்கி இளவரசியாரைச் சந்திப்பதற்காக வரவில்லை; தங்களைப் பார்க்க அவர் இந்த இலவந்திகைப் பள்ளிக்கு வரப் போவதுமில்லை...!''

ஒன்றும் புரியாமல் நின்ற உத்தமசீலி, ஓரடி முன்னால் வந்து அவனைக் கூர்ந்து பார்த்தாள்.

''ஆம், தாயே! என் காதுபடக் கேட்ட செய்திகளைக் கொண்டுதான் இவ்வாறு கூறுகிறேன். தயை கூர்ந்து என்னைத் தவறாகக் கருதி விடாதீர்கள்.''

அவள் மேலும் முன்னால் நகர்ந்து போய் அவனைக் கண்ணிமைக்காமல் நோக்கினாள்.

''வேங்கி மண்ணில் பிறந்து விஷ்ணுவர்த்தனபூமானின் உப்பைத் தின்று வளர்ந்த நான், அவரது அருமைக் குமாரி ஆந்திர இளவரசியாரை உயிரினும் மேலாக மதித்துப் பக்தி செலுத்தி வரும் நான், என்னையறியாமலே ஒரு முறை என் கடமையிலிருந்து வழுவிய குற்றம் புரிந்தவனானாலும், மீண்டும்

அது போன்ற இன்னொரு பெருங் குற்றத்துக்கு ஆளாகி விடக் கூடாதே என்பதனால்தான் இந்த விஷயத்தைத் துணிந்து கூற முன்வந்திருக்கிறேன்!'' என்று தழுதழுத்த குரலில் சொல்லிக் கொண்டே திகிலுடன் சுற்றிலும் திரும்பிப் பார்த்த நாகோதரன் ஏதோ ஓர் ஆவேசத்தால் உந்தப்பட்டவன் போல் சட்டென்று நிமிர்ந்து, ''ஆம், இளவரசி! சளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரால் தாங்களும் தங்கள் தந்தையாரும் நன்றாக ஏமாற்றப்பட்டு விட்டீர்கள், ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள், ஏமாற்றப்படவும் போகிறீர்கள்!'' என்றான். இதைக் கேட்டதும் உத்தமசீலியின் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது.

''சற்று முன் இங்கு வந்து எனக்குச் சவுக்கடித் தண்டனை வழங்கிய இரண ரசிகர் விக்கிரமாதித்தர், அவரது அந்த விருதுப் பெயருக்கேற்ப, என் உடலில் ஏற்படும் இரத்த விளாறு இரணங்களைப் பார்த்து இரசித்துக் கொண்டே தம் அருகில் இருந்த தளபதி வில்வேலியுடன் பேசியவற்றைக் காதுபடக் கேட்டு விட்டுத்தான் இவ்வாறு சொல்கிறேன், அம்மணி! அவர் தம் ராஜீய சுயநலத் திட்டங்களுக்குப் பயன்படுத்திக் கொள்வதற்காகத் தங்களை இந்நாட்டுக்கு வரவழைத்திருக்கிறாரே தவிர, உண்மையில் தங்களின் உயர்ந்த இலட்சியத்தைச் செயல்படுத்த அல்ல!''

மூச்சு முட்டியதால் பேச்சை நிறுத்திய நாகோதரன் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு மேலும் தொடர்ந்து சொன்னான்:

''ஆம், இளவரசி! அன்பையும், அறத்தையும், கொல்லா நோன்பையும் மூலக் கொள்கைகளாகக் கொண்ட சமண சமயம் உலகெலாம் பரவித் தழைக்க வேண்டும் என்பதிலே தங்களுக்கும் தங்கள் தந்தையார் விஷ்ணுவர்த்தனருக்கும் தணியாத வேட்கை. இந்த வேட்கையையே தங்கள் வாழ்க்கை இலட்சியமாகவும் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் சளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரோ இதற்கு முற்றிலும் மாறானவர். சமண சமயத்தின் உயரிய கொள்கைகளில் ஒன்றைக்கூடக் கடைப்பிடித்து ஒழுகாதவர். அவற்றில் சிறிதளவு நம்பிக்கையும் இல்லாதவர். அப்படிக் கொஞ்சமேனும் நம்பிக்கை உள்ளவராயிருந்தால், மண்ணாசையும், பொன்னாசையும், பழி வாங்க வேண்டும் என்ற பகைமை உணர்ச்சியும் கொண்டு அவற்றுக்காகவே ஒரு பயங்கரப் போரையும் நடத்தி, ஆயிரக்கணக்கான கரி பரிகளையும் இலட்சக்கணக்கான மனிதர்களையும் கொன்று குவிக்கத் துணிந்திருப்பாரா? போரைப்பற்றி நினைக்கும் யாரும் சமணராயிருக்க முடியாது. விக்கிரமாதித்தரோ போரைத் தவிர வேறு எதைப் பற்றியுமே சிந்தித்து அறியாதவர். ஆயினும் அவர் தம்மை ஒரு சமணன் என்றே கூறிக் கொள்கிறார். இதற்கு ஒரு வருந்தத்தக்க காரணமும் இருக்கிறது. அணுக்களின் சேர்க்கையால் தோன்றியதே இவ்வுலகம் என்னும் 'அநேகாந்த வாதக்' கொள்கைகொண்ட சமண சமயம், உலகையும் அதில் உள்ள சகல ஜீவராசிகளையும் படைத்துக் காத்து அழிக்கும் சர்வ வல்லமை வாய்ந்த மூலப் பரம்பொருள் ஒன்று உண்டு என்னும் 'ஏகாந்தவாதக்' கொள்கையை ஏற்க மறுப்பதாலேயே அவர் தம்மைச் சமணரென்று கூறிக் கொள்கிறார். தமக்கும் மேலே நம்மை ஆட்டிப் படைக்கும் சக்தி ஒன்று இருக்கிறதென்பதை நம்பினால் அதற்குப் பயந்து நடந்தாக வேண்டும்; அப்படி ஒரு சக்தி இல்லையென்று கொண்டால், எதற்கும் அஞ்சாமல் எத்தகைய நிய காரியங்களையும் செய்யலாம்; மற்றவர்களையும் செய்யத் தூண்டலாம். எனவேதான் அவர் அந்த 'ஏகபொருள் மறுப்புக் கொள்கை' ஒன்றை மட்டும் உறுதியாகப் பிடித்துக் கொண்டு, தாமும் ஒரு



சமணன்தான் என்று தைரியமாகக் கூறிக் கொள்கிறார். ஆனால் மனிதர் செய்யும் ஒவ்வொரு தீவினைக்கும் உரிய சம்பாவனை உண்டு என்றும், அந்தச் சம்பாவனைகளை இப் பிறவியில் மட்டுமல்லாது இனி வரும் பிறவிகளிலும் அநுபவிக்க நேரிடும் என்றும், இப்படித் தீவினைகளைச் செய்து செய்து அவற்றை அநுபவிக்கப் பல பிறவிகள் எடுத்துக் கொண்டே இருந்தால் உயிரின் கட்டை அறுத்து வீடு பேறு அடைய இயலாது என்றும், ஆகவே வாழ்க்கையின் எல்லா மூலைகளிலும் சீலத்தை ஓம்பித் தர்மத்தைக் கடைப்பிடித்துத் தூய நடத்தைகளை மேற்கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்திக் கூறும்

சமண சமயத்தின் தலையாய கொள்கையை ஏனோ அவர் மறந்துவிட்டிருக்கிறார். மறந்து விட்டார் என்றுகூடச் சொல்ல முடியாது; தெரிந்தே அதைத் தள்ளி விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால், உண்மையில் அவர் ஒரு சமணர் அல்லர்; உலகாயதவாதி. உலகம் மட்டுமே உள்ள பொருள், மற்றவையெல்லாம் பொய் எனக் கூறும் 'சார்வாகக் கொள்கை'யில் நம்பிக்கை கொண்டவர். ஆனால் அதைப் பகிரங்க

32. ஆதிய வரலாறு 1.90
- பேராசிரியர் எம். ரத்னசாமி

33. புதிய சீனு 2.25
- டாக்டர் எஸ். சந்திரசேகர்

34. இந்தோனேஷ்யா 2.10

35. பர்மா 1.60

36. ஜப்பான் - அன்றும் இன்றும் 2.25

37. நான் கண்ட திபேத் 2.50

## கலை

38. இந்தியக் கிராமிய நடனங்கள் 2.00

39. தென்னிந்தியக் கிராமிய நடனங்கள் 1.65

40. அமர காதலர் 1.75
- தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

41. கல்லும் சொல்லாதோ கவி „ 1.75

## தத்துவம்

42. வாழ்வும் மதமும் 1.60
- டால்ஸ்டாய்

43. நம்பிக்கையின் மறுமலர்ச்சி 2.10
- டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன்

## பொது

44. பொதுமக்களும் சட்டங்களும் 2.60

45. பொதுமக்களும் பொருளாதாரமும் 1.95
- வி. கே. நரசிம்மன், கே. வாசுதேவன்

46. பொழுதுபோக்கு விளையாட்டுகள் 2.10

47. உல்லாச விளையாட்டுகள் 1.95

48. சீனுவில் இளமைப் பருவம் 2.25

49. யானைக் கூட்டம் 2.10

50. புதுத்தமிழ்க் கவிமலர்கள் (தொகுப்பு) 1.00

51. வெளிப்பள்ளியின் கருத்திறுத்தை 1.95

52. தென்மொழிகளில் பழமொழிகள் 1.95
- டாக்டர் சேதுப்பிள்ளை முதலியோர்

53. துப்பறிதல் - நவீன முறைகள் 1.30
- என். கிருஷ்ணசாமி

45. அரசியல் அறிவு - கேள்வியும் பதிலும் 1.60
- பேராசிரியர் ரத்னசாமி

## சிறுவருக்கு

55. நம் நாட்டு நடனங்கள் 1.80
- மிருணாளினி சாராபாய்

56. நான்கு நண்பர்கள் 1.40
- அழ. வள்ளியப்பா

57. விஷமக் கோபுவின் விசித்திர யாத்திரை 1.75

58. மணி என்ன ? 2.00
- கல்வி கோபாலகிருஷ்ணன்

59. மிருகங்கள் நடத்தும் சர்க்கஸ் 1.50

60. கடற்கரையில் மாலை நேரம் 1.50

---

ரூபாய் 50 செலுத்தினால் 62 ரூபாய் மதிப்புள்ள புத்தகங்கள் தரப்படும். அதற்குமேல் வாங்கினால், இதே விகிதாசாரப்படி சலுகை கிடைக்கும்

**அடியிலுள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து கீழ்க்கண்ட எங்கள் விநியோகஸ்தர்களுக்கு அல்லது எங்களுக்கு அனுப்புங்கள்**

- எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி ஜங்ஷன் (திருநெல்வேலி, ராமநாதபுரம், கன்னியாகுமரி, கோவை, சேலம், நீலகிரி மாவட்டங்களுக்கு மட்டும்)
- பழனியப்பா பிரதர்ஸ், தெப்பக்குளம், திருச்சி (திருச்சி, தஞ்சை, மதுரை மாவட்டங்களுக்கு மட்டும்)
- பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை - 1 (செங்கற்பட்டு, தென்ஆற்காடு, வடஆற்காடு மாவட்டங்களுக்கு மட்டும்)
- தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், 25, ஸ்டெர்லிங் ரோடு, சென்னை - 34

## பொங்கல் புத்தகப் பரிசு

அன்புடையீர்,

மேலேயுள்ள புத்தக எண்களில் எனக்கு வேண்டியவற்றைச் சுற்றி வட்டமிட்டுக் காட்டியிருக்கிறேன். அந்த எண்களுக்குரிய புத்தகங்களைக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு வி. பி. பி. மூலம் அனுப்புங்கள்.

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |
| 31 | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | 38 | 39 | 40 | 41 | 42 | 43 | 44 | 45 |
| 46 | 47 | 48 | 49 | 50 | 51 | 52 | 53 | 54 | 55 | 56 | 57 | 58 | 59 | 60 |

பெயர்.........................................................

தபால் விலாசம் .........................................................
.........................................................

.........................................................
கையெழுத்து

தேதி.........................................................

R. P. S.

**'ரொம்ப நல்லது'**

போட்டோ எடுத்துக் கொள்பவர்: படம் நன்றாய்த்தான் எடுத்திருக்கிறீர்கள். ஆனால், என்னை இந்தப் படத்தில் பார்த்தால், பத்து வயது அதிகம் மதிக்கலாம் போலிருக்கிறது. அதுதான் மனசுக்கு என்னவோபோலிருக்கிறது.

போட்டோகிராபர்: வருத்தப்படாதீர்கள், ஸார்! ரொம்ப நல்லதாய்ப் போய் விட்டது! இன்னும் பத்து வருஷங்கள் கழித்து நீங்கள் போட்டோ எடுத்துக் கொள்ள வேண்டிய சிரமம் இல்லை யல்லவா?

மாகச் சொல்ல அஞ்சித் தமது ராஜீய நலன்களுக்காகத் தம்மைச் சமணர் என்றே கூறிக் கொள்கிறார். இப்படிப் பட்ட போலிச் சமணவாதியை நம்பித்தான் வேங்கி இளவரசியார் இங்கு வந்திருக்கிறார்.''

நாகோதரனைப் பரபரப்புடன் உற்றுப் பார்த்தாள் ஆந்திர இளவரசி. அவனது சொற்கள் சாட்டியைப் போல் அவளைத் தாக்கின.

தீக்குண்டத்தில் வீசியெறியப்பட்ட பூமாலை போல் நெளிந்து கொண்டாள் உத்தமசீலி. நாகோதரனோ உணர்ச்சித் துடிப்பேறிய குரலில் மேலும் பொரியலானான்: ''கேளுங்கள், இளவரசி! இந்தத் தமிழ் நாட்டில் ஒரு காலத்திலே ஓங்கிப் பரவி உன்னத நிலையிலிருந்து வந்த சமண மதம் இப்போது வேகமாக ஒடுங்கி வருவதைக் கவலையுடன் கவனித்த தாங்களும் தங்கள் தந்தையாரும், அந்த நிலைமையைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று பெரிதும் விரும்பினீர்கள். எவ்வித அரசியல் நோக்கமுமின்றித் தார்மீக அடிப்படையிலேயே அந்தப் பணியை ஆற்ற வேண்டும் என்று விழைந்தீர்கள். இவ் விருப்பத்தைத் தெரிந்து கொண்ட விக்கிரமாதித்தரோ அதைத் தம் அரசியல் அதிகார விஸ்தரிப்புக்குப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டு அதற்காகவே தங்களை இங்கு வரவழைத்திருக்கிறார். அப்படி அவர் போட்டிருக்கும் அந்தத் திட்டம்தான் என்ன என்று தாங்கள் கேட்கலாம். கீரியைச் சுற்றிக்கொண்ட பாம்பு அதை விழுங்கவும் முடியாமல் விட்டு விடவும் தைரியமில்லாமல் விழிப்பதைப்போல, இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் விக்கிரமாதித்தர் தமது ஆட்சியதிகாரத்தை இங்கு நிலைநாட்டிக் கொள்ள வழி தெரியாமல் அதை விட்டு விட்டு வெளியேறவும் மனமில்லாமல் இப்போது தவித்துக் கொண்டிருக்கிறார். இந்த நிலைமைக்குரிய காரணங்களை ஆராய்ந்து பார்த்தபோது அவருக்கு இரண்டு முக்கிய உண்மைகள் புலனாயின. அவை இந்நாட்டு மக்களின் தேசபக்தியும் தெய்வபக்தியும்தான். தமிழர்களது தேசபக்தி மிக ஆழமானது. அதைவிட ஆழமானது அவர்களின் தெய்வ பக்தி. அவர்களுடைய தாய்ச் சமயமான சைவ சமயம் இடைக்காலத்தில் சிறிதே தாழ்வுற்று ஒளி குன்றியிருந்தாலும், கடந்த இரண்டு தலைமுறைகளாக அது புத்துயிரும் புதுப் பொலிவும் பெற்று வீறுடன் வளர்ந்து வருகிறது. சைவ-வைணவ சமயங்களைச் சார்ந்த மக்களே இங்கு பெருவாரியாக உள்ளனர்; சமண — பௌத்த சமயச் சார்புடையவர்கள் மிகவும் குறைவு. எனவேதான் சமணரான சளுக்கிய விக்கிரமாதித்தர் தம் ஆட்சியதிகாரத்தை இங்கு நிலைநாட்டிக் கொள்ள முடியாமல் தவிக்கிறார். பல்லவ நாட்டைக் கைப்பற்றிப் பல மாதங்களாகியும் அவரால் நிலையான அரசாங்கத்தைச் செயல்படுத்த முடியாமல் திணறிக் கொண்டிருப்பதற்குக் காரணம் இதுவே. எத்தனை காலத்துக்குத் தமது படைவீரர்களைக் கொண்டு மக்களை அடக்கி வைத்திருக்க முடியும்? இந்த இக்கட்டான நிலைமையைச் சமாளிக்க அவரது நிய மனத்தில் ஒரு திட்டம் உருவாகியது. அன்னையே உயிராகக் கொண்ட சமண சமயத்தைத் தமது ஆட்சியதிகார உறுதிப்பாட்டுக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்னும் திட்டம்தான் அது. சைவ — வைணவ சமயத்தைச் சார்ந்த தமிழர்களைச் சமணர்களாக மாற்றி விட்டால் தமது ஆட்சியை அவர்கள் எளிதில் ஏற்றுக் கொள்வார்கள் என்பது அவருடைய தீர்மானம். தேசப் பற்றைவிடச் சமயப் பற்று வலிமை வாய்ந்தது என்பதாலேயே அவர் இந்த முடிவுக்கு வந்தார். ஆனால், அரசியல் நோக்கம் கொண்ட இம்முடிவை இங்குள்ள தமிழ்ச் சமணர்கள் ஏற்று ஒத்துழைப்பு நல்க மாட்டார்கள் என்றும் அவருக்குப் பட்டு விட்டது. ஏனென்றால், தமிழ்ச் சமணர்கள் மிக உயர்வானவர்கள்; பேரறிவாளர்கள்; தமது சமய நெறிகளுக்கேற்பச் சீரிய வாழ்க்கையை மேற்கொண்டவர்கள்; தேசப் பற்றும் மொழிப் பற்றும் மிக்கவர்கள். எனவேதான், வேங்கி இளவரசியான

தங்களை முன்னிறுத்தித் திரை மறைவிலே தாம் இருந்துகொண்டு தமது திட்டத்தை ஈடேற்றிக் கொள்ள அவர் முடிவு செய்தார்.''

சட்டென்று பேச்சை நிறுத்திய நாகோதரன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்து விட்டுத் தணிந்த குரலில் சொன்னான்: ''ஆனால், இளவரசி! தங்கள் நல்வினையின் பயனாகவோ என்னவோ, விக்கிரமாதித்தர் அந்தத் திட்டத்தை இப்போது மாற்றிக் கொண்டு விட்டார் என்றே தோன்றுகிறது!''

### அத்தியாயம் முப்பத்தெட்டு

## இலட்சியம் சிதைந்தது!

நிலைகுலைந்து நின்ற உத்தமசீலி, ''என்ன! மாற்றிக் கொண்டு விட்டாரா?'' என்று துடிப்புடன் கேட்டாள்.

''ஆம், தாயே! தங்கள் மீதோ அல்லது அந்தத் திட்டத்தின் மீதோ அவருக்கு அவநம்பிக்கை ஏற்பட்டுவிட்டிருக்க வேண்டும். அதனால்தான் அவர் வேறொரு புதிய முயற்சியில் இப்போது முனைந்திருக்கிறார்'' என்றான் நாகோதரன் கம்மிய குரலில்.

''அது என்ன புது முயற்சி?''

''போர்! போரைத் தவிர அவர் மனத்தில் வேறெந்த எண்ணமும் தோன்றுவதில்லையே!''

''போரா? யார் மீது, எந்த நாட்டின்மேல் போர் தொடுக்கப்போகிறார்?''

''பல்லவ நாட்டின் எல்லையிலுள்ள பாண்டிய நாட்டின் மீது படையெடுக்கத் திட்டமிட்டிருக்கிறார், இளவரசி!''

''இந்தத் திடீர்ப் படையெடுப்புத் திட்டத்துக்குக் காரணம்?''

''சாம்ராஜ்ய விஸ்தரிப்பு ஆசையைத் தவிர வேறென்ன கூற முடியும், தாயே? போர்க் குணம் படைத்தவர்கள் போரில்லாமல் வாழ மாட்டார்கள். அமைதி என்பது அவர்களுக்கு ஒரு நரக வேதனை. இது ஒரு புறமிருந்தாலும், கைப்பற்றிய நாட்டை உறுதிப்படுத்திக் கொண்டு ஆளத் தெரியாமல் திணறுவதைத் தமது சகாக்களும் படைவீரர்களும் தெரிந்து கொண்டு விட்டால் அவர்கள் கட்டு மீறிக் கலகம் விளைவித்துத் தம்மையே கபளீகரம் செய்து விடுவார்கள் என்று அஞ்சியே, அவர்களுடைய கவனத்தை வேறு திசையில் திருப்பும் பொருட்டுப் பாண்டிய நாட்டின் மீது படையெடுக்க அவர் திட்டமிட்டிருக்கலாம்.''

''இதனால்தான் சளுக்கிய மன்னர் என்னை வந்து சந்திக்கவில்லையோ?''

''ஆம், இளவரசி! வேங்கி மன்னர் விஷ்ணுவர்த்தனர் தங்கள் மூலம் கொடுத்தனுப்பிய பட்டோலையை வாங்கிப் படித்துப் பார்க்கவும் அவருக்கு விருப்பமில்லை. ஏனென்றால், 'தமிழ் நாட்டிலே சமண சமயப் பிரசாரம் செய்வதற்காகத் தமது பொக்கிஷம் முழுவதையும் திறந்து வைக்கத் தயார்' என்று வேங்கி மன்னர் அவ்வோலையில் தெரிவித்திருக்கும் சேதி, விக்கிரமாதித்தருக்கு இப்போது தேவையற்றதாகி விட்டது. அதனால்தான் தங்களை உறையூருக்கு வரவிடாமல், இந்தப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியிலேயே நிறுத்தி வைக்கும்படி வில்வேலிக்குக் கட்டளை அனுப்பி விட்டார் அவர்.''

''அப்படியானால் விக்கிரமாதித்தர் ஏன் இங்கு விஜயம் செய்திருக்கிறார்?''

''பாண்டிய நாட்டின் மீது படையெடுப்பது சம்பந்தமாக, தளபதி வில்வேலியுடனும் மற்ற தானைத் தலைவர்களுடனும் மந்திராலோசனை நடத்த வேண்டும் என்பது முதல் காரணம்; இன்னொன்று, பழையாறைச் சோழரைச் சந்திக்க வேண்டும் என்பது.''

வெலவெலத்து நின்ற உத்தமசீலி இதைக் கேட்டு மேலும் விதிர்ப்படைந்தவளாய் நிமிர்ந்து, ''அவரை ஏன் இவர் சந்திக்க வேண்டும்?'' என்று கேட்டாள்.

''புனிதமான பிண்டி மரத்திலேயும் புல்லுருவி முளைப்பதில்லையா, அம்மணி? பாம்புகள் இல்லாத புற்றையும் துரோகிகள் இல்லாத நாட்டையும் காண்பது அரிது! இத்தனை காலமாகப் பல்லவ மன்னருடன் உறவாடி வந்த பழையாறைச் சோழர் இப்போது சளுக்கிய மன்னருடன் சம்பந்தி முறை கொள்ள வந்திருக்கிறார் — அரசியலில் மட்டுமல்ல; குடும்ப உறவிலும்கூட!''

''புரியும்படி சொல், நாகோதரா?''

''சளுக்கிய மன்னருக்குத் தம் ராஜீய ஒத்துழைப்பைத் தருவதுமின்றி, தமது அருமைக் குமாரி இளங்கோப்பிச்சி என்பவளையும் சளுக்கிய இளவரசர் விநயாதித்தனுக்குத் திருமணம் செய்து தரச் சம்மதம் அளித்திருக்கிறாராம் அந்தப் பழையாறைச் சிற்றரசர்!''

''அப்படியா?'' என்று அடைத்த குரலில் கேட்ட உத்தமசீலியின் மனக் கண்ணிலே, சோழ இளவரசி இளங்கோப்பிச்சியின் பரிதாப உருவம் ஒரு விநாடி தோன்றி மறைந்தது.

''இளவரசி! இவ்வளவு நேரம் நான் சொன்னதெல்லாவற்றையும்விட இனிச் சொல்லப் போவதுதான் மிக முக்கியமானது. தங்களையும், தங்கள் தந்தையார் விஷ்ணுவர்த்தனரையும், எங்களது ஆந்திர நாட்டையும் பற்றிய விஷயம் அது'' என்ற பீடிகையுடன் பேச்சைத் தொடர்ந்த நாகோதரன், தன்னை மீறிய ஆத்திரத்தோடு இவ்வாறு கூறினான்: ''ஆமாம், தாயே! முயலைக் கடித்து, மானைக் கடித்து, கடைசியில் மனிதனையே கடிக்க வரும் ஒநாயைப் போல் விக்கிரமாதித்தரின் விஷப் பார்வை நம்முடைய ஆந்திர நாட்டின் மீதும் இப்போது திரும்பியிருக்கிறது. காலஞ் சென்ற மாமன்னர் புலிகேசி, மகேந்திர பல்லவனிடமிருந்து கைப்பற்றிய ஆந்திர நாட்டைத் தமது தம்பியான குப்ஜ விஷ்ணுவர்த்தனரின் ஆட்சிப் பொறுப்பில் ஒப்படைத்தார். குப்ஜ விஷ்ணுவர்த்தனருக்குப் பின் அவரது மைந்தரான தங்கள் தந்தையார் இப்போது ஆந்திர நாட்டை ஆண்டு வருகிறார். சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மேலாதிக்கத்திலே ஆந்திர நாடு இருந்தாலும் அது ஒரு தனியரசு போலவே இயங்கி வருகிறது. அப்படித் தன்னிச்சையாக இயங்குவது விக்கிரமாதித்தருக்கு ஏனோ பிடிக்கவில்லை. தம்முடைய ஆதிபத்தியத்தின் கீழுள்ள ஒரு நாட்டைத் தனியரசு அந்தஸ்தில் இயங்க விட்டால், என்றைக்கிருந்தாலும் அது தம்மை விட்டுத் திமிறிப் போய்விட இயலும் என்றும், அவ்வாறு போய் விட்டால் தமது சாம்ராஜ்யத்தையே அது பதம் பார்க்க ஆரம்பித்து விடும் என்றும் அவர் நினைக்கிறார் போலும். அதனால்தானோ என்னவோ, வெகு விரைவில் ஆந்திர நாட்டின் ஆட்சியுரிமையை விஷ்ணுவர்த்தனரிடமிருந்து பறித்துத் தமது சளுக்கிய சாம்ராஜ்யத்தின் நேர்ப் பார்வையில் இணைத்து வைத்துக் கொள்ளத் திட்டமிட்டிருக்கிறார். இந்தக் கருத்தை அவர் மனத்தில் வைத்திருப்பதால்தான், பல்லவ நாட்டின் மீது படையெடுத்து வந்தபோதுகூட, ஆந்திர மன்னர் விஷ்ணுவர்த்தனரிடம் படை உதவியோ, பொருள் உதவியோ கோரவில்லை. அப்படிக் கோரினால், கைப்பற்றிய நாட்டிலிருந்து அவருக்கும் பங்கு கொடுக்கும்படியாகுமே என்ற உலோப எண்ணம் ஒருபுற மிருந்தாலும், பின்னால் எடுக்கப் போகும் இந்த அநியாய நடவடிக்கையை உத்தேசித்தே அவர் அத்தகைய உதவிகளை ஆந்திர மன்னரிடம் கோரவில்லை.''

நாகோதரன் சொன்ன இந்தத் திடுக்குறும் சேதிகளைக் கேட்டுத் திக்கு முக்காடி விட்டாள் உத்தமசீலி. வானமும் பூமியும் தலைகீழாகப் புரண்டு தானும் அவற்றுடன் உருண்டு போவது போன்ற பயங்கர உணர்ச்சிக்கு உள்ளான அவள் மனத்திலே சட்டென்று ஓர் எண்ணம் தோன்றியது: 'சிவிகை தூக்கியான இவனுக்குச் சளுக்கிய மன்னர் கடும் தண்டனை விதித்ததால் அவர் மீது குரோதம் கொண்டு இப்படியெல்லாம் பொய்யான சேதிகளைச் சொல்லி என் மனத்தைக் கலக்குகிறானோ?'-சந்தேகத்துடன் அவனை வெறித்துப் பார்த்த அவள், வெகு நாசூக்காக ஒரு கேள்வியைக் கேட்டாள்: ''அது சரி, நாகோதரா! விக்கிரமாதித்தரும் வில்வேலியும் இங்கு வந்து பேசிய இத்தனை விஷயங்களையும் கேட்டு வைத்திருந்து என்னிடம் சொல்லும் நீ, ஒரு முக்கியமான சேதியைச் சொல்லாமல் விட்டு விட்டாயே! அது என்ன என்று யோசித்துச் சொல், பார்க்கலாம்?''

நாகோதரன் கொஞ்சமும் யோசிக்காமல் பளிச்சென்று பதில் சொன்னான்: ''ஆமாம், தாயே! இன்னும் ஒரே ஒரு விஷயத்தைத்தான் நான் தங்களிடம் கூறவில்லை. சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகள் தங்களைக் காணும் பொருட்டு இங்கு வருவது பற்றிய விஷயம் அது. ஆனால்... ஆனால்.... அந்த விஷயமாக அவர்கள் பேசத் தொடங்கிய போது, அதுவரையில் என் உடலிலே சாடிய சவுக்கடிகளைப் பொறுத்துக் கொண்டிருந்த நான், அதற்கு மேலும் பொறுக்க முடியாமல் பிரக்ஞை இழந்து விட்டேன். அதனால் அவர்கள் என்ன பேசினார்கள் என்பது எனக்குத் தெரியாமலே போய் விட்டது.''

மின்னலால் தாக்குண்டவள் போல் பதறித் துடித்து விட்டாள் உத்தமசீலி. ஏனென்றால், அவனைப் பரிசோதிக்க அவள் எதை நினைத்துக் கேட்டாளோ, அந்த விஷயத்தையே அவன் சரியாகச் சொல்லி விட்டான்!

''ஐயோ! மாபெரும் ஞான சிரேஷ்டரான அகளங்க அடிகள் இந்த அரசியல் சூதாடிகளை நம்பி இங்கு வரப் போகிறாரே! இவர்களால் அந்த முனி புங்கவரின் தூய வாழ்க்கைக்கு ஏதேனும் களங்கம் ஏற்பட்டால் அந்தப் பாவம் என்னையல்லவா சேரும்! இத்தனை பெரிய தீவினையை நான் எப்படித் தடுப்பேன்!'' என்று வாய்விட்டுப் புலம்பி அழுத உத்தமசீலி, ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவளாய் நாகோதரனைத் தன்னுடன் வரச் சொல்லிவிட்டு இலவந்திகைப் பள்ளியை நோக்கி விரைந்தாள். **(தொடரும்)**




## மணிமேகலையின் காலம்

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய மணிமேகலை நூலின் காலத்தைப் பற்றிய பொருத்தமான அகச் சான்றுகளோடு ஆராயும் புத்தகம் இது. பதினொரு தலைப்புகளில் இந்த ஆராய்ச்சியைச் செவ்வனே செய்திருக்கிறார் ஆசிரியர். மணிமேகலைக் காப்பியத்தைப் பற்றியும், ஆசிரியர் சாத்தனாரைப் பற்றியும் உள்ள பல வேறுபட்ட கருத்துக்களையும் நூல் ஆராய்கிறது. மணிமேகலைக் காப்பியம், கி. மு. மூன்றாம் நூற்றாண்டுக்கும் பிற்பட்டது என்ற கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியத்துக்கும் சங்க இலக்கியத்துக்கும் மணிமேகலை பிற்பட்டது என்பது இலக்கண விதிகளாலும் சங்க நூல் வழக்குகளாலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. சங்கப் பாக்களுக்கும் மணிமேகலைக்கும் அமைப்பு முறைகளில் உள்ள வேற்றுமைகளும் எடுத்து விளக்கப் பட்டிருக்கின்றன. தொகை நூற் பாடல்களில் காணப்பெறும் சாத்தனார் பெயரும், மணி மேகலை ஆசிரியராகிய சாத்தனார் பெயரும் ஒன்று, வேறு என்பதும் ஆராயப் பட்டிருக்கிறது. மணிமேகலை திருக்குறளுக்குப் பிற்பட்டதென்றும் கூறப் பட்டுள்ளது. இறுதிப் பகுதியில் மணிமேகலைக் காப்பியத்தின் காலத்தைப் பற்றிய பல்வேறு கருத்துக்களும் சீர்தூக்கித் திறனாய்வு செய்யப் பெற்றிருக்கின்றன. கால ஆராய்ச்சித் துறையில் ஈடுபாடுள்ளவர்களுக்கு விருப்பமான நூல் என்று கூறலாம்.

ஆசிரியர்: சோ. ந. கந்தசாமி, எம். ஏ., வெளியீடு: தொல்காப்பியர் நூலகம், 202, ஜானி ஜான் கான் தெரு, சென்னை–14; பரிசுப் பதிப்பு விலை ரூ. 2.25. சாதாரணப் பதிப்பு ரூ. 1.75.

## நானிலய உலகம்

குழந்தைச் சமுதாயம் வளரவும், வாழவும் கவிஞர் கனகசபை அவர்களின் அற்புதக் கவிதைகள் பல கொண்ட நற் கவிதைத் தொகுதி இது. குழந்தைக் கவிஞரின் அழகிய முன்னுரையும் நூலுக்கு அணி செய்கிறது. நாற்பத்தாறு கவிதைப் பகுதிகள் நூலில் இணைக்கப்பட்டுள்ளன. பசு, சிரிப்பு, சுயம் சிறுவனும், வானொலி, பேனா, தஞ்சாவூர்ப் பொம்மை போன்ற கவிதைகள் சிறப்பாக அமைந்திருக்கின்றன.

ஆசிரியர்: கவிஞர் கனகசபை; வெளியீடு: அமுதுப் பதிப்பகம், காரைக்குடி. விலை: ரூ. 1.

## மனோன்மணீயம் – திறனாய்வு

தமிழ் மறுமலர்ச்சி நாடக இலக்கியத்தில் முதன்மையான இடம் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் மனோன்மணீயத்துக்கு உண்டு என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர். காவிய உருவில் தோன்றிய முதல் தமிழ் நாடகமாக மனோன்மணீயத்தைப் பற்றிக் கூறும்போது அதன் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் புலமையைப் பற்றியும் நினைக்க வேண்டியிருக்கிறது. மேல்நாட்டு நாடக இலக்கியங்களில் ஆழ்ந்த பயிற்சியும், தத்துவ ஞானமும் உள்ள பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் அவற்றின் தகுதிகளோடு தமிழ் தழுவிய சாயலில் இந்த நாடகத்தை அமைத்திருக்கிறார். கனவும் காதலும், நாடக அமைப்பு, பேராசிரியர் நடை, முன்னோர் வழியில் பேராசிரியர், உவமைக் களஞ்சியம் ஆகிய பல தலைப்புக்களில் மனோன்மணீயத்தைத் திறனாய்வு செய்திருக்கிறார் நூலாசிரியர்.

ஆசிரியர்: மு. மாணிக்கம், எம். ஏ. டிப் (பிரெஞ்சு) கிடைக்குமிடம்: கே. எம். கருப்பணன், கருங்காட்டுப் புதூர், வடுகபாளையம் போஸ்ட், (வழி) அவிநாசி, கோவை மாவட்டம். விலை: ரூ. 1.00

## பிற்காலச் சோழர் சரித்திரம்

திருவாளர் சதாசிவபண்டாரத்தாரவர்கள் சோழ அரச பரம்பரையைப் பற்றி விரிவான வரலாற்று நூல்கள் பலவற்றை உருவாக்கித் தந்திருப்பதை யாவரும் அறிவர். மூன்றாம் பகுதியாக வெளிவந்துள்ள 'பிற்காலச் சோழ சரித்திரம்' என்னும் இந்நூல் 'சோழர் அரசியல்' பற்றி விவரிக்கிறது. கிராம ஆட்சி, அரசிறையும் பிற வரிகளும், நில அளவு, நில உரிமை, நீர்வளமும் நீர்ப்பாசனமும்,

"நீ தண்ணீரைக் கண்டால் பயந்து நடுங்குகிறாயே! உன் தம்பி மட்டும் மீன் குஞ்சு மாதிரி நீந்துகிறானே!"

"அவன் குழந்தையாயிருந்த போதே நிறைய 'காட்லிவர் ஆயில்' சாப்பிட்டிருக்கிறான் ஸார்!"




"இட்டிலியா இது? சேச்சே! துளிக்கூட நன்றா இல்லே!!"

"ஆமாம்! நீங்க மாவு அரைச்சுக் கொடுத்த லட்சணம் இப்படி யிருக்கு! நான் என்ன செய்வேன்?!!"

---

பொது மக்களும் சமூக வாழ்க்கையும், போன்ற பல தலைப்புக்களில் இச் சரித்திர நூல் சிறப்புற அமைந்திருக்கிறது. நூலின் பிற்சேர்க்கையாகச் சில கல்வெட்டுகளும் இணைக்கப்பட்டுள்ளன. இறுதியில் பயன் படத் தக்க பொருட் குறிப்பு அகராதியும் உள்ளது. வரலாற்று இலக்கியத் துறைக்குப் பெரிதும் உதவி செய்யக் கூடிய நூல் இது.

ஆசிரியர்: டி. வி. சதாசிவப் பண்டாரத்தார். வெளியீடு: அண்ணாமலை பல்கலைக் கழகம் அண்ணாமலை நகர். விலை: குறிக்கப்பெறவில்லை.

## திவ்யப் பிரபந்த அகராதி

சென்னை அரசாங்கக் கையெழுத்துச் சுவடி நிலையத்திலிருக்கும் 1464, 1465 ஆகிய ஏடுகள் இரண்டையும் ஒன்றாக இணைத்துப் புத்தக வடிவில் இன்று வெளிப்படுத்தியிருக்கிறார்கள். இவற்றைக் குறிக்கும் பெயராக இந்த ஏட்டுச் சுவடிகளில் காணப்படும் 'குறியீடு' தமிழகராதி என்று பொதுப் படையாக இருந்தாலும் இவற்றிலே பொருள் விளக்கம் பெறும் சொற்கள் பெரும்பாலும் திவ்யப் பிரபந்தங்களில் வழங்குகிற சொற்களாயிருப்பதால் இப் பெயரை வழங்கி வெளியிட்டிருக்கிறார்கள். சென்னை அரசாங்கப் பழஞ் சுவடி நிலையத்தார் வெளியிடும் சிறந்த தமிழ் நூல்களுக்கு எல்லாம் கூட ஆங்கிலத்தில் முன்னுரை எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. திவ்யப் பிரபந்தச் சொற்களும், ஆச்சார்ய பரம்பரையாகவும், குரு பரம்பரையாகவும், வழங்கி வரும் சம்பிரதாய வழக்குகளுக்கும் தெளிந்த விளக்கமாக இந்த அகராதி அமைந்துள்ளது. 'அடைகொடு பாழ் போக்குகை' 'ஆடுகொளன்' 'ஆரோதமடித்தல்' உள்வால் வேண்டுதல் 'ஒருமடை செய்தல்' போன்ற சொல் வழக்குகளைப் புரிந்து கொள்ளப் பெரிதும் பயன்படுகிறது இந்த நூல்.

பதிப்பாசிரியர்: திருமலை நல்லான் ராமகிருஷ்ணய்யங்கார், வெளியீடு: சென்னை அரசாங்கப் பழஞ் சுவடிப் பதிப்புத் துறையினர், சென்னை. விலை: ரூ. 4.75.

## பெண்களும் குடும்பக் கலையும்

அந்தக் காலத்தில் பெண்களுக்குக் கல்வியறிவு குறைவு என்று குறை கூறுவோர் உண்டு. ஆனால் 'ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே' என்னும் பழமொழி அனுபவபூர்வமாக எழுந்தது என்பதை யாவரும் அறிவர். கல்வியறிவு குறைந்திருந்ததாகக் கூறப்படும் காலத்திலும் கூடப் பெண்கள் குடும்பத்தை நிர்வகிக்க நன்கு அறிந்திருந்தார்கள். பெண்களுக்குத் தெரிந்த விஷயத்தையே பெண்களுக்குப் புரியும்படியாகக் கூறி, மாறி வரும் உலகத்துக்கேற்ப நடந்து கொள்ள வேண்டிய முறைகளையும், குடும்பம் நடத்துவதற்கு அத்தியாவசியமான பொருள்கள் என்ன என்ன தேவை, வீட்டை எப்படி எப்படி அழகுற வைத்துக் கொள்ள வேண்டும் என்பவை அழகுறக் கூறப்பட்டிருக்கின்றன இந்த நூலில்.

ஆசிரியை: எஸ். கல்யாணி, பிரசுரம்: இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை — 4; விலை: ரூ. 3.00.

## தமிழ் முழக்கம்

மாணவர்களுக்காக எழுதப் பட்டுள்ள துணைப் பாட நூலை இலக்கிய நயம் மிக்கதாகச் செய்திருக்கிறார் ஆசிரியர். கல்வியும் வாழ்வும், தமிழ் வளம், குறள் நெறி, புறநானூற்றுச் செய்திகள், சொல்லும் ஆட்சியும், கற்றலும் நிற்றலும், இலக்கியச் சுவை ஆகிய இக்கட்டுரைகளின் தொகுதி மாணவருலகுக்குப் பயன்படும் என்று நம்பலாம்.

ஆசிரியர்: புலவர் மா. அப்பாவு, வெளியீடு: பழனியப்பா பிரதர்ஸ், சென்னை — 5 திருச்சி — 2; விலை ரூ. 1.25.

## சிவதாண்டவ ஸ்தோத்திரம்

பரம சாம்பவனாகிய ராவணேசுவரன் ஈசுவரனைக் குறித்துச் செய்த சிவதாண்டவ ஸ்தோத்திரத்தின் சொல்லமைப்பு அரக்க வேந்தனுக்குரிய படாடோபமும், ஈசனது நடனத்தின் ராஜ கம்பீரமும் ஒருங்கே பொருந்தியதாகும். இந்த அற்புதமான துதிக்கு எளிய, அழகிய தமிழில் பதவுரையும், பொழிப்புரையும் தந்திருக்கிறார் ஆசிரியர். சுலோகங்கள் கிரந்த லிபி, தமிழ் எழுத்து ஆகிய இரண்டிலும் கொடுக்கப்பட்டுள்ளன.

உரை ஆசிரியர்: பி. தியாகராஜ ஐயர்; வெளியீடுபவர்: இ. கு. பூர்ணானந்தேசுவரக் குருக்கள், கந்தசாமிக் கோயில் வில்லூன்றி, திரிகோணமலை; விலை: ரூ. 75 சதம்.

---

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon